# என் ஆசிரியப்பிரான்

(உ.வே.சா.அவர்களின் என் சரித்திரம் நூலின் தொடர்ச்சி)



வாசீக கலாநிதி

கி.வா.ஜகந்நாதன்

டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம்
2, அருண்டேல் கடற்கரைச் சாலை, பெசன்ட் நகர்,
சென்னை -600 090. தொலைபேசி:044-2491 1697
மின்னஞ்சல்: druvslibrary@gmail.com

வெளியீட்டு எண்: 282

பிரதிகள்: 500

முதற்பதிப்பு - 1983
இரண்டாம் பதிப்பு - 2021

பக்கங்கள் : 236

**விலை ரூ.200**

நிதியுதவி:

திருமதி. நிறைமதி சண்முகவேலாயுதம், சென்னை-29 மற்றும்
ருக்மணி பாலசூரியன் பவுன்டேஷன், கழிப்பத்தூர்.

அச்சிட்டோர்:

ஆர்.என்.ஆர். பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்
8, தாண்டவராயன் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை – 5
044 – 2844 7071, 2844 1856
rnrprintersch5@gmail.com

65/5

# பதிப்புரை

பனைதேடி ஓலையினைத் தேடிப் பண்டைப்
பாவலர்கள் தமிழ்நூலை எழுதி வைத்தார்
வினைதேடி யடைந்ததனால் அவற்றை யெல்லாம்
விறகாக எரித்தார்கள், ஆற்றி லிட்டார்
மனைதேடி வந்தசெல்லின் வாயிற் பட்டு
மண்ணாகி மாசாகி மடிந்த தந்தோ
அனைதேடிக் குழந்தையைக்கண் டின்பா லூட்டும்
அதுவேபோல் நீபிறந்து பாதுகாத்தாய்.

என்று 'தமிழளித்த தயாபரர்' கவிதையில் தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையர் பிறந்து தமிழைக்காத்ததைக் கி.வா.ஜகந்நாதன் போற்றுகிறார். இவர் தமிழ் இதழாளர், கவிஞர், எழுத்தாளர் மற்றும் நாட்டுப்புறவியலாளர், சமயச் சொற்பொழிவாளர் எனப் பன்முக ஆளுமை கொண்டவராகத் திகழ்ந்துள்ளார். 'கலைமகள்' என்ற இலக்கிய இதழை நடத்திப் பல புதிய படைப்பாளிகளை அறிமுகப்படுத்தியுள்ளார்.

உ.வே.சா.அவர்கள் சிதம்பரம் மீனாட்சி தமிழ்க்கல்லூரி முதல்வராக இருந்த காலத்தில் கி.வா.ஜகந்நாதன் 1927இல் முதல்முதலாகச் சந்தித்துள்ளார். பின்னர் மாணவராகச் சேர்ந்து அந்தாதி, கோவை, உலா, பிள்ளைத்தமிழ், புராணங்கள் முதலியவற்றைப் பாடம் கேட்டுள்ளார்.

தனது மாணவர் கி.வா.ஜகந்நாதையர் எழுதிய தமிழ்க்காப்பியங்கள்: இலக்கணமும் இலக்கியமும் எனும் நூலுக்கு அணிந்துரை வழங்கிய உ.வே. சாமிநாதையர் "ஸ்ரீவித்வான் கி.வா.ஜகந்நாதையர், சென்னை ஸர்வகலா சாலையில் ஆராய்ச்சி மாணவராக இருந்த காலத்தில் அவருடைய வேலையைக் கவனிக்கும் பொறுப்பு எனக்கு இருந்தது. அவருடைய பேருழைப்பின் பயனாக வெளிவந்துள்ள 'தமிழ்க் காப்பியங்கள்' என்னும் இக்கட்டுரை பல துறைகளில் சிறப்புற்று விளங்குகின்றது. அவ்வப்போது விஷயங்களைக் கேட்டுவந்த எனக்கு எல்லாவற்றையும் ஒருங்கே இவ்வடிவத்திற் பார்க்கையில் மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது. வடமொழி யலங்கார சாஸ்திரங்களிலும் ஆங்கில நூல்களிலும் உள்ள அருமையான விஷயங்கள் இந்நூலில் ஆங்காங்கு ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளன. தொல்காப்பியம், யாப்பருங்கலவிருத்தி, வீரசோழியம் முதலியன அனேக நூல்களில் காப்பிய இலக்கணங்களைப்பற்றி ஒவ்வொரிடத்தில் காணப்படும் விஷயங்களையெல்லாம் நன்காராய்ந்து ஒழுங்கு படுத்தி இக்கட்டுரையில் தொகுத்தமைத்திருப்பது புலவர் பெருமக்களால் மிகவும் பாராட்டத்தக்கது. இப்புத்தகத்தைப் படித்துப் பார்த்தால், ஜகந்நாதையருடைய பலதிறப்பட்ட பேராற்றலும், நூலாராய்ச்சி வன்மையும், தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் அவருக்குள்ள பரந்த ஞானமும், ஞாபக சக்தியும் நன்கு புலனாகும். இவ்வகையான நூல் இதுவரை தமிழில் ஒருவராலும் எழுதப்படாததால் தமிழ்நூல் பயில்வோருக்கும் ஆராய்ச்சியாளர்க்கும் இது பெரிதும் பயன்படு மென்பதில் ஐயமில்லை." என்று குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்களின் வாழ்க்கை வரலாற்று நூலான என் சரித்திரம் ஆனந்தவிகடன் இதழில் தொடர் கட்டுரையாக 1940ஆம்

ஆண்டு முதல் 1942ஆம் ஆண்டு வரை வெளிவந்தது. உ.வே.சா.அவர்களின் திருமகனார் எஸ்.கலியாணசுந்தரம் ஐயர் பெருமுயற்சியால் 1950ஆண்டு என் சரித்திரம் முதல் பதிப்பு வெளிவந்தது. இச்சரித்திரம் எங்கள் ஊர் தொடங்கி மணிமேகலைப் பதிப்பு வெளிவந்த வரலாற்றோடு (1898) 122 அத்தியாயங்கள் முடிவடைகிறது. உ.வே.சா.அவர்களின் வரலாற்றின் பிற் பகுதியை எழுதவேண்டும் என்ற எண்ணம் அவருடைய திருமகனார் திரு கல்யாணசுந்தரம் ஐயர் அவர்களுக்கு இருந்துள்ளது.

1950இல் வெளிவந்த என் சரித்திரம் முகவுரையில் "பின் நிகழ்ச்சிகள் சம்பந்தமான குறிப்புகள் ஒழுங்குப்படுத்தி வைக்கப்பெற்றுள்ளன. திருவருள் துணை கொண்டும் அன்பர்கள் உதவிகொண்டும் என் சரித்திரத்தின் தொடர்ச்சி யாக ஐயரவர்கள் வரலாற்றைப் பூர்த்தி செய்து வெளியிடலாமென்று கருதி யுள்ளேன்" என்று திரு கல்யாணசுந்தரம் ஐயர் எழுதியுள்ளார். ஆனால் அவர் எழுதவில்லை. அவர் சேகரித்து வைத்த குறிப்புகள், உ.வே.சா.அவர்களுக்குப் பிறர்எழுதியகடிதங்கள், உ.வே.சா.நாட்குறிப்புகள், பதிப்புக்கள்ஆகியவற்றைக் கொண்டு வாகீச கலாநிதி கி.வா.ஜகந்நாதன் 'என் ஆசிரியப்பிரான்' என்ற தலைப்பில் உ.வே.சா.அவர்களின் பின்பகுதி வரலாற்றை (1899-1942) எளியநடையில் அழகாக எழுதியுள்ளார். இந்நூல் போலீஸ் அதிகாரியின் செயல் தொடங்கி கிராமம் பெற மறுத்தது, பாட புத்தகம் எழுத மறுத்தது, பழைய மரபு, சொந்த வீடு, பட்டம் பெற்றது, பெரியோர் சந்திப்பு, ஓய்வு, சிதம்பரம் வாழ்க்கை, நான் ஆசிரியரிடம் சேர்ந்தது, காந்தி தரிசனம், இறுதிக் காலம், பண்பு நலன் என 40 தலைப்புகளில் சுவைபட எழுதி 1993இல் நூல்நிலைய வெளியீடாக வந்துள்ளது.

உ.வே.சா.அவர்களின் வாழ்க்கையோடு தொடர்புடைய பல அரிய நிழற்படங்களுடன் என் ஆசிரியப்பிரான் வெளிவருவதற்கு ஆவன செய்த டாக்டர் உ.வே.சா.நூல்நிலையத்தின் தலைவர் வி.ஐ.டி.வேந்தர், டாக்டர் கோ.விசுவநாதன் அவர்களுக்கும் துணைத்தலைவர்-பதிப்புக்குழுத்தலைவர் பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தி அவர்களுக்கும், செயலர் டாக்டர் தி.சத்தியமூர்த்தி அவர்களுக்கும் பொருளாளர் திரு ந.ஆவுடையப்பன் அவர்களுக்கும் நூல் நிலைய ஆட்சிக்குழு, பொதுக்குழு, பதிப்புக்குழு உறுப்பினர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினைச் சிறப்பாக வடிவமைத்த கணினித் தட்டச்சர் திருமதி. ச.சத்தியவாணி, திருமதி.ம.சுஜிதா ஆகியோருக்கு நூலகத்தின் சார்பில் நன்றி.

என் ஆசிரியப்பிரான் நூல் மறுபதிப்பாக வெளிவருவதற்கு நிதியுதவி நல்கிய திருமதி. நிறைமதி சண்முகவேலாயுதம், சென்னை-29 மற்றும் ருக்மணி பாலசூரியன் பவுன்டேஷன், கழிப்பத்தூர் ஆகியோருக்கு நூல்நிலையத்தின் சார்பாக நெஞ்சார்ந்த நன்றி.

கோ.உத்திராடம்

19.02.2021
சென்னை.

புலவர் மற்றும் காப்பாட்சியர் (கூ.பொ.)

# முன்னுரை

தமிழ்நாட்டில் முன் காலத்தில் தமிழ்ப்புலவர் என்று சொல்லிக் கொண்டு எங்கே போனாலும், 'கம்பராமாயணத்திலிருந்து ஒரு பாட்டைச் சொல்லி விளக்குங்கள்' என்று சொல்வார்கள். எல்லா நூல்களிலும் பழமை யானதும் சிறந்ததும் கம்பராமாயணம் என்ற எண்ணம் அந்தக் காலத்தில் எல்லோருக்கும் இருந்து வந்தது. தமிழ் கற்கத் தொடங்குபவர்கள் முதலில் நைடதத்தைப் பாடம் கேட்பார்கள். 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்ற பழமொழி கூட எழுந்தது.

அந்தக் காலத்தில் இப்பொழுதைவிடத் தமிழை ஆழமாகப் படித்தவர்கள் இருந்தனர். புலவர்கள் வீட்டில் பலபல ஏட்டுச்சுவடிகள் இருந்தன. ஓர் ஏட்டுச்சுவடி பழையதாகப் போய்விட்டால் அதைப் பிரதி பண்ணி வைத்துக்கொண்டு மூல ஏட்டை நெய்யில் தோய்த்து ஆகுதி பண்ணி விடுவார்கள்; அல்லது ஆற்றில் விட்டுவிட்டார்கள். துரதிஷ்டவசமாகப் பிற்காலத்தில் மூலத்தைப் பிரதி பண்ணும் வழக்கம் போய் ஏடுகளை ஆற்றில் விட்டுவிடும் பழக்கம் வந்து விட்டது. அதனால் எத்தனையோ நூல்கள் அழிந்து போய்விட்டன.

மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்கள் திருவா வடுதுறை மடத்தில் ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களிடம் தமிழ் பயின்ற போது வளையாபதி ஏட்டுச்சுவடியைப் பார்த்திருக்கிறார்களாம். அவர்கள் பதிப்பு வேலையைத் தொடங்கி நடத்தி வரும் காலத்தில் அந்தச் சுவடி கிடைக்கவில்லை. வேறோரிடத்தில் 'இன்னாரிடம் தகடூர் யாத்திரை இருக்கிறது' என்ற குறிப்பு இருந்ததாம். அதைத் தேடும்போது அதுவும் கிடைக்கவில்லை.

தமிழ் ஏட்டுச்சுவடிகளும் புலவர்களும் மிகுதியாக இருந்த காலத்தில் பழைய நூல்களைப் பதிப்பிக்கும் துணிவு யாருக்கும் இல்லை. யாழ்ப் பாணம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் சில பிற்கால நூல்களைப் பதிப்பித்திருக்கிறார்.

சேலம் இராமசுவாமி முதலியார் என்பவரின் தூண்டுதலால் ஐயரவர்கள் சீவகசிந்தாமணியைப் படிக்கத் தொடங்கினார்கள். அதில் ஆழ்ந்து பிறகு அதைப் பதிப்பிக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அது தொடங்கிப் பத்துப்பாட்டு, மணிமேகலை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல்,

புறநானூறு, வேறு பல பிரபந்தங்கள் ஆகியவற்றைப் பதிப்பித்துத் தமிழ்நாட்டுக்கு வழங்கினார்கள்.

மூலை முடுக்குகளிலெல்லாம் சென்று ஏடுகளைத் தேடி எடுத்து வந்து ஆராய்ந்து தம்முடைய மதிநுட்பத்தால் பொருள் உணர்ந்து பதிப்பித்து வழங்கினார்கள் அவர்கள். திருவாவடுதுறை ஆதீனத்தாரின் பரிந்துரையின்மேல் பல புலவர் வீடுகளில் ஏடு தேடும் முயற்சிக்குத் துணை கிடைத்தது. அவ்வாறு தேடி எடுத்த பழைய நூல்கள் எளிதில் பொருள் உணர முடியாமல் இருந்தன. அந்த நிலை கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல இருந்தது.

இருப்பினும் ஆண்டவன் திருவருளினாலும் இடைவிடாத முயற்சியினாலும் அவற்றின் பொருளை உணர்ந்து கொண்டார்கள். அவற்றை அழகுறப் பதிப்பித்தார்கள். ஆங்கிலமே தெரியாத அவர்கள் ஆங்கில நூல்களைப் போன்ற முறையில் நூல்கள் வெளியிட்டதைக் கண்டு பலரும் வியப்படைந்தார்கள்.

அவர்களுடைய பதிப்பில் முதலில் முன்னுரையில் நூலில் உள்ள பொருள் இன்னது என்பதும், ஏட்டுச்சுவடி கிடைத்த இடங்கள் இன்னவை என்பதும், பதிப்பிக்கும் போது துணையாக இருந்து பணிபுரிந்தவர்கள் இன்னார் என்பதும் இருக்கும். பிறகு ஆசிரியர் வரலாறும், அப்பால் நூலைப் பற்றிய ஆராய்ச்சியும் இருக்கும்.

நூற்பதிப்பில் அடிக்குறிப்பில் ஒப்புமைப் பகுதிகளும், உரை யாசிரியர்கள் மேற்கோளாகக் காட்டும் அந்த நூற்பகுதி விளக்கமும், பாடபேதங்களும் இருக்கும். நூலின் இறுதியில் அரும்பதம் முதலிய வற்றின் அகராதி இருக்கும்.

அவர்கள் பதிப்பித்த ஒரு நூலை ஆழ்ந்து படித்தாலே பல நூல்களைப் படித்த அறிவு உண்டாகும். ஒரு வகையில் தமிழ்க் களஞ்சியமாக அடிக்குறிப்புக்கள் இருக்கும்.

இன்னும் பல நூல்களைப் பதிப்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் அவர்களுக்கு இறுதி வரையில் இருந்தது. அதுவே அவர்களுடைய உபாசனை. தமிழே அவர்களுடைய மூச்சு. நோய்வாய்ப் பட்டிருந்த போதுகூடத் தமிழ் நூலைப் படிக்கச் சொல்லிக் கேட்டும் பாடம் சொல்லியும் வந்தார்கள். தமிழ் நூல்களை மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்வதில் அவர்களுக்கு இருந்த ஆர்வம் அளவில் அடங்குவது அன்று. தம் மாணாக்கர்களுக்கு ஏதேனும் நன்மை கிடைத்தால் தமக்குக் கிடைத்ததுபோல மகிழ்ச்சி அடைவார்கள்.

பழைய நூல்களைப் பதிப்பித்த அவர்கள் பிற்காலத்தில் தம் அநுபவங்களையும், ஏடு தேடிய வரலாறுகளையும், புலவர்களின் வரலாறு களையும் உரைநடையில் எழுதினார்கள். கலைமகள் பத்திரிகையும் பிற பத்திரிகைகளின் சிறப்பு மலர்களும் அவர் களுடைய எழுத்தைத் தாங்கிச் சிறப்புப் பெற்றன.

ஐயரவர்கள் தம்முடைய வரலாற்றை எழுத வேண்டுமென்று அடிக் கடி பலர் வற்புறுத்தி வந்தார்கள். அதனால் 6.1.1940 முதல் ஆனந்தவிகடனில் ஒவ்வோர் இதழிலும் தம் வரலாற்றை வெளியிட்டு வந்தார்கள். 1942ஆம் ஆண்டு மே மாதம் வரையில் இந்தச் 'சுயசரிதம்' வெளியாயிற்று. 1942ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஐயரவர்கள் அமரராகி விட்டார்கள். ஆகவே 122 அத்தியாயங்களோடு வரலாறு நின்று விட்டது. அதிலுள்ள இறுதி வாக்கியம், மேலே ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, பெருங்கதை என்பவற்றில் என் கருத்தைச் செலுத்தலானேன் என்பது. பெருங்கதை ஆதியும் அந்தமும் இல்லாமல் இருந்தது. இருப்பினும் அதைப் பதிப்பித்தார்கள். பல வடமொழி நூற்பொருளை அறிந்து 'உதயணன் சரித்திரம்' என்ற பகுதியை அந்தப் பதிப்பின் அங்கமாகச் சேர்த்தார்கள். அகநானூற்றைப் பதிப்பிக்க நேரம் கிடைக்கவில்லை. எப்போதும் உழைத்துக் கொண்டே இருந்த அவர்கள் ஏதேனும் பதிப்பில் ஈடுபட்டிருப்பார்கள். ஆகவே அவர்கள் விரும்பியபடி எல்லா நூல்களையும் பதிப்பிக்க இயலவில்லை. ஆண்டவன் அருளால் 88 ஆண்டு வாழ்ந்த அவர்கள் பதிப்பு வேலையைத் தொடங்கின காலமுதல் இறுதிவரையில் அந்தத் தொண்டை நிறுத்தவே இல்லை.

> "இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
> விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்; - திருந்த
> உதிப்பித்த பன்னூல் ஒளிர அடியேன்
> பதிப்பிக்க வேகடைக்கண் பார்"

என்று தமிழினிடம் விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

அவர்களுடைய வரலாற்றின் பிற்பகுதியை எழுதவேண்டும் என்ற எண்ணம் அவருடைய திருக்குமாரராகிய அமரர் திரு.கல்யாண சுந்தரம் ஐயரவர்களுக்கு இருந்தது. என் சரித்திரத்தின் முகவுரையில் "பின்நிகழ்ச்சிகள் சம்பந்தமான குறிப்புக்கள் ஒழுங்குபடுத்தி வைக்கப்பெற்றுள்ளன திருவருள் துணைகொண்டும் அன்பர்கள் உதவி கொண்டும் 'என் சரித்திரத்தின்' தொடர்ச்சியாக ஐயரவர்கள் வரலாற்றைப் பூர்த்தி செய்து வெளியிடலாம் என்று கருதியுள்ளேன்" என்று எழுதியுள்ளார்கள். ஆனால் அவர்கள்

நினைத்த வண்ணம் எழுத முடியவில்லை. அவர்கள் எழுதி வைத்திருந்த குறிப்புக்கள் யான் இதை எழுத மிகவும் உதவியாக இருந்தன.

ஐயரவர்களுக்கு அவ்வப்போது பலர் கடிதங்கள் எழுதிய துண்டு. அவற்றையெல்லாம் அவர்களுடைய நூல்நிலையத்தில் பிரதி செய்து பாது காத்து வைத்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் படித்துப்பார்த்து, இந்த வரலாற்றை எழுத உரியவற்றைப் பயன்படுத்திக்கொண்டேன்.

முருகப்பெருமான் திருவருளாலும் என் ஆசிரியப் பெருமான் திருவருளாலும் 'என் ஆசிரியப்பிரான்' என்ற பெயருடன் இதை வெளியிடு கிறேன். அவர்கள் வாழ்ந்த நெடுங்காலத்தில் எத்தனையோ வகையான இடங்களுக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கங்கே பல பல சுவையான நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கும். அவற்றையெல்லாம் தொகுத்து வகுத்து வெளியிட்டால் இந்த வரலாறு இன்னும் விரிவாக அமைந்திருக்கும்.

ஆனால் என்னுடைய சிறிய அறிவையும் ஆற்றலையும், ஐயரவர்கள் என்னிடம் வைத்திருந்த பேரன்பையும் துணையாகக் கொண்டு இதை இந்த அளவாவது எழுதி முடிக்க முருகன் திருவருள் செய்தானே என்று அப்பெருமானை மனமார வழுத்துகிறேன்.

14-09-1983 கி.வா. ஜகந்நாதன்

# உள்ளுறை

# 1. போலீஸ் அதிகாரியின் செயல்

திருவேட்டீசுவரன் பேட்டையில் ஜெயசிங் என்ற போலீஸ் அதிகாரி ஒருவர் இருந்தார். அவர் கொஞ்சம் முரட்டுச் சுபாவம் உடையவர். யாரோ ஒருவர் அவரிடம் காவடிச் சிந்தையும் திருப்புகழையும் பாடியிருக்கிறார். அவற்றிலுள்ள பெண்களின் வருணனைகளைக் கேட்டு அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. "இப்படியெல்லாம் பாடல்களைப் பாடிக் குழந்தைகளின் மனசைக் கெடுத்துவிடுகிறார்கள். இனிமேல் இத்தகைய புத்தகங்களைவெளிவராமல்தடுத்துவிடவேண்டும்" என்றுபேசிக்கொண்டிருந்தார்; அதற்கு வேண்டிய முயற்சிகளையும் செய்யத் தொடங்கினார். இந்தச் செய்தியைச் சில அன்பர்கள் ஆசிரியப்பெருமானிடம் வந்து சொன்னார்கள்.

ஆசிரியர் வாழ்ந்து கொண்டிருந்த திருவேட்டீசுவரன் பேட்டையில் தான் ஜெயசிங் குடியிருந்தார். ஒரு நாள் அந்தப் போலீஸ் அதிகாரியைப் போய்ப் பார்க்க ஆசிரியர் சென்றார்.

"எங்கே இவ்வளவு தூரம் வந்தீர்கள்? நானே தங்களைப் பார்க்க வேண்டும் என்றிருந்தேன். தங்களுக்குக் கோர்ட்டிலிருந்து ஸம்மன் வரும்" என்று அந்தப் போலீஸ் அதிகாரி சொன்னார்.

"எனக்கும் கோர்ட்டுக்கும் என்ன சம்பந்தம்?"

"ஒரு முக்கியமான விஷயத்தில் தாங்கள் சாட்சி சொல்ல வேண்டும். தமிழ் நூல்கள் சிலவற்றில் பெண்களைப் பற்றி ஆபாசமான வர்ணனைகள் வருகின்றன. அத்தகைய நூல்களையெல்லாம் பறிமுதல் செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். அது பற்றித் தங்களைச் சாட்சியாகப் போடப் போகிறேன்."

"அப்படியா! அது பற்றித்தான் தங்களைக் கண்டு பேசலாம் என்று வந்தேன்."

"என்ன அது?"

"தாங்கள் மிகவும் நல்லவர்கள் என்று கேள்விப்பட்டேன். ஆபாசமான விஷயங்களை எல்லாம் நாம் அதிகமாகப் பரவவிடக் கூடாது

என்ற எண்ணம் தங்களுக்கு இருப்பது தெரிந்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நம்முடையே நாகரிகத்தைத் தெரிந்தவர்களுக்குத்தான் இந்த உண்மை நன்றாகத் தெரியும். ஆனால், இலக்கியங்களை நாம் பார்க்க வேண்டிய முறையே வேறு. சிருங்காரச் சுவையுடைய நூல்கள் தமிழில் இருக்கின்றன. அவற்றை எல்லாம் பல காலமாக இந்த நாட்டில் புலவர்கள் ஆராய்ந்து வருகிறார்கள். செய்யுள் வடிவில் இருப்பதனால் அவற்றைப் படிப்ப வர்களுக்கு இலக்கியச் சுவை தோன்றுமேயொழிய ஆபாசமான உணர்ச்சி தோன்றாது'' என்று ஆசிரியப்பெருமான் பேச்சை ஆரம்பித்தார்.

"சில பைத்தியக்காரப் புலவர்கள் கன்னா பின்னா என்று பாடிக் குழந்தைகளின் உள்ளத்தைக் கெடுத்து விடுகிறார்கள். அத்தகையை ஆபாசப் பாடல்களைத்தடுத்துவிட வேண்டும்என்பது என்னுடையகருத்து. இதுபற்றி எனக்கு ஒரு யோசனை சொன்னால் உபகாரமாக இருக்கும்'' என்று அவர் சொன்னார்.

"இப்போது தங்களுக்கு அவகாசம் இருக்கும் அல்லவா? நிதானமாகப் பேச வேண்டும் என்று வந்திருக்கிறேன்'' என்று சொன்னார் ஆசிரியர்.

"பெரியவர்களாகிய தாங்களே வந்திருக்கிறபோது, தங்களோடு பேசிக் கொண்டிருப்பதைவிட வேறு வேலை எனக்கு என்ன இருக்கிறது? தாங்கள் சொல்லுங்கள்; நான் கவனிக்கிறேன்'' என்றார் ஜெயசிங்.

"என்னிடம் சில புலவர்கள் வந்து, தங்களைத் தமிழுக்கு விரோதி என்று சொன்னார்கள். நான் அவர்களிடம், தாங்கள் அப்படி இருக்க மாட்டீர்கள் என்று சொன்னேன். பழைய இலக்கியங்களை எல்லாம் கொளுத்திவிட வேண்டும் என்று தாங்கள் சொல்வதாகச் சென்னார்கள். தங்களைத் தவறாக அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்று நான் தீர்மானமாக எண்ணினேன். அதனால்தான் தங்களை நேரில் பார்த்துப் போக வந்தேன்'' என்றார் ஆசிரியர்.

"எல்லாப் புலவர்களுக்கும் என்மேல் கோபம் இருக்கலாம். ஆனால் எனக்கு ஆபாசம் கூடாதென்பதுதான் எண்ணம். அதனால் தான் காவடிச் சிந்து போன்ற புத்தகங்கள் பரவக்கூடாது என்று எண்ணுகிறேன்'' என்றார் போலீஸ் அதிகாரி.

"காவடிச்சிந்து, திருப்புகழ் ஆகியவற்றில் பெண்களின் வருணனைகள் இருப்பது உண்மைதான். ஆனால் அந்த வருணனைகளை எல்லாம் படித்து அவற்றோடு நிறுத்திவிடக் கூடாது. பாட்டு முழுவதையும் படித்தால் அந்த மாதிரி ஈடுபடுவது தவறு என்று சொல்லியிருப்பதைக் காணலாம்.

ஒன்பது ரசங்களில் சிருங்கார ரசம் என்பது ஒன்று. அதைப்பற்றிப் பல நூல்கள் தமிழில் இருக்கின்றன; வடமொழியிலும் இருக்கின்றன. பெண் களுடைய வருணனை கூடாது என்று சொன்னால் எத்தனைய இலக்கியத் தையும் படிக்க முடியாது. நான் மிகப் பழைய நூல்களாகிய சங்க நூல்களை வெளியிட்டிருக்கிறேன். அதனால்தான் தமிழ்நாடு எனக்குக் கொஞ்சம் மதிப்பு வைத்திருக்கிறது. அந்த நூல்களிலும்கூடப் பெண்களின் வருணனை இருக்கிறது. ஆனால் அவற்றைப் படிக்கிறபோது ஆபாச உணர்ச்சி தோன்றாது; இலக்கியச் சுவைதான் தெரியும். தாங்கள் இவற்றை எல்லாம் பொசுக்க வேண்டும் என்று நினைப்பதாகச் சிலர் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அப்படியானால் சங்க நூல்களை எல்லாம் கடலில் போட வேண்டியதுதான்; காவியங்களை எல்லாம் பொசுக்கிவிட வேண்டியதுதான். வடமொழியில் உள்ள நூல்களில் கூட அத்தகைய வருணனைகள் வருகின்றன. அவற்றை எல்லாம் யாரும் படிக்கக்கூடாது என்று சொல்ல வேண்டியிருக்கும். இப்படிப் பார்த்துக் கொண்டே போனால், பிறகு தமிழிலும், வடமொழியிலும் படிப்பதற்கு ஒன்றுமே அகப்படாது'' என்றார். ஆசிரியர்.

"அப்படியா? தாங்கள் சொல்வதைப் பார்த்தால் எல்லாப் புத்தகங் களுமே ஆபாசம் என்றல்லவா நினைக்கத் தோன்றுகிறது?'' என்றார் ஜெயசிங்.

"ஆபாசம் என்பது வேறு. ரச உணர்ச்சி என்பது வேறு. மனித வாழ்க்கையில் காதல் என்பது மிக முக்கியமான உணர்ச்சி காவியங்களும், சாஸ்திரங்களும் இந்தக் காதல் உணர்ச்சியைப் பற்றிச் சொல்கின்றன. கடவுளைப் பாடுகிறவர்கள்கூட ஆண்டவனைக் காதலனாகவும் தங்களைக் காதலிகளாகவும் வைத்துப் பாடியிருக்கிறார்கள். அங்கெல்லாம் சிருங்கார ரசம் இருக்கும்''.

"அப்படியா? தேவாரம், திருவாசகம் போன்ற நூல்களிலும் சிருங்கார ரசம் இருக்கிறதா?'' என்று கேட்டார் ஜெயசிங்.

"தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்தம் ஆகிய எல்லாவற்றிலும் இருக்கின்றன. அவற்றில் எல்லாம் ஆண்டவனிடத்தில் உள்ள பக்தியைக் காதலாக மாற்றிப் பாடியிருக்கிறார்கள். 'எல்லி செட்டி லக்க ஏக லக்கா' என்றபடி பெண் வருணனை வருவதனால் ஆபாசம் என்று இவற்றை யெல்லாம் தூக்கி எறிந்துவிட்டால் தமிழுக்குத் தேவாரம் கிடைக்காது; திவ்யப்பிரபந்தம் கிடைக்காது''.

"அப்படியா? இதெல்லாம் எனக்குப் புதிதாக இருக்கிறதே!''

"தாங்கள் இவற்றையெல்லாம் நன்றாக ஆராய்ந்து இருக்க மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன். கிராமாந்தரங்களில் பெண்கள் கச்சு அணியாமல் வருகிறார்கள். காய்கறி விற்கிறவர்கள், பால் தயிர் விற்கிறவர்கள் அப்படித் தான் இன்னும் கூட நடமாடுகிறார்கள். அவர்களைக் கண்டு யாரும் தவறாக எண்ணுவது இல்லை. பார்க்கிற வர்களுடைய கண்ணில் உள்ள தவறுதான் அவர்களைத் தவறாகப் புரிந்துகொள்ளச் செய்கிறது."

"தாங்கள் சொல்வது உண்மைதான்" என்று ஒருவாறு இறங்கி வந்தார் ஜெயசிங்.

"மற்றொரு விஷயம். தாங்கள் கோவிலுக்குப் போகிறீர்கள் அல்லவா?" என்று கேட்டார் ஆசிரியப்பெருமான்.

"ஏன் போகாமல்? நாள் தவறாமல் கோவிலுக்குப் போவேன்; அர்ச்சனையும் பண்ணுவேன்" என்றார் ஜெயசிங்.

"அங்கே உள்ள மூர்த்திகளை, கோபுரங்களிலுள்ள சிற்பங் களைப் பார்த்தது உண்டா?"

"ஓ! பார்த்திருக்கிறேனே!"

"அங்கேயுள்ள சிற்பங்களில் பெண்மையைக் காட்டுகின்ற அங்கங்கள் பெரியனவாக இருந்தாலும் அவற்றைக் கண்டு பக்தர்கள் விகார உணர்ச்சி கொள்வதில்லை. படுத்திருக்கும் தாயின் மார்பில் குதித்து விளையாடுகிற குழந்தைக்குத் தவறான உணர்ச்சி உண்டாவ தில்லை. இது இன்று நேற்று வந்தது அன்று. பல காலமாக இருக்கிற செய்தி. தாங்கள் சொல்கிறபடி திருப்புகழை, காவடிச் சிந்தை, அவற்றில் வருகிற பெண் வருணனைக்காக எரிக்கத் தொடங்கினால் தமிழ் இலக்கியங்களையும், வடமொழி இலக்கியங் களையும் கடலில் கொண்டுபோய்ப் போடவேண்டும்; கோவில்களில் உள்ள விக்கிரங்களை எல்லாம் உடைத்தெரிய வேண்டும்."

"ஐயா, ஐயா! ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? நான் அந்தக் காரியத்தைச் செய்ய உடந்தையாக இருப்பேனா? எனக்கு இந்த விஷயம் தெரியாமல் ஏமாந்து போனேன். நல்ல சமயத்தில் தாங்கள் எனக்கு இந்த உண்மையைச் சொன்னீர்கள். இந்த மாதிரியான விஷயங்களில் பெரியவர்களின் ஆலோச னையைக் கேட்காமல் நான் எதையும் இனிச் செய்யத் துணியமாட்டேன். தங்களுக்கு மிகவும் நன்றி" என்றார் ஜெயசிங். ஆசிரியர் வீட்டிற்குத் திரும்பும் போது, தம் வீட்டு வாசல் வரை வந்து வழியனுப்பி வைத்தார், அந்தப் போலீஸ் அதிகாரி.

## 2. கிராமம் பெற மறுத்தது

ஆசிரியர் பதிப்பித்த மணிமேகலை, புறப்பொருள் வெண்பா மாலை ஆகியவற்றுக்கு உதவி செய்தவர் இராமநாதபுரம் பொ.பாண்டித்துரை தேவர் அவர்கள். அவர் மதுரையில் தமிழ்ச் சங்கத்தை உண்டாக்கிப் பல நூல்களை வெளியிட்டுள்ளார். அதோடு 'செந்தமிழ்' என்னும் இலக்கியப் பத்திரிகையையும் வெளியிட்டு வந்தார். அவருடைய தாயார் 1898-ஆம் ஆண்டு இறைவன் திருவடியை அடைந்தார். அது காரணமாக இராமநாதபுரம் சென்று அவரிடம் துக்கம் விசாரித்து வரவேண்டுமென்று ஆசிரியர் எண்ணினார். அப்போது இராமநாதபுரத்திற்குப் புகைவண்டி ஏற்படவில்லை. மதுரைபோய், அங்கிருந்து வண்டி வைத்துக் கொண்டுதான் இராமநாதபுரம் போக வேண்டும்.

ஆசிரியரும், அவருடைய குமாரரும் சென்னையிலிருந்து புறப்பட்டு மதுரையை அடைந்து, அங்குள்ள திருவாவடுதுறை மடத்தில் தங்கினார்கள். சிறுவயல் ஜமீன்தார் முத்துராமலிங்கத் தேவர் ஆசிரியரிடம் மிக்க அபிமானம் உடையவர். ஆசிரியர் இராமநாதபுரத்திற்குப் புறப்பட்டு, மதுரை வந்த செய்தியை அவர் தெரிந்துகொண்டார். ஆசிரியரைப் போய்ப் பார்த்து, இராமநாதபுரம் செல்ல அங்கங்கே தாம் வண்டியை ஏற்பாடு செய்து தருவதாக மனமுவந்து சொன்னார். வண்டியில் அங்கிருந்து புறப்பட்டு, அடுத்துப் பரமக்குடியில் போய்த் தங்கினார். வைகையில் வெள்ளம் வந்துவிட்டதனால் அங்கிருந்து உடனே பயணத்தைத் தொடர முடியவில்லை. மூன்று நாட்கள் கழித்தே இராமநாதபுரம் போய்ச் சேர முடிந்தது.

இராமநாதபுரத்தில் பாண்டித்துரைத் தேவர் தங்கியிருந்த அரண் மனைக்குச் சோமசுந்தர விலாசம் என்று பெயர். ஆசிரியர் இராமநாதபுரம் வந்ததை அறிந்து, பாண்டித்துரைத் தேவர், அவர் வசதியாகத் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

இராமநாதபுரத்தில் ஆசிரியர் ஒரு மாதகாலம் தங்கியிருந்தார் அதனால் பாண்டித்துரைத் தேவருக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. பாண்டித்துரைத் தேவர் தமிழில் நல்ல புலமை உடையவர். பன்னூற்றிரட்டு என்ற நூலைத்

தொகுத்து வெளியிட்டிருக்கிறார். காலையிலும், மாலையிலும் அவரும் ஆசிரியரும் சந்தித்து உரையாடினார்கள். திரு.ரா.இராகவையங்கார் முதலிய புலவர்களும் உடன் இருந்தார்கள். ஆசிரியர் பேசும்போது பல இலக்கியத் திலுள்ள நயங்களையும், தம் அனுபவத்தால் தெரிந்து கொண்ட செய்தி களையும் எடுத்துச் சொல்வார்; நயம்பட நகைச்சுவை தோன்றும்படி பேசுவார். அவற்றைக் கேட்பவர்கள் நேரம் போவது தெரியாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

பாண்டித்துரைத் தேவர் நாள்கள் போகப் போக மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தார். “என்னுடைய தாயார் இறந்து போனதில் எனக்கு ஒரு நன்மை ஏற்பட்டது. தாங்கள் இங்கே வந்து தங்க வேண்டுமென்று எழுதினால் வந்து தங்குவீர்களா? தங்களுக்குத் தமிழ்த் தொண்டே நாள் முழுவதும் இருக்கும். ஏதோ ஒரு சம்பிரதாயத்திற்காகத் துக்கம் கேட்க வந்தீர்கள். தங்களோடு சல்லாபம் செய்துகொண்டிருப்பதில் என் அன்னை இறந்துபோன துக்கமே மாறிவிட்டது. நல்லவர்கள் எதைச் செய்தாலும் அது நன்மையையே தரும் என்பதைத் தெரிந்து கொண்டேன். என்னுடைய தாயார் மிகவும் சிறந்தவர். அவருடைய உயர்ந்த குணங்களை எல்லாம் நான் அறிந்து மகிழ்ந்து இருக்கிறேன். அவர் வாழ்ந்திருந்த காலத்திலும் எனக்கு எத்தனையோ நன்மைகளைச் செய்தார்கள். அவர் இறந்த பிறகும்கூட, தங்களை எல்லாம் வரும்படி செய்து என்னைத் தமிழ் அமுதக்கடலில் ஆழ்த்தினார்கள். இப்படி ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டதற்கு மகிழ்ச்சி அடைகிறேன்” என்று பாண்டித்துரைத் தேவர் நயமாகப் பேசினார். அந்த ஒரு மாதம் போனதே தெரியவில்லை. தினந்தோறும் பாண்டித்துரைத் தேவர் பல சங்கீத வித்துவான்களை வரவழைத்துக் கச்சேரிகளும், கதாகாலட்சேபங்களும் தொடர்ந்து நடக்கும்படி செய்தார் அவருடைய ஆற்றலையும், சிறப்பையும் அறிந்து புலவர்கள் வியந்தார்கள்.

ஒரு நாள் பாண்டித்துரைத் தேவர் சேதுபதி மன்னரைப் பார்க்கப் போயிருந்தார். மன்னரிடம் பேசிக்கொண்டிருந்தவர் புறப்படும்போது பாஸ்கர சேதுபதி பாண்டித்துரைத் தேவரைப் பார்த்து, “சாமி கொஞ்சம் இருங்கள்; ஒரு முக்கியமான சமாசாரம் சொல்லவேண்டும்” என்று சொன்னார். பாண்டித்துரைத்தேவரைச் சாமி என்று அழைப்பது வழக்கம். எல்லோரும் போனபிறகு மகாராஜா ஒரு கருத்தைத் தெரிவித்தார். அது கேட்டு மிகமகிழ்ந்து, அது மிகவும் பொருத்தமானது என்று பாண்டித்துரைத்தேவர் சொல்லிவிட்டு ஆசிரியர் இருந்த விடுதிக்கு வந்தார்.

ஆசிரியர் அவரை வரவேற்று உட்காரச் சொன்னார். “தங்களுக்கு மகிழ்ச்சியான ஒரு செய்தியைச் சொல்ல வந்திருக்கிறேன்” என்று பாண்டித்

துரைத்தேவர் சொன்னவுடன், ஆசிரியர் ஒன்றும் புரியாமல், "ஏதாவது புதிய நூலைப் பதிப்பிக்க உதவி செய்யப் போகிறீர்களா?" என்று கேட்டார். "ஒரு நூல் அல்ல; பல நூல்களைத் தாங்கள் பதிப்பிக்கலாம். அந்த அளவுக்குத் தங்களுக்குச் செல்வம் அளிக்கக் கூடியவாறு ஒரு கிராமத்தையே தங்கள் பெயரில் எழுதி வைக்க மகாராஜா நினைக்கிறார்" என்றார் பாண்டித்துரைத் தேவர். ஆசிரியருக்கு ஒன்றும் புரியவில்லை. "கொஞ்சம் தெளிவாகச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

அப்போது பண்டித்துரைத்தேவர் சொன்னார், "நான் இன்று அரண்மனைக்குப் போயிருந்தேன். சேதுபதி அவர்கள் இந்தச் செய்தியைத் தங்களுக்குத் தெரிவிக்கச் சொன்னார். 'எத்தனையோ பேர்களுக்கு நம்முடைய சம்ஸ்தானத்திலிருந்து நாம் உதவி செய்து வருகிறோம். ஆனால் அவர்களோ நமக்கு எந்த விதத்திலும் உதவி செய்யவில்லை. மாறாக என்னுடைய தந்தையாரைப் பற்றியும், என்னைப் பற்றியும் எவ்வளவோ பழி சொல் கிறவர்களும் உண்டு. ஆனால் ஐயர் அவர்களோ நம்மிடத்தில் எதையும் எதிர்பார்க்காமல் நம்மிடத்தில் மிக்க அன்பைக் காட்டி வருகிறார்கள். இந்நாள்வரை அவர்களுக்கு நாம் எந்த விதமான உதவியும் செய்யாமல் இருந்தது பெரிய தவறு. ஆகவே, அவர்களுக்கு இப்போது நம் ஜமீனில் உள்ள ஒரு கிராமத்தையே வழங்கிவிடலாம் என்று தோன்றுகிறது. நான் நேராகச் சொன்னால் அவர்கள் என்ன சொல்வார்களோ தெரியாது. ஆகையால் அவர்களிடம் நெருங்கிப் பழகுகிற நீங்களே இந்தச் செய்தியை அவர்களிடம் சொல்லி, எப்படியாவது என்னுடைய விருப்பம் நிறைவேறும்படி செய்ய வேண்டும். அவர்கள் அரசாங்க உத்தியோகத்தில் இருப்பதனால் இதுபோன்ற கொடையைத் தாம் வாங்கிக்கொள்வது சரியாகாது என்று நினைக்கலாம். அதுவே காரணமாக மறுக்கவும் மறுக்கலாம். அப்படியானால் அவருடைய குமாரர் பேரில் அந்தக் கிராமத்தை எழுதி வைத்துவிடுகிறேன். எப்படியாவது நம்மாலே ஒரு பெரிய உபகாரம் அந்தக் குடும்பத் திற்குச் சேரவேண்டும். இதை இரகசியமாக வைத்துக் கொண்டு, ஐயரது சம்மதத்தைப் பெற்று எனக்குத் தெரிவிப்பது நல்லது என்று சொன்னார். ஆகவே அதைத் தங்களிடம் தெரிவிக்கிறேன்." என்று பாண்டித்துரைத் தேவர் சொன்னவுடன் ஆசிரியருக்கு ஒன்றும் தோன்ற வில்லை. 'ஒரு கிராமத்தையே வாங்கிக்கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம்? நம் தொழிலுக்கும், சாகுபடி செய்வதற்கும், குத்தகை வாங்குவதற்கும் ஒத்துவருமா? என்றாலும் இவ்வளவு பெரிய கொடையை வாங்கிக் கொள்வதற்கு நாம் என்ன செய்துவிட்டோம்? நமக்கு என்ன தகுதி இருக்கிறது?' என்றெல்லாம் எண்ணினார்.

உடனே ஆசிரியர், "மகாராஜா அவர்களுடைய எல்லையற்ற அன்பை நான் இதனால் உணர்ந்து கொள்கிறேன். அவர்களை இக்காலத்துக் கர்ணன் என்று தான் சொல்ல வேண்டும். என்னுடைய கருத்தை நான் அவர்களிடமே நேரில் சொல்கிறேன்" என்று சொன்னார்.

அப்படியே மறுநாள் காலையில் ஆசிரியர் பாஸ்கர சேதுபதி மன்னரைப் பார்க்க அரண்மனை சென்றார். தம் விருப்பத்தை ஏற்றுக் கொண்டு, தமக்கு நன்றி தெரிவிக்கத்தான் வந்திருக்கிறார் என்று முதலில் மன்னர் எண்ணினார். ஆகவே மகிழ்ச்சியோடு ஆசிரியரை வரவேற்றார்.

மன்னரோடு ஆசிரியர் பேசத் தொடங்கினார். முதலில் எடுத்தவுடன் அதனைச் சொல்லவில்லை. சிறிது நேரம் வேறு பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்துவிட்டு, முடிவில் அது பற்றிச் சொன்னார்.

"மகாராஜா அவர்கள் சாமி மூலம் (பாண்டித்துரை தேவர்) சொல்லி அனுப்பிய செய்தியை அவர்கள் தெரிவித்தார்கள் அதிலிருந்து மகாராஜா அவர்களுக்கு என்னிடத்தில் எத்தனை அன்பு இருக்கிறது என்பதை உணர்ந்துகொண்டேன். எவ்வளவோ உபகாரங்களைத் தங்களிடமிருந்து நான் பெற்றிருக்கிறேன். எனக்கு இப்போது எதிலும் குறைவு இல்லை. ஆண்டவன் திருவருளினால் கல்லூரியில் எனக்குச் சம்பளம் வருகிறது. எனக்கு அவ்வளவு பெரிய குடும்பமும் இல்லை. இருப்பதை வைத்து க்கொண்டு செட்டாக வாழத் தெரிந்தவன் நான். தாங்கள் வழங்குவதை ஏற்க மறுக்கிறேன் என்று எண்ணக் கூடாது. சம்ஸ்தானத்தின் நிலைமை எப்படி இருக்கிறது என்று எனக்கு நன்றாகத் தெரியும். இந்த நிலையில் நான் இப்போது அவ்வளவு பெரிய கொடையைத் தங்களிடமிருந்து ஏற்றால் அது என் மனத்திற்குச் சம்மதம் ஆகாது" என்று சொன்னார்.

அப்போது இராமநாதபுரம் சம்ஸ்தானம் பல விதமான கடன் தொல்லை களுக்கு ஆளாகியிருந்த நேரம். அதை எண்ணி ஆசிரியர் அவ்வாறு சொன்னார்.

ஆசிரியரது கருத்தை உணர்ந்துகொண்டு ஒரு பதிலும் சொல்லாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்தார் சேதுபதி மன்னர். பிறகு, "தங்கள் விருப்பம். ஆனால் மேலும் கடனாளியாக என்னைத் தாங்கள் ஆக்கி விட்டது போன்ற உணர்ச்சிதான் எனக்கு ஏற்படுகிறது" என்று சொல்லி விடை கொடுத்து அனுப்பினார்.

# 3. பாடப் புத்தகம் எழுத மறுத்தது

கும்பகோணம் கல்லூரியில் அந்தக் காலத்தில் ராவ்பகதூர் ஸி.நாகோஜிராவ் என்பவர் முதல்வராக இருந்தார். அவர் இசையில் சிறப்பான பயிற்சி உடையவர்; நன்றாகப் பாடுவார். இசை சம்பந்தமான சில புத்தகங்களை லாங்மென்ஸ் கிரீன் கம்பெனி மூலம் வெளியிட வேண்டுமென்று அவர் எண்ணியிருந்தார். பல கீர்த்தனங்களைத் தொகுத்து ராகம், தாளம், சுரம் முதலியன அமைத்துத் திருத்தமாக வெளியிட அவர் எண்ணியதால் அவற்றை முதலில் ஆசிரியரிடம் கொடுத்துத் திருத்திக் கொள்ள நினைத்தார். அதற்காகச் சங்கீதப் பயிற்சியுள்ள மகாராஷ்டிரர் ஒருவரை அடிக்கடி ஆசிரியர் வீட்டுக்கு அனுப்பினார்.

நாகோஜிராவ் அந்த மகாராஷ்டிரர் மூலமாக அனுப்பி வைத்த புத்தகங்களை ஆசிரியர் பார்வையிட்டு, அவற்றில் பிழை இருந்தால் அதனைத் திருத்தி அவரிடமே கொடுத்தனுப்புவார். இப்படி அடிக்கடி ஆசிரியரிடம் வந்து பழகியபோது, ஆசிரியர் காட்டிய அன்பையும், ஆசிரியருக்கு இசையில் இருந்த நல்ல தேர்ச்சியையும் அந்த மகாராஷ்டிரர் நாகோஜிராவிடத்தில் சொல்ல, அவருக்கு ஆசிரியரிடமும் முன்னாலே இருந்த அன்பும், மதிப்பும் பின்னால் பன்மடங்காயின.

ஆசிரியர் பழைய இலக்கிய நூல்களை வெளியிடுகிறார் என்றும், அதனால் அவருக்குப் பொருள் வருவாய் ஒன்றும் இல்லை என்றும், கைச்செலவே அதிகமாகிறது என்றும் நாகோஜிராவ் உணர்ந்து கொண்டிருந்தார். அதனால் எப்படியாவது ஆசிரியருக்கு நல்லமுறையில் வருவாயை ஏற்படுத்தித் தரவேண்டுமென்ற எண்ணம் அவருக்குத் தோன்றியது.

ஒரு நாள் கல்லூரி முடிவதற்குச் சிறிது நேரம் இருக்கும்; கல்லூரி முதல்வர், கல்லூரி விட்டபின்பு தம்மை தம் அறையில் வந்து பார்க்கும்படி, ஆசிரியரிடம் சொல்லச் சொல்லி ஒருவரை அனுப்பியிருந்தார். ஆசிரியரும் கல்லூரி முடிந்தவுடன், முதல்வரது அறைக்குச் சென்றார்.

"தங்களுக்கு இப்போது ஒன்றும் அவசரமான வேலை இல்லையே!" என்று கல்லூரி முதல்வர் பேச்சை ஆரம்பித்தார் எப்போதும் என்னுடைய நலன் பற்றி பல நல்ல கருத்துகளை எடுத்துச் சொல்லும் தங்களோடு பேசுவதை

விட அவசரமான காரியம் வேறு என்ன எனக்கு இருக்கிறது?'' என்று ஆசிரியர் சொன்னார். அப்போது நாகோஜிராவ் சொல்லலானார்.

"தாங்கள் தமிழில் உள்ள பழைய அரிய பெரிய நூல்களைப் பதிப்பித்து வருகிறீர்கள். அதனால் தங்களுக்கு லாபம் எதுவும் இல்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். எனினும் தங்கள் பதிப்புக்கு உதவியாகப் பணம் அதிகம் வேண்டும். இதை எல்லாம் எண்ணி அதிக வருவாய் கொடுக்கும்படியான ஒரு யோசனையைச் சொல்வதற்காகத்தான் தங்களை அழைத்தேன். நான் பல வருஷங்கள் பள்ளிக்கூடத்து இன்ஸ்பெக்டராக இருந்தேன் என்பது தங்களுக்குத் தெரியும். பள்ளிக்கூடங்களில் பாடமாக வைக்கப் பெறுகிற புத்தகங்களை நான் பார்த்திருக்கிறேன். எனக்கு அவற்றில் எதுவும் திருப்தி அளிக்கவில்லை. தனித்தனியாக எழுதவேண்டும்; பிழையின்றி அச்சிடப்பெறவேண்டும். அப்படி எந்தப் புத்தகமும் கிடைக்க வில்லையே என்று வருத்திக்கொண்டிருந்தேன். தாங்களே முதல் வகுப்பு முதல் மூன்றாம் பாரம் வரையிலான தமிழ்ப்பாடப் புத்தகங்களை உரை நடையில் எழுதினால், அவற்றை லாங்மென்ஸ் பதிப்பகத்தார் வெளியிடு வார்கள். தங்களுக்கும் நல்லமுறையில் சன்மானம் வழங்குவார்கள். அந்த நூல்கள் பள்ளி மாணவர்களுக்கும் நல்ல பயன்தரத் தக்கனவாக இருக்கும் அல்லவா?'' என்று சொன்னார்.

இதைக் கேட்டவுடன் ஆசிரியருக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகும் என்று நாகோஜிராவ் நினைத்திருக்கக்கூடும். ஆசிரியரிடம் எந்த விதமான மகிழ்ச்சியும் உண்டாகவில்லை. "என்ன யோசிக்கிறீர்கள்? நான் இதற்கு ஏற்பாடு செய்யட்டுமா?'' என்று நாகோஜிராவ் கேட்டார்.

ஆசிரியர் சொன்னார்: "நான் தங்களுடைய அன்பைப் பாராட்டுகிறேன். எனக்குள்ள துன்பங்களை எல்லாம் தாங்கள் நன்றாகத் தெரிந்து கொண்டிருக் கிறீர்கள். அதுவே எனக்குப் போதுமானது. தாங்கள் மாத்திரம் அல்ல. வேறு சில அன்பர்களும் பாடப் புத்தங்களை நான் எழுத வேண்டுமென்று சொல்லி வருகிறார்கள். எனக்குப் பணம் முக்கியம் அல்ல. என்னுடைய நேரம் முழுவதும் இப்போது கல்லூரியில் பாடம் சொல்வதிலும், தமிழ் நூல்களை ஆராய்வதிலும் கழிகின்றது. தமிழ் நூல் ஆராய்ச்சிக்கு எவ்வளவு நேரம் செலவழித்தாலும் போதாது. நான் வேறு துறையில் இறங்கினால் நூல் ஆராய்ச்சிக்கு வேண்டிய பொழுது கிடைக்காது. அது மாத்திரம் அல்ல. அதிக அளவுக்குப் பணம் வந்து, செல்வ ஆசையும் பிறந்து விட்டால், பழைய நூல்களை எல்லாம் அச்சிட வேண்டுமென்ற உயர்ந்த கருத்தை நான் மறந்துவிடும்படி நேரிடலாம். நானும் மனிதன் தானே? தயை செய்து தாங்கள் இதை என்னை ஏற்கும்படி வற்புறுத்த

வேண்டாம். என்னை என்னுடைய பழைய சுவடியோடு இருக்கும்படி விட்டுவிடுங்கள். தாங்கள் சொல்வதை நான் அவமதிப்பதாக நினைக்கக் கூடாது. பழைய நூல்களின் ஆராய்ச்சிக்கு எத்தனை நேரம் இருந்தாலும் போதாது. இந்த நாட்டில் தோன்றிய பழைய நூல்கள் எத்தனையோ இன்னமும் கிடைக்கவில்லை. கிடைத்த ஒரு நூலை ஆராய்கிறபோது அதன் உரையில் குறிப்பிடப் பெற்றிருக்கும் வேறு பல நூல்கள் கண்ணால் பார்ப்பதற்குக்கூடக் கிடைக்கவில்லையே என்ற துக்கம் என்னை வாட்டுகிறது. கிடைப்பனவற்றை நல்லமுறையில் அச்சிட்டுவிட வேண்டும் என்று இருக்கிறேன். ஆண்டவன் எனக்கு அனுகூலமாகவும் இருக்கிறான். இந்தத் தொண்டுக்குத் தடைவராமல் இருக்கத் தாங்களும் என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள். இதைவிடப் பெரிய காரியங்கள் உலகத்தில் இருக்கலாம். ஆனால் இதுதான் எல்லாவற்றையும் விடச் சிறந்த பணியாக எனக்குத் தோன்றுகிறது.'' ? என்று சொன்னார்.

ராவ்பகதூர் நாகோஜிராவ், 'இந்த மனிதருக்குப் பணத்தில் ஆசை இல்லையே! பழஞ்சுவடிகளை வெளிக்கொண்டுவர வேண்டு மென்றுதான் எத்தனை ஆசை! இப்படியும் ஒரு மனிதரா?' என்று மனத்திற்குள் நினைத் திருப்பார்.

### சின்னசாமி ஐயர்

ஆசிரியருடைய தந்தையாரின் இளவல் ஒருவர் இருந்தார் அவருக்குச் சின்னசாமி ஐயர் என்று பெயர். ஆசிரியர் தந்தை வேங்கடசுப்பையராகிய பெரியசாமிக்குத் தம்பி. ஆதலால் சின்னசாமி என்ற பெயர் இவருக்குப் பொருத்தமானது என்று சிலர் சொல்வார்கள். ஆசிரியப்பிரானுடைய தந்தையார் நல்ல சங்கீத வித்துவான். பல பெரியோர்களின் கீர்த்தனங்களை நன்றாகப் பாடுவார். அப்பொழுதெல்லாம் சின்னசாமி ஐயரும் உடன் பாடுவார்; பின்பாட்டும் பாடுவதுண்டு.

அவரிடத்தில் ஆசிரியப்பிரானுக்கு மிகுதியான அன்பு உண்டு. தம் தந்தையாருடன் பயபக்தியுடன் பழகும் ஆசிரியர் சின்னசாமி ஐயருடன், "சிற்றப்பா, சிற்றப்பா!" என்று சகஜமாகப் பழகுவார்.

சின்னசாமி ஐயருக்குக் குழந்தைகள் இல்லை. ஆதலால் ஆசிரியப் பெருமானிடம் அவருக்கு நிரம்பிய பாசம் இருந்தது. 1898-ஆம் ஆண்டு சின்னசாமி ஐயருக்கு அறுபது பிராயம் நிறைந்து சஷ்டியப்த பூர்த்தி நடை பெற்றது. ஆசிரியப்பிரான் தாமே முன் நின்று அதை வைதிக முறைப்படி சிறப்பாக நடத்தினார். தமக்குப் பிள்ளையில்லையே என்ற வருத்தம் சின்னசாமி ஐயருக்கு அந்த நிகழ்ச்சியினால் அறவே மறந்து போயிற்று.

உத்தமதானபுரத்தில் அவர் கிராம முன்சீபாக இருந்தார். பல பழைய கீர்த்தனைகளை அவர் ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்தார்.

1901-ஆம் ஆண்டில் அவர் இறைவன் திருவடியை அடைந்தார் அவருக்குச் சந்ததி இல்லாமையால் ஆசிரியப்பெருமானே அவருடைய ஈமக்கடன்களைச் செய்து நிறைவேற்றினார். அவருடைய சிராத்தத்தையும் ஆண்டுதோறும் செய்து வந்தார். 1906-ஆம் ஆண்டு அவருடைய சிராத்த தினத்தன்றுதான் ஆசிரியப்பிரானுக்கு 'மகா மகோபாத்தியாயர்' என்னும் பட்டம் கிடைத்தது.

# 4. மற்ற வேலைகளில் ஈடுபடாமை

ஆசிரியர் கல்லூரிக்குப் போய்விட்டு வந்த நேரங்களிலெல்லாம் பழைய நூல்களை ஆராய்ச்சி செய்வதிலும், அவற்றை வெளியிடு வதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வதிலும் ஈடுபட்டு வந்தார். அவை சம்பந்தமாகவே கனவுகள் கூடக் கண்டு வந்தார். அதனால் வேறு எத்தனை உயர்ந்த காரியமாக இருந்தாலும் அதில் அவரது உள்ளம் ஈடுபாடு கொள்ள வில்லை.

ஐயரவர்களுடைய கைவண்ணத்தால் செப்பம் செய்யப் பெற்றால் தங்கள் நூலுக்குச் சிறப்பு உண்டாகும் என்று பலர் நினைத்தார்கள். ஆசிரியப் பிரான் எப்போதுமே ஏதாவது நூலாராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார் என்பதை அவர்கள் நினைப்பதில்லை. அந்தக் காலத்தில் திருவல்லிக்கேணியில் இருந்த எஸ்.எம்.நடேச சாஸ்திரியார் வால்மீகி இராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வந்தார் தாம் எழுதும் நூலில் தமிழ்ப் புலவர்கள் தவறு எதையும் காண இடமளித்துவிடக் கூடாது என்று நினைந்தார். அவருக்கு ஆசிரியப்பெருமானுடைய நினைவு வந்தது. ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதினார். "வால்மீகி இராமாயணத்தை எல்லோரும் வடமொழியில் படிப்பது எளிதன்று. அதை நான் தமிழில் மொழி பெயர்த்து வருகிறேன். வடமொழி தெரியாதவர்களும் இதன்மூலம் வால்மீகி இராமாயணத்தைத் தெரிந்து கொள்ள முடியும். எனினும் என்னுடைய மொழிபெயர்ப்பில் எத்தனையோ பிழைகள் இருக்கலாம். தாங்கள் என்பால் மிக்க அன்பு உடையவர்கள் தாங்கள்தாம் இதை ஒருமுறை பார்த்து, இதிலுள்ள பிழைகளை நீக்கித் திருத்திக்கொடுக்க வேண்டும்" என்று எழுதினார்.

அந்தக் கடிதத்தைக் கண்ட ஆசிரியர் உடனே அதற்கு விடை எழுதினார். "தாங்கள் மேற்கொண்ட காரியம் மிகவும் சிறந்தது ஆனால் பழைய நூல்களை ஆராய்ச்சி செய்து பதிப்பதிலேயே எனக்கு நேரம் சரியாகிவிடுகிறது. அதற்கே நேரம் போதவில்லை தாங்கள் செய்திருக்கும் காரியம் மிகப் பெரியது என்றாலும், அதனை நான் பார்த்துத் திருத்திக் கொடுக்க நேரம் இல்லாமல் இருப்பதற்கு வருந்துகிறேன். சென்னையிலே பெரும்புலவராக வை.மு.சடகோப இராமானுஜாசாரியார் இருக்கிறார். அவரைக் கொண்டு திருத்திக்கொள்ளலாம்" என்று எழுதினார். நடேச சாஸ்திரியும் அதன்படியே செய்தார். அவரால் சடகோப இராமானுஜா சாரியாருக்கு ஓரளவு ஊதியம் கிடைத்தது.

ஆசிரியர் நூலாராய்ச்சியையே தம் வேலையாக வைத்துக் கொண்டதனால் மற்ற விஷயங்களைக் கவனிப்பதில்லை. தம் குடும்ப விஷயத்திலும் அவர் ஈடுபடுவதில்லை. அவர் தந்தையார் இருந்த காலத்தில் அவர் அதைக் கவனித்துக் கொண்டார். பிறகு அவருடைய தம்பி திரு.சுந்தரேசையர் பார்த்துக் கொண்டார். இறுதியில் ஆசிரியப்பிரானுடைய குமாரர் திரு.கல்யாணசுந்தரம் ஐயர் கவனித்து வந்தார். அதனால் ஆசிரியருடைய தமிழ்த்தொண்டு தடைபடாமல் நடந்து வந்தது.

### போப்பின் பாராட்டு

அக்காலத்தில் ஜே.எம்.நல்லசாமிபிள்ளை என்பவர் ஜில்லா முன்சீபாக நந்தியாலில் இருந்தார். அவர் சைவ சித்தாந்த நூல்களில் நல்ல பயிற்சி உடையவர். சைவத்தில் தீவிரப் பற்றுக்கொண்டு தமிழில் 'சித்தாந்த தீபிகை' என்ற பத்திரிகையையும், ஆங்கிலத்தில் 'லைட் ஆப் ட்ரூத்' (*Light of Truth*) என்ற மாதப் பத்திரிகையையும் வெளியிட்டு வந்தார். அவருக்கு ஆசிரியப்பிரானிடம் பேரன்பு உண்டு. மணிமேகலையை ஆசிரியர் பதிப்பித்தவுடன், அவர் அதனை விரிவாகப் பாராட்டி எழுதியிருக்கிறார்.

அவரிடமிருந்து 1899-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் ஒரு கடிதம் வந்தது. ராயல் ஏஷியாடிக் ஜர்னலில், ஆசிரியப் பெருமானைப் பாராட்டி ஜி.யு.போப் அவர்கள் எழுதியிருப்பதாக அந்தக் கடிதத்தில் தெரிவித்தார். அதன் கருத்து இதுதான்.

"கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பேராசிரியராகவுள்ள சாமிநாதையர் புறநானூறு பதிப்பித்துள்ளார். இனித் தமிழ் நூல்களைப் பதிப்பிக்க விரும்புகிறவர்கள் எல்லோரும் அவரது பதிப்பு முறையைப் பின்பற்ற வேண்டும். அவர் வெளியிட்டுள்ள சிறந்த நூல்களில் இது 5-ஆவது ஆகும். மேல்நாட்டு அறிஞர்கள் இந்நூலை மதிப்பிடப் புகுந்தால், அவர்கள் இந்த வெளியீடுகளால் ஐயருடைய இலக்கிய ஞானத்தையும், அவர் எடுத்துக் கொண்ட பேருழைப்பையும் பாராட்டி, ஐரோப்பிய மேதாவிகள் கூட்டத்தில் ஓர் உயர்ந்த நிலையைப் பெறச் செய்வார்கள். ஐயர் அவர்களுடைய பதிப்புக்களால், தமிழ் மொழியானது எந்த மொழிக்கும் தாழ்ந்தது அல்ல என்பது நிரூபிக்கப்படுகிறது" என்று போப் எழுதியிருப்பதாக அவர் குறிப்பிட்டிருந்தார். "பழமையிலும் இலக்கிய வளத்திலும் எந்த மொழிக்கும் தமிழ் தாழ்ந்தது அல்ல என்பது உலகுக்கு எடுத்துக் காட்டப்பெறுகிறது" என்று நல்லசாமிப்பிள்ளை எழுதினார்.



ஜே.எம்.நல்லசாமி பிள்ளை

# 5. பல பெருமக்களின் தொடர்பு

### ஹாவ்லக் துரை

*1898*-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 19-ஆம் தேதி கும்பகோணம் கல்லூரிக்கு அக்காலத்தில் சென்னை மாநிலக் கவர்னராக இருந்த ஹாவ்லக் *(Havlock)* பிரபு விஜயம் செய்தார். யாரேனும் பேரறிஞர்களோ அதிகாரிகளோ வந்தால் ஆங்கிலத்தில் வரவேற்பளிப்பார்கள். அக்காலத்தில் ஆங்கிலத் திற்குத்தான் மதிப்பு அதிகம். ஆனால் கல்லூரி முதல்வராகிய நாகோஜி ராவ் ஆசிரியப் பெருமானுடைய பெருமையை அறிந்தவர் ஆதலால், அவரைக் கொண்டு தமிழிலும் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்க வேண்டுமென்று எண்ணினார். இது ஒரு புதுமையாக இருப்பதோடு கவர்னருக்கு மகிழ்ச்சி ஏற்படும் என்பது அவருடைய எண்ணம்.

கவர்னர் கல்லூரிக்கு விஜயம் செய்தபோது பல பெருமக்கள் வந்திருந்தார்கள். முதல்வர் நாகோஜி ராவ் கவர்னரை ஆங்கிலத்தில் வர வேற்றார். ஆங்கிலத்தில் ஒரு வரவேற்புப் பத்திரமும் வாசித் தளிக்கப் பெற்றது. அடுத்து ஆசிரியப்பெருமான் தாம் இயற்றிய தமிழ்ச் செய்யுளைப் படித்தார். அதன் மொழிபெயர்ப்பைக் கவர்னருக்கு எடுத்துச் சொன்னார்கள். ஆசிரியர் அதை இசையுடன் படித்தபோதே அதில் ஈடுபட்ட கவர்னர் அதன் பொருளை உணர்ந்த பிறகு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அங்கிருந்த பெருமக்கள் எல்லோரும் கவர்னர் பெருமானுடைய பெருமைக்கு ஏற்றபடி அந்த வரவேற்புப் பத்திரப் பாடல்கள் அமைந்திருந்தன என்று சொல்லி மகிழ்ந்தனர்.

### டாக்டர் வில்ஸ்

கும்பகோணத்தில் அந்தக் காலத்தில் மௌன சுவாமிகள் என்ற ஒரு பெரியவர் இருந்தார். மடத்துத்தெருப் பக்கத்தில் ஒரு மடத்தில் அவர் இருந்தார். எந்தவிதமான பேச்சும் இல்லாமல், ஆரவாரம் இல்லாமல் எல்லா வகையிலும் மௌனம் சாதித்த அந்தப் பெருமானை உலகமே போற்றியது. ஆசிரியப்பிரானும் அவ்வப்போது சென்று அந்தச் சுவாமிகளைத் தரிசித்து வருவார். மௌனசுவாமிகளின் பெருமை நாடெங்கும் பரவியிருந்தது. அவரைத் தரிசிப்பதற்கு மேல்நாட்டிலிருந்தும் பலபேர் வருவார்கள்.

அவர் யாரிடமும் எதுவும் பேசுவது இல்லை. உட்கார்ந்தவர் உட்கார்ந்தபடியே இருப்பார். அவருக்கு ஏதாவது கொடுத்து உண்பிக்க வேண்டுமென்று பலர் விரும்புவார்கள்.

டாக்டர் வில்ஸ் என்பவர் கொழும்பிலிருந்து மௌனசுவாமிகளைத் தரிசிக்க வந்தார். அவர் வருவதைக் கொழும்பில் இருந்த பொ.இராமநாதன் என்பவர் ஆசிரியருக்குத் தெரிவித்து மௌனசுவாமிகளைத் தரிசிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று எழுதினார்.

டாக்டர் வில்ஸ் கும்பகோணம் வந்து ஆசிரியரைப் பார்த்து மௌன சுவாமிகளைப் பார்க்க வேண்டும் என்ற தம் விருப்பத்தைத் தெரிவித்தார். திரு பொ.இராமநாதன் இதுபற்றித் தமக்கு முன்பே எழுதியதாகத் தெரிவித்து, அவரை மௌனசுவாமிகளிடம் அழைத்துச் சென்றார்.

சுவாமிகள் என்றால் காஷாயம் தரித்துக் கொண்டு வந்தவர்களுடன் வேதாந்த விஷயங்களைப் பற்றிப் பேசுவார் என்று டாக்டர் வில்ஸ் நினைத்திருக்கலாம். ஆனால் சுவாமிகளைப் பார்த்தபோது அவருக்கு அளவிறந்த வியப்பு உண்டாயிற்று. கிடந்தது கிடந்த படியே வாய் பேசாமல் அவர் இருந்ததால், அப்படி ஒருவரால் எப்படி இருக்க முடியும் என்பதே டாக்டர் வில்ஸுக்கு வியப்பாக இருந்தது. புலன்களை வென்றவர்களுக்கு அப்படி இருக்கமுடியும் என்றும் இந்தியாவில் அத்தகைய ஞானிகள் பலர் உண்டு என்றும் ஆசிரியர் தெரிவித்தார். கிடைத்தற்கரிய பேறு பெற்றதாக எண்ணி டாக்டர் வில்ஸ் மகிழ்ந்து அசிரியப்பெருமானுக்குத் தம்முடைய நன்றியைத் தெரிவித்தார்.

## ‘வரந்தருவார் பாரதம்’

“வரம் தருவார் பாரதம் பார்த்திருக்கிறீர்களா? தாங்கள் பல புத்தங் களைப் பார்த்திருப்பீர்களே! தாங்கள் சேமித்து வைத்துள்ள நூல்களில் அந்தப் புத்தகம் இருக்கிறதா?” என்று ஒரு நண்பர் ஆசிரியரிடம் கேட்டார்.

கும்பகோணத்தில் ஆசிரியப்பிரான் இருந்தபோது, திருவாவடுதுறைக்கு விடுமுறை நாட்களில் போய்வருவது வழக்கமாகையால் அன்று அங்கே போய் இருந்தார். அப்போது திருவாவடுதுறை மடத்திற்குப் புதுச்சேரியிலிருந்து வந்த ஞானப்பிரகாச முதலியார் என்னும் கிறிஸ்த கனவான்தான் அப்படி ஆசிரியரிடம் கேட்டார்.

ஞானப்பிரகாச முதலியார் தமிழில் மிக்க அன்பு உடையவர். ஆயினும் அவர் கேட்ட கேள்வி ஆசிரியருக்கு வியப்பைத் தந்தது. அதை வெளிப்படக் காட்டிக் கொள்ளாமல், “நான் வில்லிபுத்தூர் ஆழ்வாரின் பாரதம் படித்திருக்

கிறேன். வில்லிபுத்தூர் ஆழ்வாரின் பிள்ளை பெயர் வரம் தருவார் என்பது மட்டும் எனக்குத் தெரியும். அவர் பாரதம் இயற்றி இருப்பதாக நான் இதுவரை கேள்விப் பட்டது இல்லை. தங்களுக்கு இந்தச் செய்தியைச் சொன்னவர் யார்?'' என்று ஆசிரியப்பிரான் கேட்டார்.

அப்போது புதுச்சேரிக் கனவான் அதைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். "கடலூரிலிருந்து வாரந்தோறும் ஒரு தமிழ் வித்துவான் புதுச்சேரிக்கு வந்து பல புதிய விஷயங்களைப் பற்றிப் பேசுவார். ஒரு தடவை அவரே சில பாடல்களைச் சொல்லி, அவை வரந்தருவார் பாரதத்தில் இருப்பதாகச் சொன்னார். அந்தப் பாடல்களுக்கு அர்த்தமும் சொன்னார்'' என்றார்.

ஆசிரியப்பெருமான், "அப்படியா? மிகவும் மகிழ்ச்சி. அவர் சொன்ன பாடல்களில் ஏதாவது ஒன்று உங்களுக்கு ஞாபகம் இருந்தால் சொல்லுங்கள்'' என்று கேட்டார்.

ஞானப்பிரகாச முதலியார், ஒரு பாடலைச் சொன்னார். "இதை நான் கவனிக்கிறேன்'' என்பதற்குமேல் ஆசிரியர் அப்போது வேறு ஒன்றும் சொல்லவில்லை. அவர் போன பிறகு ஆசிரியர் சொன்னார்: "புறநானூற்றில் உள்ள பாடலைச் சொல்லி அந்த வித்துவான் இவரை ஏமாற்றி இருக்கிறார். நான் அப்போதே சொல்லியிருப்பேன். கடலூர்ப் புலவரிடம் ஞானப் பிரகாசமுதலியார் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறார். நான் அதனை அப்போதே சொல்லியிருந்தால், அவருக்கு என்மேல் கோபமும், வருத்தமும் வந்திருக்கக்கூடும். அவர் மகிழ்ச்சியைக் குறைப்பானேன் என்று இருந்தேன். யார் வேண்டுமானாலும், எதை வேண்டுமானாலும் சொல்லிவிடுகிறார்கள். யாரும் எதையும் நம்பி விடுகிறார்கள். யாரும் கேட்டிராத பாடல் ஒன்றை மிகத் தடபுடலாகச் சொல்லி, இது வரந்தருவார் பாரதத்தில் உள்ளது என்றால் அதை யார் ஆராயப் போகிறார்கள்? இப்படித் தான் எத்தனையோ பேர்கள் பொய்யும், புரட்டும் சொல்லி ஊரை ஏமாற்று கிறார்கள்'' என்று மிகவும் வருத்தத்தோடு, தம் வேதனையை வெளிப் படுத்திக் கொண்டார்.

### *சி.வை. தாமோதரம் பிள்ளை*

யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியாவுக்கு வந்து வாழ்ந்த சி.வை. தாமோதரம் பிள்ளை அந்தக் காலத்தில் பல தமிழ் நூல்களைப் பதிப்பித்துக் கொண்டிருந்தார். தொல்காப்பியம், இலக்கண விளக்கம், இறையனாராகப் பொருள், சூளாமணி ஆகிய நூல்கள் அவருடைய பதிப்புக்களாக வெளிவந்தன.

ஆனாலும் அவருடைய பதிப்புக்கள் சிறப்பானவை என்று சொல்ல முடியாது. ஆசிரியப்பெருமானுடைய பதிப்புக்களுக்கும், அந்தப் பதிப்புக் களுக்கும் அஜகஜாந்தரம் அவர் வேறோர் இடத்தில் வேலை பார்த்துக் கொண்டே இவற்றையும் கவனிக்க வேண்டி இருந்தது. பதிப்பிக்க வேண்டு மென்ற ஆர்வத்தில் சில பண்டிதர்களின் உதவியைக் கொண்டு அவர் பதிப்பித்தார்.

தாம் பதிப்பிக்கும்போது அந்த நூல்களைப் பற்றிய செய்தியை ஆசிரியப்பெருமானுக்கு எழுதித் தெரிவிப்பார். தமக்கு ஏடுகள் வேண்டு மென்று எழுதுவார். அப்படியே ஆசிரியரும் அனுப்பி வந்தார். யுத்த காண்டம் பதிப்பிக்க வேண்டுமென்று ஒரு முறை எழுதியிருந்தார்.

பொன்னுசாமிப்பிள்ளை என்பவர் ஆசிரியரிடம் படித்தவர். மகாபாரதப் பிரசங்கம் மிகச் சிறப்பாகச் செய்வார். அவரோடு தொடர்பு கொண்டு தாமோதரம் பிள்ளை தம் நூல் ஆராய்ச்சியை நடத்தி வந்தார். அதனால் தாமோதரம் பிள்ளைக்குப் பல விளக்கங்கள் கிடைத்தன. பொன்னுசாமிப்பிள்ளைக்கும் தக்க பொருள் உதவி கிடைத்து வந்தது. இவற்றை எல்லாம் எண்ணி ஆசிரியப்பெருமான் அவ்வப்போது தாமோதரம் பிள்ளைக்குத் தம்முடைய ஏடுகளைக் கொடுத்து வந்தார். ஏடுகளைப் பார்த்து ஆராய்ந்து பதிப்பிக்கும் முறையில் எவ்வளவு அல்லல் உண்டு என்பதைத் தாமோதரம் பிள்ளை தம்முடைய நூல்களின் முகவுரையில் எழுதியிருக்கிறார். அப்படி எழுதிய முகவுரை ஒன்றில் ஆசிரியப்பெருமானை மிகவும் பாராட்டியிருக்கிறார்.

### பதிப்பாசிரியர்களின் வேண்டுகோள்

அந்தக் காலத்தில் நூல்களைப் பதிப்பிக்கும் புலவர்கள் சிலர் இருந்தார்கள். பதிப்பாசிரியர்களுக்குள் சிறந்த மாணிக்கமாகத் திகழ்ந்த ஆசிரியப்பெருமானிடம் அவர்கள் பல யோசனைகளைக் கேட்பார்கள். தங்களுடைய பதிப்பைப் பார்த்துத் திருத்தித்தர வேண்டும் என்று எழுதுவார்கள். ஆனால் தாம் ஆராய்ந்து வருகின்ற நூல்களில் ஈடுபட்டு வேலை செய்வதற்கே போதுமான நேரம் கிடைக்காததனால், அத்தகைய வேலைகளை ஏற்றுக்கொள்வதற்கு நேரம் இருப்பதில்லை. என்றாலும் தம்மால் இயன்றவரை பல யோசனைகளை எழுதுவார்; ஏட்டுப்பிரதிகளை உதவுவார்.

## 6. பழைய மரபு

அந்தக் காலத்தில் பாண்டிய நாட்டில் கோவில்களில் நாடார்கள் புகுவது இல்லை. எத்தனையோ நாடார்கள் நல்ல பழக்கங்களை உடையவர் களாகவும், சிவபக்தியில் சிறந்தவர்களாகவும் இருந்தார்கள். என்றாலும் நாடார் என்ற சாதியை எண்ணி, அவர்களைக் கோவிலுக்குள் விடுகிற பழக்கம் இல்லாமல் இருந்தது.

இராமநாதபுரம் ஜமீனைச் சேர்ந்த கிராமம் கமுதி. அங்கே மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் இருக்கிறது. நாடார்கள் அந்தக் கோவிலுக்குள் புகுந்தார்கள். மற்றவர்கள் அதைத் தடுத்தார்கள். இதனால் ஒரு கலகமே உண்டாயிற்று.

தம்முடைய ஜமீனைச் சேர்ந்த கிராமம் ஆகையால், பழைய மரபை மாற்றக்கூடாது என்ற எண்ணத்தைக் கொண்ட அரசர், அவ்வாறு கோவிலுக்குள் புகுந்த நாடார்கள் மீது ஒரு வழக்குப் போட்டார். பல காலமாக இருந்து வந்த பழக்கத்தை மாற்றுவதனால் தமக்குப் பழி வரலாம் என்ற எண்ணத்தில் அவ்வாறு செய்தார். அவருக்கே பல நாடார்கள் நண்பர்களாய் இருந்தார்கள். என்றாலும் நட்பை உத்தேசித்து மரபை மாற்றக்கூடாது என்ற உறுதியான எண்ணம் உடையவராக இருந்ததால் அந்த வழக்கைப் போட்டார்.

மதுரைச் சப் கோர்ட்டில் விசாரணை நடந்தது. டி.வரதராவ் என்பவர் அப்போது சப்-ஜட்ஜாக அங்கே இருந்தார். ஆசிரியப் பெருமானை அங்கே வந்து சாட்சி சொல்ல வேண்டுமென்று சொன்னார்கள். மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்களே, "நீங்கள் வந்து சாட்சி சொன்னால் எனக்கு மிகவும் பலமாக இருக்கும்" என்று கேட்டுக் கொண்டார். ஆசிரியப் பெருமான் அப்படியே போய்ச் சாட்சி சொன்னார். நாடார்களைப் பற்றி இழிவாகக் கூறாமல் அவர்களில் எத்தனையோ பக்தர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லி, ஆனாலும் மரபு பிறழக் கூடாது என்று வற்புறுத்தினார். அதன் பிறகு சப்-ஜட்ஜ் தீர்ப்புக் கூறினார். அந்தத் தீர்ப்பில் ஆசிரியரைப் பற்றிச் சிறப்பாக அந்த நீதிபதி சொல்லியிருந்தார்.

"இந்தச் சாட்சியை அளித்தவர் கும்பகோணம் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக இருக்கிறவர். தமிழில் உள்ள பழைய நூல்கள் பலவற்றை ஆராய்ந்து பதிப்பித்துக் கொண்டிருக்கிறவர். சிலப்பதிகாரம், சீவக

சிந்தாமணி ஆகியவற்றைப் பதிப்பித்திருக்கிறார். அந்நூல்களுக்கு உரையும் எழுதியிருக்கிறார். டாக்டர் போப் துரை முதலியவர்கள் அவருடைய புலமைத் திறத்தையும், அவரது பெருமையையும் சிறப்பாக எழுதியிருக் கிறார்கள். அவருடைய சாட்சி இந்த வழக்குக்கு மிகவும் தகுதியானதாய் இருக்கிறது. அவர் நடுநிலைமை பிறழாமல் உண்மையை உணர்ந்து சொல்கிறார். ஆகையால் அவருடைய சாட்சி மிகவும் கவனத்திற்குரியதாய் இருந்தது. இத்தகைய சிக்கலான விஷயங்களில் அத்தகைய பெரியவர் சாட்சி மிகவும் பயனுள்ளதாக இருந்தது'' என்று விரிவாக எழுதினார்.

### பழைய மேசை

ஒரு சமயம் கும்பகோணம் காலேஜில் மேசை, நாற்காலி போன்ற சில மரச்சாமான்களை ஏலம் போட்டார்கள். தியாகராச செட்டியார் பயன் படுத்திய மேசையும் அவற்றில் இருந்தது.

தமக்கு வேலை பண்ணிவைத்த தியாகராச செட்டியாரிடம் பெரிதும் நன்றியறிவுடையவர் ஆசிரியர். அவரை நினைவுகூரத் தம்முடைய வீட்டுக்குத் 'தியாகராச விலாசம்' என்று பெயர் வைத்தார்; அவருடைய வரலாற்றையும் எழுதியிருக்கிறார். ஆகவே தியாகராச செட்டியார் பல காலம் இருந்து பாடம் சொல்லும் போது, அவரது கைபட்ட அந்த மேசை ஆசிரியருக்குப் புனிதமான பண்டமாகத் தோன்றியது. அந்த மேசையும் ஏலத்திற்கு வருகிறது என்று தெரிந்தவுடன், அதை ஏலம் எடுத்துத் தம் வீட்டிற்குக் கொண்டு வந்துவிடலாம் என்று ஆசிரியர் போனார். ஆனால் ஏலம் கேட்கப் போன போதுதான், முதல் நாளே அந்த மேசையை வேறு ஒருவர் வாங்கிக்கொண்டு போய்விட்டார் என்ற செய்தி ஆசிரியருக்குக் கிடைத்தது. அதனால் ஆசிரியர் மிகவும் ஏமாற்றம் அடைந்தார்.

'அது எங்கே போயிருக்கும்? யார் அதை வாங்கிக் கொண்டு போனார்?' என்பனவற்றை எல்லாம் விசாரித்தார். பிறகு யானையடி குதிரையடித் தெருவிலுள்ள இராமசாமி நாயுடு என்பவர் அதை வாங்கிக்கொண்டு போய் இருப்பதாகக் தெரிந்தது. அதை வாங்கினவர் விலாசம் தெரிந்தவுடன், கொஞ்சம் பணம் அதிகமாகக் கொடுத்து அவரிடமிருந்து மேசையைத் தாம் வாங்கிவந்து விடலாம் என்ற தீர்மானத்தில், இராமசாமி நாயுடுவைத் தேடிச் சென்றார். அவரைச் சந்தித்து, "நீங்கள் வாங்கின விலையைவிட நான் அதிகமாகக் கொடுக்கிறேன். அந்த மேசையை எனக்குக் கொடுத்து விடுங்கள்'' என்று கேட்டார்.

"அது எப்படி? நான் எனக்கு வேண்டுமென்றுதானே அதை வாங்கி வந்திருக்கிறேன்? அதை விட்டுவிட எனக்கு மனமில்லை'' என்று சொல்லி

விட்டார் இராமசாமி நாயுடு. ஆசிரியருக்கு மிகவும் வருத்த முண்டாயிற்று. ஆயினும் மனம் தளரவில்லை. அடுத் தடுத்துப் பல நாட்கள் அவருடைய வீட்டிற்குச் சென்று கேட்டு வந்தார்.

"நீங்கள் மேசை வேண்டும் என்றுதான் வாங்கி வந்தீர்கள் இதுவோ பழைய மேசை. நீங்கள் புதியதாகவே ஒரு மேசையை வாங்கிக்கொள்ளலாம். எனக்கோ இது குண்டும் குழியுமாக இருக்கிற பழைய மேசையாகத் தோன்ற வில்லை. தியாகராச செட்டியாரின் கைபட்ட புனிதமான பூஜைப் பொருளாகத் தோன்றுகிறது. என்ன விலை சொன்னாலும் நான் தருகிறேன். தயைசெய்து அதை எனக்கு அளிக்க வேண்டும்" என்று கெஞ்சாக் குறையாகக் கேட்டார்.

இராமசாமி நாயுடு மனம் இரங்கி அந்த மேசையைக் கொடுப்பதாகத் தோன்றவில்லை. ஆசிரியர் அவர்மேல் ஒரு செய்யுளை இயற்றித் தம் விருப்பத்தைத் தெரிவித்துக் கொண்டார். வாய்ப்பேச்சுக்கு இரங்காத அவர், தம்மேல் பாடப்பெற்ற தமிழ்ச் செய்யுளைக் கேட்டவுடன், மனம் இரங்கி அந்த மேசையை ஆசிரியருக்கு விற்றுவிட முன்வந்தார். அந்த மேசையை வாங்கிக் கொண்டு வந்து தம் வீட்டில் போட்டபிறகுதான் ஆசிரியப்பிரானுக்கு ஏதோ ஒரு புதிய ராஜ்யத்தைப் பிடித்தது போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது.

### *இராமலிங்கத் தம்பிரான்*

சிதம்பரம் ஈசான மடத்தில் இராமலிங்கத் தம்பிரான் என்ற சைவத் துறவி ஒருவர் இருந்தார். அவர் பல நூல்களைப் படித்து ஆராய்ந்திருந்தார். குமரகுருபரருடைய பிரபந்தத்திரட்டையும், சிவப்பிரகாசருடைய பிரபந்தத் திரட்டையும் வெளியிட வேண்டுமென்ற ஆசை அவருக்கு இருந்தது. அவருக்குக் கிடைத்த ஏடுகள் அவருக்குத் திருப்தி அளிக்கவில்லை. சிறந்த ஏடுகள் ஆசிரியப்பெருமானிடம் இருக்கக்கூடும் என நினைத்தார். பல சமயங்களில் ஆசிரியரிடமிருந்து உதவி பெற்றிருந்ததனால் அதுபற்றித் தம் கருத்தை ஆசிரியருக்கு எழுதினார். அப்படியே ஆசிரியரும் அவற்றை அனுப்பினார்.

### *குமரகுருபரர் பிரபந்தங்கள்*

பிற்காலத்தில் திருப்பனந்தாளில் எழுந்தருளியிருந்த சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளின் விருப்பப்படி மிகச் சிறப்பான முறையில் ஆசிரியப்பிரானே குமரகுருபரருடைய பிரபந்தங்களைப் பதிப்பித் திருக்கிறார். எல்லா நூல் களையும் திருத்தமான முறையில் பதிப்பிக்க வேண்டுமென்ற ஆர்வம் அவருக்கு இருந்தது. ஆனாலும் மனிதன் எல்லைக்குள் அடங்கிய சக்தியை

உடையவன்தானே? ஆகையால் யாராவது ஏதாவது ஏட்டுச்சுவடி கேட்டால், தாம் ஆராய்ந்து கொண்டிருக்கிற நூல் அல்லாமல் இருந்தால் அவர்களுக்குத் தம்மிடம் இருந்த ஏடுகளைக் கொடுத்தும், வேண்டிய ஆலோசனைகளைக் கூறியும் உதவி புரிந்து வந்தார்.

## விழாக்களில் தலைமை

இடையிடையே தம்முடைய ஆராய்ச்சியினால் உண்டாகிற சிரமத்தைத் தீர்த்துக்கொள்ள வெளி ஊர்களுக்குப் போவது உண்டு. ஆங்காங்குள்ள தமிழ்ச் சங்கங்களில் ஆண்டுவிழா நடக்கும்போது தலைமை தாங்க ஆசிரியப் பெருமானை அழைப்பார்கள். அப்படித் தலைமை தாங்கப் போகும் இடங்களில் எல்லாம் புலவர்களோடு அளவளாவிப் பேசி எல்லோருக்கும் மகிழ்ச்சி உண்டாகும்படி செய்வார். ஆசிரியப்பெருமானுடைய பேச்சில் பலவகையான வரலாறுகள், செய்திகள், அநுபவக் கருத்துக்கள் நிரம்பி யிருக்கும். பல காலம் படித்தும், ஆராய்ந்தும் உணர்ந்துகொள்ள முடியாத பொருள் நுட்பங்களை அவரிடம் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந் தாலே உணர்ந்து கொள்ளமுடியும்.

அவர் தலைமை தாங்கச் சில இடங்களுக்குப் போகிறபோது, வேறு இடங்களில் உள்ளவர்கள் அடிக்கடி அவரைத் தம்முடைய சங்க ஆண்டு விழாவுக்கு வரவேண்டுமென்று அழைப்பார்கள். கூப்பிட்ட இடங்களுக் கெல்லாம் போய்க் கொண்டிருந்தால் தம் ஆராய்ச்சி வேலை தடைப்படும் என்பதை உணர்ந்து ஆசிரியப்பெருமான் எல்லா இடங்களுக்கும் போவதில்லை; என்றாலும் ஆராய்ச்சியால் உண்டாகும் அலுப்பைக் போக்கிக்கொள்ள எப்போதாவது சில இடங்களுக்குப் போய் வருவார். வேறு சில சமயங் களில் சிவஸ்தலங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் பண்ணி வருவார்.

தல தரிசனம் என்பது அவருக்கு மிகவும் விருப்பமான செயல். தலங்களைப் பற்றிய செய்திகளைச் சேகரிப்பதில் பேரார்வம் உடையவராக இருந்தார். ஏதேனும் தலத்திற்குச் சென்றால் அந்தத் தலத்தைப் பற்றிய வரலாறு, வடமொழி, தென்மொழியில் வழங்குகின்ற அந்தத் தலத்திலுள்ள பெருமான் பெயர், அம்பிகை பெயர், அந்தத் தல சம்பந்தமான நூல்கள் முதலியவற்றைப் பல பேரிடம் விசாரித்துத் தெரிந்து கொள்வார். அவற்றை எல்லாம் குறிப்புக்களாக எழுதி வைப்பார். இவ்வாறு சேகரித்த குறிப்புக்கள் மிக அதிகமாக இருக்கின்றன. தேவாரத்தைச் சமயம் கிடைக்கும் போது அச்சிட வேண்டுமென்ற ஆசை ஆசிரியப்பெருமானுக்கு இருந்தது. தேவாரத்தில் வரும் சொற்பொருள்களைத் தொகுத்து இரண்டு அகராதிகளை எழுதி வைத்துக்கொண்டார். தலங்களின் சம்பந்தமான செய்திகளை அப்போது

பயன்படுத்திக் கொள்ளலாம் என்று எண்ணினார். அது மட்டுமன்றித் தல புராணங்களை ஆராயும்போது அந்தச் செய்திகள் எல்லாம் பயன்பட்டன. பல தலபுராணங்களை அவர் அச்சிட்டிருக்கிறார். அந்தப் புராணங்களின் குறிப்புரையில் தாம் கேட்டறிந்தும் நூல்வாயிலாக அறிந்தும் கொண்டு தொகுத்த செய்திகளைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

### திருமானூர்க் கிருஷ்ணையர்

ஆசிரியப்பெருமானுடன் இருந்து அவருடைய நூல் ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவியவர் திருமானூர்க் கிருஷ்ணையர் என்பவர். அவர் மிகவும் புலமை உடையவர்; அயராத உழைப்பு உடையவர். ஆசிரியப்பெருமானின் பதிப்புக்களின் முகவுரையில் அவர் பெயரைப் பார்க்கலாம். அவருக்கு ஆசிரியர் தம்மால் இயன்ற பொருள் உதவியை மாதந்தோறும் செய்து வந்தார்.

தம்மைச் சார்ந்தவர்கள் நல்ல பதவிகளில் இருக்க வேண்டுமென்ற எண்ணம் எப்போதுமே ஆசிரியருக்கு உண்டு. சந்தர்ப்பம் நேரும்போது தம் மாணவர்களுக்கு உதவி செய்ய அவர் தயங்கியது இல்லை.

கிருஷ்ணையருக்கு ஏதாவது தக்க வேலை கிடைத்தால் செய்து வைக்கலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தார். பாலக்காட்டில் அரசினர் நடத்திய கல்லூரி ஒன்று இருந்தது. விக்டோரியா காலேஜ் என்று அதற்குப் பெயர். அந்த ஊரில் இருந்த செல்வராகிய பா.ஐ. சின்னசாமி பிள்ளை என்பவர் ஆசிரியப்பெருமானிடம் மிக்க பக்தி பூண்டவர். அவ்வப்போது தம்மால் இயன்ற சிறு உதவிகளைச் செய்து வருவார். அடிக்கடி கடிதங்கள் எழுதி, என்ன வேலை நடந்து கொண்டிருக்கிறது என்று விசாரித்து வருவார். பாலக்காடு நகரசபைத் தலைவராகவும் அவர் இருந்தார்.

ஒரு சமயம் அவர் ஆசிரியப் பெருமானுக்குத் தங்கள் ஊர்க் கல்லூரிக்கு ஒரு நல்ல தமிழ் பண்டிதர் வேண்டும் என்று எழுதினார். ஆசிரியப்பெருமான் ஒருவரைத் தேர்ந்தெடுத்தால் அவருக்கு நல்ல திறமை இருக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்ததனால் இப்படி எழுதினார்.

கிருஷ்ணையருக்கு ஏதாவது தக்க உத்தியோகம் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று ஆசிரியப்பிரான் நினைத்திருந்த நேரத்தில் இக்கடிதம் வந்தவுடன், இதுவும் இறைவன் திருவருள் தான் என்று எண்ணி, அவரை அங்கே அனுப்பினார்.

ஆசிரியப்பெருமானிடத்தில் இருந்து வந்தவராகையால் அவரிடம் பிள்ளை மிகவும் மரியாதையாகப் பழகினார். அதைக் கண்டு கிருஷ்ணை

யருக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. பெரிய பதவியில் இருக்கும் செல்வர் ஒருவர் தம்மிடம் அப்படிப் பழகுவதைக் கண்டு அவர் ஆசிரியப்பெருமானை நினைத்துக் கொண்டார். தமக்கு எந்தத் தகுதியும் இல்லை என்பதையும், ஆசிரியப்பெருமானின் அன்பினால்தான் இவ்வளவு சிறப்பும் தமக்குக் கிடைக்கிறது என்பதையும் அவர் நன்கு உணர்ந்தவர். ஆசிரியப்பெருமானுக்கு அவர் எழுதிய கடிதம் ஒன்றில், "முன்னம் நான் அடைந்த நன்மைகளும், இன்னும் அடையும் நன்மைகளும் தங்கள் ஆசீர்வாதத்தினால் அடைந்தனவே" என்று எழுதினார்.

திருவாவடுதுறை ஆதீனத்திற்கும், ஆசிரியப்பெருமானுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதைத் தமிழ்நாட்டில் உள்ளவர்கள் நன்கு அறிவார்கள். அவர் எழுதிய 'என் சரித்திரத்'தில் அந்தத் தொடர்பின் விரிவை உணரலாம். மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் ஆசிரியர் மாணாக்கராக இருந்த காலம் முதல் அந்த மடத்திற்கும் ஆசிரியருக்கும் இருந்த தொடர்பு மேலும் மேலும் இறுகி வந்தது.

## சாற்றுக் கவிகள்

மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் காலத்தில் பிள்ளையவர்கள் ஆதீன வித்துவானாக இருந்தார். அப்போது ஆசிரியர் அவரிடம் படித்தார். அதன்பிறகு அம்பலவாண தேசிகர் பட்டத்திற்கு வந்தார். யாராவது திருவாவடுதுறை மடத்தில் உதவிபெற வேண்டுமென்று விரும்பினால், தாமே நேரில் அணுகினால் அது கிடைக்குமோ, கிடைக்காதோ என்று எண்ணி ஆசிரியப் பெருமான் மூலமாகச் சென்றால் நிச்சயமாக உதவி கிடைக்கும் என்று தீர்மானித்து, அவருடைய உதவியை விரும்புவார்கள். அப்படிப் பெற்றவர்கள் எத்தனையோ பேர் உண்டு.

அக்காலத்தில் ஒரு நூலை ஒருவர் வெளியிட்டால் அதற்குப் பல புலவர்கள் சாற்றுக்கவி அளித்திருப்பார்கள். சில நூல்களில் நூலின் அளவைவிடச் சாற்றுக் கவிகளின் அளவு மிகுதியாக இருக்கும். ஆசிரியப் பிரானுடைய சாற்றுக்கவி இருந்தால் தம் நூலுக்குப் புகழும் சிறப்பும் ஏற்படும் எனப் பலரும் விரும்பினார்கள். பலர் அவரிடம் சாற்றுக்கவிகளை வாங்கினார்கள்.

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சபாபதி நாவலர் இந்தியாவில் வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் இவ்வாறு இங்கே இருந்தவர் பலர். 'திராவிடப் பிரகாசிகை' என்ற நூலை அவர் எழுதினார். அது ஒருவகையில் தமிழ் வரலாற்றைச் சொல்வது. அதற்கு ஆசிரியப் பிரானிடமிருந்து சாற்றுக்கவி வாங்கவேண்டும் என்பது அவர் விருப்பம். தம் விருப்பத்தைத் திருவாவடு துறை அம்பலவாண தேசிகர் மூலமாகத் தெரிவித்தார். ஆசிரியரும் சில சாற்றுக்கவிகளை எழுதிச் சபாபதி நாவலருக்கு அனுப்பினார்.

சூளைச் சோமசுந்தர நாயக்கர் என்பவர் சித்தாந்தம் என்ற பத்திரிகை நடத்தி வந்தார். அது மாதப் பத்திரிகை. தமக்கு உதவி புரிய வேண்டுமென்று அவர் கேட்கவே, ஆசிரியப்பெருமான் முடிந்த அளவு நண்பர்களிடமிருந்து உதவி தேடித் தந்தார்.

### சரம கவி

திரு சி.வை.தாமோதரம்பிள்ளை அவர்கள் 1900-ஆம் ஆண்டு ஜனவரி 1ஆம் தேதி காலமானார். பல காலம் அவரை ஆசிரியர் அறிந்தவர் ஆகையால், சரமகவி எழுதித் தர வேண்டுமென்று தாமோதரம் பிள்ளையைச் சார்ந்த இராஜரத்தினம் பிள்ளை ஆசிரியருக்கு எழுதினார். அப்படியே ஆசிரியரும் எழுதி அனுப்பினார்.

ஒருவர் இறந்து போனால் அவரைப் பற்றிய சரமகவிகளைப் பல புலவர்களை எழுதச் சொல்லி அவற்றைத் தொகுத்து வெளியிடும் பழக்கம் அந்தக் காலத்தில் மிகுதியாக இருந்தது. சில புலவர்கள் சரமகவி எழுது வதிலே சிறந்தவர் என்று புகழ் பெற்றிருந்தார்கள்.

### தமிழாசிரியர்களைத் தெரிந்தெடுத்தல்

அங்கங்கே உள்ள கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள் ஆகியவற்றின் தமிழாசிரியர் பதவிகள் காலியானால் பலர் விண்ணப்பம் போடுவார்கள். அவர்களைத் தேர்ந்தெடுக்க ஆசிரியப் பெருமானுடைய உதவியை நாடிப் பலர் வருவார்கள். அவ்வாறே புலவர்களின் தகுதியைப் பரிசோதித்து அறிந்து பல பேர்களுக்கு வேலை வாங்கித் தந்திருக்கிறார்.

சில சமயங்களில் பள்ளி மேலாளர்கள், தங்கள் பள்ளிக்குத் தமிழாசிரி யராகத் தேர்ந்தெடுக்கச் சில வினாக்களை எழுதி அனுப்பச் சொல்வார்கள். ஆசிரியரும் வினாக்கள் சிலவற்றை எழுதி அனுப்புவார். தேர்வில் கலந்து கொள்பவர்கள் எழுதிய விடைகளை எல்லாம் ஆசிரியருக்கு அனுப்பி, அவற்றைப் பார்த்து, 'இவர் தகுதி உடைவர்' என்று ஆசிரியர் எழுதினால் அதனை மறுக்க முடியாத உறுதியான தீர்ப்பாக எண்ணி, ஆசிரியப்பெருமான் தேர்ந்தெடுத்த வரையே தமிழாசிரியராக அமர்த்துவார்கள்.

அந்தக் காலத்தில் புறநானூறு முதலிய நூல்களிலிருந்து சில பாடல் களை, பி.ஏ. படிப்புக்குப் பாடமாக வைப்பார்கள் அத்தகைய சமயங்களில் பாடமாக வைக்கப் பெற்றுள்ள பாடல்களை மாத்திரம் மூலம், பழைய உரை, மாணவர்களுக்குப் பயன்படும் குறிப்புக்கள் முதலியவற்றுடன் ஆசிரியர் பதிப்பித்ததுண்டு. இவ்வாறு சிந்தாமணி விமலையார் இலம்பகம் முதலியவற்றைப் பதிப்பித்தார்.

1900-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் பாச்சிலாச்சிராமப் புராணத்தைப் பதிப்பித்தார். திருச்சி மாவட்டத்தில் உள்ள பாடல் பெற்ற தலம் அது. இப்போது திருவாசி என்று வழங்குகிறது.

## பரிபாடல் ஆராய்ச்சி

ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்ற சங்க நூல்களின் ஆராய்ச்சி நடந்து வந்தது. எதையும் அவசரமாகப் பதிப்பிப்பது அவரது இயல்பு அன்று. மிகவும் ஆழமாகச் சோதனை செய்து, ஐயம் ஏற்பட்டால் அதனை வேறு நூல்களினாலும், விசாரிக்க வேண்டி யவர்களை விசாரித்தும் அறிந்துகொண்டு, செய்திகளைத் தெரிந்து கொண்ட பிறகே பதிப்பிப்பது வழக்கம்.

புறநானூற்றின் முகவுரையில் பரிபாடலை வெளியிட எண்ணி யிருப்பதாக ஆசிரியர் எழுதியிருந்தார். அதனைப் பார்த்து, கொழும்பிலிருந்து பொ.குமாரசாமி முதலியார் என்ற செல்வர் அந்த நூலை வெளியிட்டால் தாம் பொருளுதவி செய்வதாக எழுதினார். அவர் அப்படி எழுதியதைக் கண்டவுடன் அந்த நூலை வெளியிட ஆசிரியர் துணியவில்லை. யார் எவ்வளவு அவசரப்பட்டாலும், தூண்டினாலும் நன்றாக ஆராய்ச்சி செய்து தமக்கு முழுத் திருப்தி உண்டானலொழிய எதையும் வெளியிடுவது அவர் வழக்கம் அன்று.

# 7. பிள்ளையவர்களும் அவர்கள் மாணாக்கர்களும்

### பிள்ளையவர்கள் வரலாறு

ஆசிரியருக்குத் தம் ஆசிரியர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் வரலாற்றை விரிவாக எழுத வேண்டுமென்ற எண்ணம் தோன்றி வளர்ந்து வந்தது. அதற்கான குறிப்புக்களைத் தொகுத்து வந்தார். பிள்ளையவர்கள் வாழ்ந்த காலத்தில் அவரோடு சேர்ந்து பழகியவர்கள் சிலர் அங்கங்கே இருந்தார்கள். பிள்ளையவர்களைப் பற்றித் தெரிந்த செய்திகளை எல்லாம் சேகரித்துத் தொகுக்கவேண்டுமென்ற எண்ணம் உண்டானதால் சுதேச மித்திரன் பத்திரிகை வாயிலாக, தம்முடைய எண்ணத்தை வெளிப்படுத்தி, பிள்ளையவர்களைப் பற்றிய செய்திகள் தெரிந்திருந்தால் எழுதி அனுப்ப வேண்டுமென்ற வேண்டுகோளை அறிவித்திருந்தார். அது 1900-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 8-ஆம் தேதி வெளிவந்தது. அந்த வேண்டுகோளுக்கு எதிர்பார்த்த அளவு பலன் கிடைக்கவில்லையென்றாலும் கிடைத்த சில செய்திகளைப் பொன்னேபோல் போற்றி வந்தார்.

### சவராயலு நாயகர்

புதுச்சேரியில் இருந்த சவராயலு நாயகர் என்பவர் மட்டும் 22.10.1900 அன்று ஒரு கடிதம் எழுதினார். "ஏறக்குறைய நாற்பத்தைந்து வருஷத்திற்குமுன் நானும் தியாகராச செட்டியாரும் வேறு சிலரும் அந்த மகாவித்துவானிடத்தில் வாசித்தோம். அவருக்கு என் மட்டிலிருத்த பக்ஷத்தையும் மதிப்பையும் தாங்கள் அறியும் படிக்கும் பலசமயத்தில் அவரும் தியாகராச செட்டியாரும் வல்லூர்த் தேவராச பிள்ளை முதலியவர் களும் என்பேரில் பாடியிருக்கும் பாடல்களைத் தாங்கள் காணும்படிக்கும் நான் 1869-இல் அச்சிட்டிருக்கும் ஓர் புத்தகத்தை இன்று தங்களுக்கு இனாமாகத் தபால் மார்க்கமாக அனுப்பியிருக்கிறேன்".

"இப்புத்தகத்தில் பற்பல இடங்களில் பிள்ளையவர்கள் பெயர் இருப்பதால் ஆங்காங்குக் குறிப்பிட்டிருக்கிறேன். ஆகையால் முதல் ஏடு தொடங்கிக் கடைசி ஏடு வரையில் பார்வையிடும்படித் தங்களைக்



சவராயலு நாயகர்

கோருகிறேன். இதனால் அவருடைய மாணக்கர்களில் அநேகரைத் தாங்கள் தெரிந்து கொள்ளவும் கூடும்''.

''தாங்கள் எழுதும் அவர் சரித்திரத்தில் அவர் பேரில் பாடியிருக்கும் பாடல்களையும் பல சமயத்தில் அவருக்கு நான் செய்த தோத்திரங்களையும் அவர் என்பேரில் கூறியிருக்கும் தமிழ் மாலை முதலிய பற்பல பாடல்களையும் நன்றாக எடுத்துக் காண்பிக்கும்படி தங்களை நிரம்பவும் பிரார்த்திக்கிறேன்'' என்று அதில் எழுதினார்.

பிள்ளையவர்கள் பெருமையோடு தம் பெருமையும் உடன் வெளிவர வேண்டுமென்ற ஆசை அவருக்கு இருந்ததை இக்கடிதம் காட்டுகிறது.

### தலங்களைப்பற்றிய செய்திகள்

அந்தக் காலத்தில் சிவாலயங்களில் ருத்திர கணிகையர் இருந்து சில தொண்டுகளைச் செய்து வந்தார்கள். அதனால் அவர்களுக்குத் தேவரடியார் என்ற பெயர் அமைந்தது. அது பிற்காலத்தில் வேறு விதமாக மாறிவிட்டது.

ருத்திர கணிகையர் தொண்டுகளில் தட்டெடுப்பது என்பது ஒன்று; ''ஆலவாய்ச் சொக்கருக்குத் தட்ட தெடுக்கும் தளியிலார்'' என்று விறலிவிடு தூதில் வருகிறது. அவர்கள் பாடும் பாடல்களில் தல சம்பந்தமான பல செய்திகள் இருக்கும். இறைவன் இறைவிக்குரிய பெயர்கள் வடமொழியில் வழங்கி வந்தாலும் அவற்றிற்குச் சரியான தமிழ்ப் பெயர்கள் அந்தப் பாடல்களில் இருக்கும். இதனை அறிந்தவர் ஆசிரியர்.

ஒரு சமயம் ஆசிரியப்பிரான் புதுக்கோட்டைக்குச் சென்றிருந்தார். அதற்கு அருகிலுள்ள குடுமியாமலை சென்று தரிசனம் செய்ய எண்ணினார். அக்காலத்தில் புதுக்கோட்டையில் இருந்த ரகுநாதையர் என்பவருடன் அவருடைய காரில் குடுமியாமலை சென்றார். சுவாமி தரிசனம் செய்த பிறகு, ''இந்தத் தலத்துக்கு ருத்திர கணிகையர் இருக்கிறார்களா?'' என்று கேட்டார். ''இருக்கிறார்கள்'' என்று அங்கிருந்தவர்கள் சொன்னார்கள். ''அவர்களில் வயசானவர் யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்டார். ''இருந்தால் அவரை இங்கே வரும்படி சொல்ல வேண்டும்'' என்றும்

சொன்னார். "எதற்காக இப்படிக் கேட்கிறார்?" என்று யாருக்கும் ஒன்றும் விளங்கவில்லை.

ஒரு கிழ ருத்திர கணிகை வந்தாள். "அம்மா, உனக்குத் தட்டெடுக்கும் போது பாடும் பாட்டு தெரியுமா? தெரிந்தால் சொல்" என்று ஆசிரியர் சொன்னார். அந்த அம்மாள் தனக்குத் தெரிந்த பாடல்களைச் சொன்னாள். அவற்றை ஆசிரியர் குறித்துக் கொண்டார். அந்த அம்மாளுக்கு ஒரு ரூபாய் கொடுத்தனுப்பினார் பிறகு உடன் இருந்தவர்களைப் பார்த்து, "இப்போது வர வரப் பழைய பழக்கங்களெல்லாம் மறைந்து வருகின்றன. தல சம்பந்த மான பல பழைய வரலாறுகள் சொல்வார் இல்லாமல் மறைந்துபோய் விடுகின்றன. இந்த மாதிரி உள்ள தாசிகள் பாடல்களில் தல சம்பந்தமான குறிப்புக்கள் இருக்கும். அவை பல காலமாகப் பரம்பரை பரம்பரையாக வந்திருப்பவை. இப்போதெல்லாம் அவற்றைப் பாடுகிறவர்கள் குறைவாகப் போய்விட்டார்கள் என்று சொல்லி வருந்தினார்".

தலங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஆசிரியருக்கு ஈடுபாடு இருந்தமை யினால் யாராவது எந்தத் தலத்தைப் பற்றியாவது விவரம் வேண்டுமென்று சொன்னால் ஆசிரியிடம் வந்துதான் கேட்பார்கள். எங்கே கும்பாபிஷேகம் நடந்தாலும் பத்திரிகை அச்சிடுவதற்கு ஆசிரியப்பெருமானை எழுதித் தரும்படியாக வந்து கேட்பார்கள். அவ்வாறு ஆசிரியப் பெருமான் எழுதிக் கொடுத்த கும்பாபிஷேகப் பத்திரிகைகள் பல.

எந்தத் தலத்துக்கு சென்று தரிசித்தாலும் ஆசிரியப்பெருமான் மூர்த்தி களைத் தரிசிப்பதோடு வருவதில்லை. அந்தத் தலத்தின் சிறப்பு, மூர்த்தி களின் சிறப்பு, அங்கு வாழ்ந்திருந்த பக்தர்களின் வரலாறு ஆகியவற்றைத் தக்கவர்களிடம் கேட்டுத் தெரிந்து குறித்துக் கொள்வார். அந்தத் தலத்து மூர்த்திகளின் திருநாமங்கள் வடமொழியிலும் தமிழிலும் எவ்வாறு வழங்கு கின்றன என்பதைத் தெரிந்து கொள்வார். தேவார ஆராய்ச்சிக்கு அவை பயன்படும் என்பது அவருடைய கருத்து.

தேவாரப் பதிப்பில் மாயூரம் தேவாரத்தில், "அஞ்சொலாள் உமை பங்கன்" என்று வருகிறது. அந்தத் தலத்து அம்பிகையின் திருநாமம் அபயாம்பிகை என்பது. அது தமிழில் அஞ்சலை என வழங்கும்; அந்தப் பெயரைப் பல பெண்கள் வைத்துக் கொண்டிருப்பார்கள். இவற்றை யெல்லாம் அறிந்த ஆசிரியர் தேவாரப்பதிகத்தின் சரியான பாடம் 'அஞ்சலாள் உமை பங்கன்' என்று தெரிந்து கொண்டார். அஞ்சலாள், அஞ்சலை, அபயாம்பிகை மூன்றும் ஒரே பொருள் உடையன.

### ஏமாற்றம்

ஆசிரியப்பெருமான் ஏட்டுச்சுவடிகளைத் தேடித் தொகுப்பதில் மிகவும் ஆர்வம் உடையவர் என்பதை அறிந்த பலர் தம்மிடம் இன்ன இன்ன சுவடிகள் இருக்கின்றன என்று எழுதுவார்கள். பணம் அனுப்பினால் அவற்றை அனுப்புவதாகவும் தெரிவிப்பார்கள். ஆசிரியரும் எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ என்ற எண்ணத்தினால் அவர்கள் கேட்ட பணத்தை அனுப்புவார். ஆனால் பல சமயங்களில் அனுப்பிய பணத்திற்கு ஒரு பயனும் கிடைத்த தில்லை.

ஒரு சமயம் ஒரு தமிழ்ப்புலவர் தம்மிடம் 'சாப புராணம்' என்ற சுவடி இருப்பதாக எழுதியிருந்தார். ஆசிரியர் அவருக்குச் சிறிது பணம் அனுப்பி, அதை அனுப்பினால் தாம் அதைப் பார்த்து விட்டுத் திருப்பி அனுப்பி வைப்பதாக எழுதினார்.

சிலநாள்கள் கழித்து அவரிடமிருந்து அந்த நூல் வந்தது. அது எந்தச் சாபத்தைப் பற்றிய புராணமோ என்ற எண்ணத்தோடு அந்த ஏட்டுச் சுவடியை ஆசிரியர் பார்த்தார். அது 'சாப புராணம்' அன்று; 'சரப புராணம்'. சிவபெருமான் சரப மூர்த்தியாக எழுந்தருளி அருள்பாலித்தார் என்பது ஒரு புராணம் வரலாறு. அந்தச் சரப மூர்த்தியைப்பற்றிய புராணம் அது. உண்மை தெரிந்த பிறகு அது சாப புராணமாக இல்லாவிட்டாலும் சரப புராணமாக இருந்ததனால் ஒருவகையில் திருப்தி அடைந்தார்.

இப்படியே தம்மிடம் தமிழ்நெறி விளக்கம் இருக்கிறதென்றும், வளையாபதி இருக்கிறதென்றும், வேறு சில அரிய நூல்கள் இருக்கின்றன என்றும் எழுதி ஆசிரியரிடம் பணம் பறித்தவர் பலர் உண்டு.

### தமிழ்த்தாயின் அணிகள்

திருச்சிராப்பள்ளியில் எஸ்.பி.ஜி. ஹைஸ்கூல் என்ற உயர் நிலைப் பள்ளி இருந்தது. அங்குள்ள செந்தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு 1901-ஆம் ஆண்டு ஆசிரியப்பெருமானை அழைத்தார்கள்.

அந்த விழா 20.06.1901 இல் நிகழ்ந்தது. அப்போது ஆசிரியர் தமிழ்த்தாயின் பெருமையை எடுத்துச் சொல்லி, தமிழ் நூல்கள் எல்லாம் அந்தப் பெருமாட்டியின் அணிகலன்களாக விளங்குகின்றன என்று நயம் படப் பேசினார். அதை மிகவும் பாராட்டி, ஞானபோதினி என்ற பத்திரிகை எழுதியது.

"தமிழ்த்தாயாகிய அணங்குக்குச் சிந்தாமணியே மார்பு மணியாக நிலவுகிறது சிலப்பதிகாரமே காற்சிலம்பு. இயலிசை நாடகம் என்பனவே

அந்தச் சிலம்பின் ஒலி. மணிமேகலையும், மதுரைக்காஞ்சியும் தண்டமிழ்த் தாயின் இடையணிகள் காதிலணியும் குண்டலமே குண்டலகேசி. கை வளையே வளையாபதி. சூளாமணியே முடியில் தரிக்கும் மணி. வெண்பா மாலை வாடாத பூமாலை. தமிழ்ச் செய்யுட்களில் அமைந்திருக்கிற சீர் முப்பதும் தண்டமிழ்த் தாய்க்கு வந்த சீர்கள். பொன்வண்ணத் தந்தாதி அந்தப் பெண்ணின் வண்ணம். கலைகள் அறுபத்து நான்கும் அந்தப் பெண் அணங்கு தரிக்கும் ஆடைகள். திருவாசகம், திருவாய்மொழி என்பன தமிழணங்கின் வாய்மொழி."

இப்படி ஆசிரியர் எடுத்துச் சொன்ன கருத்துக்களைக் கேட்டுப் பலருக்கும் மிக்க வியப்பு உண்டாயிற்று. அக்காலத்தில் இந்தப் பழைய நூல்களைப் பற்றி மிகுதியாக அறிந்தவர்கள் குறைவு. இப்போது இதையே விரித்துப் பலபேர் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். முதல் முதலாக இந்தக் கற்பனையை ஆசிரியப்பெருமானே திருச்சிராப்பள்ளியில் வெளியிட்டார்.

### நல்ல சகுனம்

ஒரு நாள் ஒரு முக்கியமான காரியமாக ஒருவரைச் சென்று ஆசிரியர் பார்க்க வேண்டியிருந்தது. அதற்காக ம.வீ. இராமானுஜாசாரியாரை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். தமிழில் பாரதம் முழுவதையும் பலரைக் கொண்டு மொழிபெயர்க்கச் செய்து செப்பஞ் செய்து வெளி யிட்டவர் அவர்; ஐயரவர்களிடம் சில நூல்களைப் பாடம் கேட்டவர்.

வீட்டை விட்டு வெளியே காலை வைத்தவுடன் வீதியில், ஒற்றைப் பிராமணர் வந்தார். அப்படி வந்தால் அதை அபசகுனம் என்று சொல் வார்கள். ஆகையால் இராமானுஜாசாரியார், "இப்போது புறப்பட வேண்டாம். இன்னும் சிறிது நேரம் கழித்துப் புறப்படலாமே!" என்று சொல்லித் தயங்கினார்.

"ஏன்?" என்று ஆசிரியர் கேட்டார். "சகுனம் சரியாக இல்லை" என்று அவர் சொல்ல, "என்ன சகுனம்?" என்று கேட்டார்.

"இதோ நம் எதிரில் ஒற்றைப் பிராமணர் வருகிறார். அதனால் தான் சொன்னேன்" என்றார் இராமானுஜாசாரியார்.

"அவரைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நாம் போய் நம் காரியத்தை வெற்றியாகவே முடித்துக்கொண்டு வரலாம். போகலாம், வாருங்கள்" என்று இராமானுஜாசாரியாரை அழைத்துக்கொண்டு ஆசிரியர் சென்றார்.

போன இடத்தில் அந்த அன்பர் இருந்தார். சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லி, என்ன காரியமாகச் சென்றாரோ அதற்கு வேண்டிய

ஏற்பாடுகளை எல்லாம் பண்ணிவிட்டு ஆசிரியப் பெருமான் இராமானுஜாசாரியாரோடு தம் இல்லத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

வந்தபிறகு ஆசிரியர் இராமானுஜாசாரியாரிடம் சொன்னார்; "நாம் புறப்பட்டபோது சகுனம் சரியாக இல்லை என்றீர்களே; இப்போது என்ன குறை வந்துவிட்டது? எல்லாம் சரியாகத் தானே முடிந்திருக்கிறது? நான் அப்போது அந்தச் சகுனத்தைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று சொன்னது சரியாயிற்று அல்லவா?" என்று கேட்டார்.

"உங்களுடைய தவத்தினால் அபசகுனம் கூட உங்களுக்கு ஒன்றும் செய்வதில்லை" என்றால் இராமானுஜாசாரியார்.

"அது அல்ல காரணம். எதிரே வந்த பிராமணரை எனக்கு நன்றாகத் தெரியும். கள் குடம் எதிரே வந்தால் நல்ல சகுனந்தானே?" என்று கேட்டார்.

"பிராமணர்தாமே வந்தார்? கள்குடம் எங்கே வந்தது?" என்று சொல்லி இராமானுஜாசாரியார் விழித்தார்.

"எதிரே வந்த பிராமணர் எப்போதும் கள்ளில் நீந்திக் கொண்டு தான் இருப்பார் என்பது எனக்கு முன்பே நன்றாகத் தெரியும். அவரே கள் குடந்தான். ஆகவே, அவர் வந்ததை நல்ல சகுனம் என்று நினைத்தேன்" என்றார் ஆசிரியர். இராமானுஜாசாரியார் சிரித்தார்.

### பிள்ளையவர்களைப் பற்றிய சொற்பொழிவு

பிள்ளையவர்களுடைய வரலாற்றை எழுத வேண்டுமென்ற ஊக்கம் யாராவது வரும்போதெல்லாம் ஆசிரியப்பெருமானிடம் வெளியாயிற்று. எங்கே போனாலும், யாருடன் உரையாடினாலும் பிள்ளையவர்களைப் பற்றிய செய்திகளைச் சொல்லாமல் இருக்கமாட்டார். ஒரு மணி நேரம் பிள்ளையவர்களைப் பற்றி எதுவும் சொல்லாமல் பேச வேண்டுமென்று நிபந்தனை விதித்தால் அது அவரால் முடியாத காரியம்.

பிள்ளையவர்களைப் பற்றித் தம்மிடம் வருபவரிடமெல்லாம் அவ்வப் போது சில செய்திகளைச் சொன்னாலும், அவரைப்பற்றி முழுமையாகப் பலரும் தெரிந்து கொள்ளும்படி செய்ய வேண்டுமென்ற அவா ஆசிரியருக்கு இருந்தது. ஒரு பெரிய கூட்டத்தில் பிள்ளையவர்களைப்பற்றிச் சொற் பொழிவு ஆற்ற வேண்டுமென்று எண்ணினார். அதனை அறிந்த அன்பர்கள் கும்பகோணம் போர்ட்டர் ஹாலில் அவரைப் பிள்ளையவர்கள் பெருமையைப் பற்றிப் பேச ஏற்பாடு செய்தார்கள்.

1909 செப்டம்பரில் கும்பகோணம் போர்ட்டர் டவுன் ஹாலில் பிள்ளையவர்கள் வரலாற்றைப் பற்றி விரிவாகச் சொற்பொழிவு ஆற்றினார்.

பிள்ளையவர்களைப் பற்றி அதிகம் தெரியாதவர்கள் கூட அதைக் கேட்டு, "அவர் கம்பரைப் போன்றவராக இருப்பார் போலும்!" என்று அந்தக் கவிஞர் பெருமானைப் பலரும் பாராட்டத் தொடங்கினார்கள். அப்படிப் பாராட்டும் போதெல்லாம் ஆசிரியப் பெருமானுக்கு எத்தனை பெருமை உண்டாயிற்று என்று சொல்லி முடியாது.

### 'பணம் முன்பே வந்துவிட்டது'

1899-ஆம் ஆண்டில் சில நாட்கள் ஆசிரியர் உடம்பு சுகமில்லாது துன்புற்றார். காய்ச்சலும், இருமலும் அவரை மிகவும் துன்புறுத்தின. கல்லூரிக்குப் போகவும் முடியவில்லை. போனாலும் பாடம் சொல்ல இயல வில்லை. அவர் இருமுவதைக் கண்டு, மாணவர்கள், "நீங்கள் இன்று பாடம் சொல்லவேண்டாம். பின்னால் எல்லாவற்றையும் கேட்டுக் கொள்கிறோம். தயை செய்து சும்மா இருங்கள்" என்று கேட்டுக் கொண்டார்கள். தம்முடைய கடமையைச் சரிவரச் செய்ய முடியவில்லையே என்ற வருத்தம் ஆசிரியருக்கு உண்டாயிற்று.

அந்தக் காலத்தில் கும்பகோணம் நகரசபை மருத்துவமனையில் நெடுங்காடி என்பவர் தலைமை மருத்துவராக இருந்தார் ஆசிரியப் பெருமான் அவரிடம் சென்று தம் உடம்பைக் காட்டினார். அவர் ஜுரத்திற்கும் இருமலுக்குமான மருந்து, மாத்திரைகளை ஒரு வாரத்திற்குக் கொடுத்தார். ஆசிரியரின் உடம்பு குணமாகிவிட்டது. தம்முடைய வேலைகளுக்குப் பெருந்தடையாக இருந்த நோய் அவ்வளவு சீக்கிரம் நீங்கியவுடன் ஆசிரியருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. டாக்டர் நெடுங்காடியைப் போய்ப் பார்த்து நன்றி தெரிவித்து வரவேண்டும், தம்மால் முடிந்த அளவு கொஞ்சம் பணமும் கொடுத்து வரவேண்டும் என்று நினைத்து, டாக்டர் ஓய்வாக இருக்கும்போது அவரைப் போய்ப் பார்த்தார்.

"இப்போது உடம்பு நன்றாகத் தேவலையா? உங்கள் வேலை தடையின்றி நடக்கின்றதா?" என்று டாக்டர் கேட்டார்.

"நான் நோயாளியாக உங்களிடத்தில் வந்தேன். உங்கள் மருந்தினால் இப்போது பூரண குணமடைந்து விட்டேன். அதற்காகத் தான் உங்களைப் பார்த்து என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள வந்திருக்கிறேன். தாங்கள் என்னிடமிருந்து எதையும் எதிர்பார்க்க வில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் நான் கடனாளியாக இருக்கக் கூடாதல்லவா? என் கடமையைச் செய்யக் காணிக்கை செலுத்திப் போக வந்திருக்கிறேன்" என்று சொல்லிப் பணத்தைக் கொடுக்கப் போனார். அப்போது டாக்டர் அதைத் தடுத்துவிட்டார்.

"அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் பணம் எனக்கு முன்பே வந்துவிட்டது. இப்போது நீங்கள் ஒன்றும் கொடுக்க வேண்டாம்" என்றார்.

"தாங்கள் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறதே! நான் யாரிடமும் பணம் அனுப்பவில்லையே! எனக்காக யார் வந்து கொடுத்தார்கள்? யாரும் கொடுத்தனுப்பியதாகச் சொல்லவில்லையே தயை செய்து தாங்கள் இந்தப் பணத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்" என்று ஆசிரியர் மிக்க பணிவோடு வேண்டிக் கொண்டார்.

"இல்லை, இல்லை. எனக்குப் பணம் வந்துவிட்டது" என்று மறுபடியும் டாக்டர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"தாங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. சற்று விளக்கமாகச் சொல்லவேண்டும்" என்று ஆசிரியர் கேட்டுக் கொண்டார்.

"நான் சொல்வது உண்மைதான். தெளிவாகச் சொல்கிறேன் திருப் பனந்தாள் மடத்திற்கு நான் சில சமயம் போவேன். மடாதிபதிக்குச் சின்ன நோய் என்றாலும் அங்கிருந்து எனக்கு ஆள் வந்து விடும். உடனே நான் மடாதிபதியைப் போய்ப் பார்த்துச் சிகிச்சை செய்வேன். என்னுடைய சிகிச்சைக்காக மட்டுமன்றி, நான் தங்களுக்குத் தெரிந்தவன் என்பதை அவர்கள் அறிந்துகொண்டு அளவுக்கு மேலாகவே பணம் கொடுப்பார்கள். அதை நான் தங்களுக்காகக் கொடுத்ததாகவே எண்ணி வைத்துக் கொண்டிருக் கிறேன். இப்போது தங்களுக்குச் சிகிச்சை அளித்தேன் என்பதனால் மேலும் என் பெருமைதான் மிகுதியாயிற்று. எனக்குச் சேர வேண்டியது முன்பே வந்து சேர்ந்து விட்டது என்று அதனால்தான் சொல்கிறேன்" என்றார் டாக்டர்.

டாக்டருடைய பெருந்தன்மையை அறிந்து மகிழ்ந்த ஆசிரியப் பெருமானுக்கு அதற்கு மேல் என்ன சொல்வது என்று ஒன்றும் தோன்ற வில்லை. தம் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு திரும்பி விட்டார்.

### திருமானூர்க் கிருஷ்ணையருக்குச் செய்த உதவி

கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராக இருந்த ஆர்.வி.சீநிவாசையாரை 'யூக்ளிட்' சீநிவாசையர் என்பார்கள். அவர் பெரிய கணிதமேதை. கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராகச் சேருவதற்குமுன் ஆசிரியப்பெருமானைப் பரீட்சை செய்த அன்பர்களில் ஒருவர். 1901-ஆம் ஆண்டிற்குப்பிறகு அவர் ரெவின்யூ போர்டில் செயலாளராக வந்துவிட்டார்.

அவர் காலத்தில் ஜமீன்தார்களுடைய பிள்ளைகள் எல்லாம் படிப்பதற்காக ஒரு தனிப் பள்ளிக்கூடம் சென்னையில் பூந்தமல்லிச் சாலையில் நிறுவப் பெற்றது. அதற்கு மாரிசன் என்பவர் தலைவராக இருந்தார்.

அந்தப் பள்ளிக்கூடத்தில் தமிழைக் கற்பிக்க வேண்டுமென்று எண்ணிய சீநிவாசையர் ஆசிரியப்பெருமானுக்கு எழுதினார்; "இந்தப் பள்ளிக்கு ஒரு

தமிழாசிரியர் வேண்டும். ரூபாய் 60-க்குக் குறையாமல் மாதச் சம்பளம் கொடுக்கலாம்'' என்று எழுதினார். அந்தக் காலத்தில் ரூ.60 என்பது மிகப் பெரிய தொகை.

ஆசிரியப்பெருமானுக்கு அப்போது பாலக்காட்டில் பணியாற்றிக் கொண்டிருந்த திருமானூர்க் கிருஷ்ணையர் நினைவுதான் வந்தது. அவர் ஆசிரியருடைய நூற்பதிப்புக்களுக்கு உடனிருந்து உதவியவர். 'அவர் இந்தப் பள்ளிக்கூடத்தில் வந்து அமர்ந்தால், அவருக்கு அதிக ஊதியம் கிடைப்பதோடு, நம் ஆராய்ச்சிக்கு உதவியாக அவர் இருப்பதற்குரிய சந்தர்ப்பம் கிடைக்குமே' என்று எண்ணினார். ஆகவே, திருமானூர்க் கிருஷ்ணையரை வருவித்து அந்தப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக அமர்த்தினார். கிருஷ்ணையருக்கும் ஆசிரியப்பிரானோடு மீண்டும் சேருவதற்கான வாய்ப்புக் கிடைத்ததில் அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

### பாயசத்துக்காகத் தாமதம்

1899-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஆசிரியர் இராமநாதபுரத் திற்குப் போயிருந்தார். பாண்டித்துரைத் தேவர் அவர்களிடம் அளவளாவி மகிழ்ச்சி யுற்றார். மறுநாள் அங்கேயிருந்து புறப்பட வேண்டியிருந்தது. அங்கிருந்து மதுரை வரைக்கும் வண்டியில் போகவேண்டும்; ரெயில் வசதி இல்லாத காலம் அது.

ஆசிரியரைப் பாண்டித்துரைத் தேவர் மதுரை வரைக்கும் கொண்டு போய் விடுவதற்கு வண்டி ஏற்பாடு செய்ததோடு, இரண்டு பணியாளர் களையும் உடன் அனுப்பி வைத்தார்.

இராமநாதபுரம் சம்ஸ்தானத்தைச் சேர்ந்த சத்திரங்கள் பல அங்கங்கே இருந்தன. ஆசிரியருடன் வந்த பாண்டித்துரைத் தேவருடைய ஆட்கள் அங்கங்கே சத்திர விசாரணைக்காரரிடம் ஆசிரியர் சேதுபதி மன்னருக்கு மிகவும் வேண்டியவர் என்பதைச் சொல்லி அவருக்குத் தக்க உபசாரங்கள் பண்ணும்படி ஏற்பாடு செய்தார்கள்.

ஒரு நாள் இடையில் ஓர் ஊருக்கு வந்தபோது இருட்டிவிட்டது. மேற்கொண்டு பயணம் செய்வதற்கு அலுப்பாக இருந்ததனாலும் வசதிக் குறைவினாலும் ஆசிரியரும் அவருடன் வந்தவர்களும் அந்த ஊர்ச் சத்திரத் திலேயே தங்கினார்கள். மறுநாள் காலையில் புறப்படலாம் என்ற எண்ணத் தோடு தங்கினார்கள்.

இராமநாதபுரத்திலிருந்து வந்திருந்த ஆட்கள் சத்திர விசாரணைக் காரரிடம் ஆசிரியரைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். அவர் எல்லோ ருக்கும் உணவு தயாரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானார். எட்டு மணிக்கு ஏற்பாடு செய்யத் தொடங்கியவர் ஒன்பது மணியாகியும் உணவு

அளிக்கவில்லை. மணி பத்தும் ஆகிவிட்டது. எல்லோருக்கும் நல்ல பசி; பயணக் களைப்பினால் தூக்கமும் கண்ணைச் சுழற்ற ஆரம்பித்தது.

அப்போது ஆசிரியர் சத்திர விசாரணைக்காரரைக் கூப்பிட்டு, "நெடுநேரம் ஆகிவிட்டது. வெறும் சாதம் குழம்பு இருந்தால்கூடப் போதும். வேறு அதிகமாக ஒன்றும் வேண்டாம். இராத்திரி வேளை தானே? சாப்பிட வரலாமா?" என்று கேட்டார்.

அவர் முதலில் கொஞ்சம் தயங்கினார். "சமையல் எல்லாம் தயாராகி விட்டது. ஐயா அவர்கள் முதல்முறையாக வந்திருக்கிறீர்கள். பாயசம் இல்லாமல் உணவு போடலாமா? பாயசத்திற்குப் பால் வாங்கி வரச் சொல்லி அப்போதே அனுப்பிவிட்டேன். பாயசம் இல்லாமல் சாப்பாடு போட்டேன் என்று மகாராஜாவுக்குத் தெரிந்தால் என்னைக் கடுமையாகக் கோபித்துக் கொள்வார். இரவு நேரம் ஆனதால் பால் வாங்கிவரப் போனவன் இன்னமும் வரவில்லை. அவன் வந்தவுடன் இலை போட்டுவிடுகிறேன்; கொஞ்சம் காத்திருக்க வேண்டும்" என மிக்க பணிவாக வேண்டிக் கொண்டார்.

"நாங்கள் காத்திருப்போம். ஆனால் எங்கள் பசியும் தூக்கமும் காத்திருக்கமாட்டோம் என்கின்றன. பாயசம் இல்லாவிட்டாலும் போகிறது. நீங்கள் இருப்பதைப் போடுங்கள். பசிக்கு எந்த உணவாக இருந்தாலும் அமிர்தந்தான்" என்று வற்புறுத்தி, பாயசம் இல்லாமல் அன்று அங்கே கிடைத்த உணவை உண்டார். ஆனாலும் சத்திரத்தில் இருந்தவருக்கு, 'பாயசம் இன்றி இந்தப் பெரியவருக்குச் சாப்பாடு போடவேண்டி நேர்ந்ததே' என்ற குறை இருந்தது. "நீங்கள் இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். மகாராஜாவைச் சந்திக்கும்போது இங்கே எல்லா விதமான உபசாரமும் உணவுகளும் கிடைத்தன என்று சொல்லுகிறேன்" என்று ஆசிரியர் சொல்லவே, சத்திரத்து அதிகாரி அதைக் கேட்டு ஆறுதல் பெருமூச்சுவிட்டார்.

## இ.வை. அனந்தராமையர்

ஆசிரியர் புறநானூற்றுப் பதிப்பு முடிந்த பிறகு பிள்ளையவர்கள் இயற்றிய புராணங்களை எல்லாம் வெளியிட வேண்டிய முயற்சி களைச் செய்து வந்தார். அப்போது இ.வை.அனந்தராமையர் என்பவர் ஆசிரியருடன் இருந்து மிக்க உதவி செய்தார்; இடையாற்று மங்கலத்தில் பிறந்து, தமிழ் நன்கு படித்துச் செய்யுள் இயற்றும் ஆற்றலையும் பெற்றவர் அவர். ஆசிரியர் தம்மாலான உதவிகளை அவருக்குச் செய்து கொடுத்தார்; ஒரு பள்ளிக்கூடத்தில் வேலையும் வாங்கி வைத்தார்.

பிற்காலத்தில் இந்த அனந்தராமையரே சென்னை மாநிலக் கல்லூரியில் ஆசிரியர் அவர்களுக்குப் பின் தமிழாசிரியராக இருந்தார். தாமும் தமிழ் நூல்களைப் பதிப்பிக்க வேண்டும் என்ற விருப்பம் அவருக்கு உண்டாயிற்று.

அதற்குரிய தகுதியும் இருந்தது. முன்பே சி.வை.தாமோதரம் பிள்ளை கலித்தொகையைப் பதிப்பித்திருந்தாலும் அது திருத்தமாக இல்லை. ஆகவே அதைப் பதிப்பிக்கத் தொடங்கினார். ஆசிரியரிடம் பழகியவரா தலின் அவர் பதிப்பிக்கும் முறையையே மேற்கொண்டு அந்த நூலைப் பதிப்பித்தார். அதன் பிறகு ஐந்திணை எழுபது என்பதையும் வெளியிட்டார்.

### *தமிழ்ச் சங்கம்*

மதுரையில் கடைச் சங்கம் இருந்தது, அதில் 49 புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ந்தார்கள் என்ற வரலாற்றை இறையனார் அகப்பொருளில் பார்க்கிறோம். மறுபடியும் அங்கே ஒரு தமிழ்ச் சங்கத்தை ஏற்படுத்திப் புலவர்களைக் கொண்டு தமிழை ஆராய்ந்து மாணாக்கர்களுக்குத் தமிழைக் கற்பிக்க வேண்டுமென்று பாலவனத்தம் ஜமீன்தாராகிய பாண்டித்துரைத் தேவர் எண்ணினார். எப்போதும் தமிழ் சம்பந்தமான வேலைகளைச் செய்வதில் அவருக்கு ஆர்வம் அதிகம். தமிழ்ச்சங்கத்தை ஏற்படுத்துவதற்குப் பல வகையான யோசனைகளை எல்லாம் செய்து 1901 மே மாதம் அதைத் தொடங்கினார். தாம் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கியிருப்பதாகவும், அதற்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்ய வேண்டுமென்றும் ஆசிரியப் பெருமானுக்கு எழுதினார். ஒவ்வோர் ஆண்டு விழாவிலும் முதல் நாள் யாரேனும் பெரிய மனிதர்கள், அரசாங்கத்தில் பெரிய பதவி வகிப்பவர்கள் தலைமை தாங்கி நடத்துவார்கள். பெரும்பாலும் ஆசிரியப் பெருமான் இரண்டாவது நாள் நடக்கும் புலவர் பேரவையில் தலைமை தாங்கி அச்சபையை நடத்தி வந்தார். அப்போது பலர் ஆராய்ச்சி உரைகளை வாசிப்பார்கள். தமிழ்ச் சங்கத்தில் தமிழைப் பயிற்றுவிக்கின்ற ஒரு கல்லூரியும் அமைந்திருந்தது. அங்கே பல ஏட்டுப் பிரதிகளையும், அச்சுப் புத்தகங்களையும் சேகரித்து வைத்திருந்தார்கள். மாதப் பத்திரிகை ஒன்று வெளியிட வேண்டுமென்ற ஆசைகூடப் பாண்டித்துரைத் தேவருக்கு இருந்தது. பின்னால் 'செந்தமிழ்' என்ற பெயருடன் ஒரு பத்திரிகையையும் வெளியிட்டார்.''

### *சென்னைக்கு வர மறுத்தது*

*1900-ஆம் ஆண்டு சென்னையில் பல தமிழ் அன்பர்கள் சேர்ந்து* 'திராவிட பாஷா சங்கம்' என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தினார்கள் அப்போது கல்வித்துறையில் பணியாற்றி வந்த சேஷாத்திரி ஆச்சார் என்பாரும், ஜே.லாரன்ஸ் என்ற பாதிரியாரும் அந்தச் சங்கத்தின் செயலாளர்களாக இருந்தார்கள். தமிழின் தொடர்புள்ள இடங்களில் எல்லாம் ஆசிரியப் பிரானுடைய தொடர்பும் இருந் தாலும் மதிப்பு மிகும் என்ற எண்ணம் யாவருக்கும் இருந்தது ஆகவே அச்சங்கத்தின் கௌரவ அங்கத்தினராக இருக்க

வேண்டுமென்று ஆசிரியப்பெருமானை அவர்கள் கேட்டுக் கொண்டார்கள். ஆசிரியரும் ஒப்புக்கொண்டார்.

சில காலத்திற்குப் பிறகு அந்தச் சங்கத்தின் செயலாளராக இருந்த சேஷாத்திரி ஆச்சார் கும்பகோணத்திற்கு வந்தார்; ஆசிரியரை வந்து பார்த்தார்.

“நாங்கள் நிறுவியிருக்கிற திராவிட பாஷா சங்கம் நன்றாக விருத்தியாக வேண்டுமென்று ஆசைப்படுகிறோம். அதற்கு வேண்டிய முயற்சிகள் நடந்து வருகின்றன. நீங்கள் அதன் அங்கத் தினராக இருப்பதே ஒரு சிறப்பு. எங்கள் சங்கம் சென்னையில் இருக்கிறது. தாங்கள் கும்பகோணத்தில் இருக்கிறீர்கள். அதனால் அடிக்கடி தங்களைச் சந்தித்துத் தங்கள் யோசனை களைக் கேட்க முடிகிறதில்லை. எனவே தாங்கள் சென்னையில் இருந்தால் எங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். அடிக்கடி தங்கள் கருத்துக்களை அறிந்து நடக்க முடியும். தாங்கள் சென்னைக்கு வந்தால் என்ன?” என்று கேட்டார்.

“நான் எப்படி சென்னைக்கு வருவது? இங்கே தானே எனக்கு உத்தியோகம் இருக்கிறது?” என்றார் ஆசிரியர்.

“தாங்கள் சென்னைக்கு வருவதாக இருந்தால், அங்கே உள்ள மாநிலக் கல்லூரிக்குத் தங்களை மாற்றும்படி நானே ஏற்பாடு செய்கிறேன். எனக்குக் கல்வித்துறையில் உள்ள எல்லோரையும் தெரியும். இதை யார் மூலமாகச் செய்ய வேண்டும் என்பதும் நன்றாகத் தெரியும். தாங்கள் சென்னைக்கு வருவதாக ஒரு வார்த்தை சொல்லுங்கள், போதும்” என்றார்.

அப்போது சென்னை மாநிலக் கல்லூரியில் பிராயம் முதிர்ந்த ஒருவர் தமிழாசிரியராக இருந்தார். அவருக்குச் சென்னையே சொந்த ஊராகவும் இருந்தது. சென்னைக்குத் தாம் வந்தால் பதிப்பு வேலைகளை எளிதாக நிறை வேற்றலாம் என்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டு. என்றாலும் தம்மால் அந்த முதியவருக்கு வயது முதிர்ந்த காலத்தில் இடையூறு ஏற்படுவதை ஆசிரியர் விரும்பவில்லை.

“சென்னைக்கு வருவதனால் எனக்குப் பலவித நன்மைகள் உண்டு என்பதை நான் அறிவேன். ஆனால் இப்போது சென்னை வர நான் விரும்பவில்லை. இங்கே இருப்பதால் அடிக்கடி திருவாவடுதுறை சென்று சந்நிதானத்தைப் பார்த்து வர முடிகிறது. அவர்களைப் பார்ப்பதனால் எனக்கு ஊக்கம் மிகுதியாகிறது. என்னை வளர்த்து உருவாக்கியதே அந்த ஆதீனந்தானே? இறைவன் திருவருள் இருந்தால் நான் பிறகு சென்னை வருவது பற்றி யோசிக்கிறேன்” என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

# 8. அயல் நாட்டு அன்பர்கள்

### *ஜூலியன் வின்சன் மாணாக்கர்*

*1902*-ஆம் வருடம் கோடை விடுமுறைக்குப் பிறகு காரைகாலிலிருந்து பேராசிரியர் ஜூலியன் வின்சன் மாணாக்கர் ஒருவர் கும்பகோணத்திற்கு வந்தார். ஜூலியன் வின்சனுக்கும், ஆசிரியருக்கும் நெடுநாள் பழக்கம். அவர் அடிக்கடி ஆசிரியருக்குக் கடிதம் எழுதுவது உண்டு. வில்வவனப் புராணம் என்ற நூலை அவரேதன்கையினால் எழுதி, அதன்மேல் அட்டையில் சிவலிங் கத்தின் உருவத்தையும் தமிழில் ஒரு விருத்தத்தையும் எழுதியிருந்தார். என்ன என்ன தமிழ் ஏட்டுச்சுவடிகள் பாரிஸ் மாநகர நூல் நிலையத்தில் உள்ளன என்னும் விவரத்தையும் தெரிவித்திருந்தார்.

பிரெஞ்சுக்காரர்கள் புதுச்சேரியை ஆண்டதனால் இங்கிருந்து பல தமிழ் ஏட்டுச்சுவடிகளை அவர்கள் பாரிசுக்கு எடுத்துச் சென்றார்கள். இங்கே கிடைக்காத பல ஏட்டுச்சுவடிகள் அங்கே இருக்கின்றன. இங்கே பழங்காலத்தில் அச்சிடப்பெற்ற பல நூல்களும் அங்கே இருக்கின்றன. நான் பாரிஸ் மாநகரம் சென்றபோது அந்தத் தமிழ் நூல் தொகுதிகளை அங்கே பார்த்தேன்.

வின்சனின் மாணாக்கர் தமிழகம் வந்தபோது தஞ்சாவூரில் லைனல் பைபர்ட் *(Lionel Byburt)* என்பவர் சப்-கலெக்டராக இருந்தார். இந்தப் பிரெஞ்சுக்காரர் அவருடைய விருந்தாளியாகத் தான் தங்கியிருந்தார். ஜூலியன் வின்சன் ஆசிரியர் பெருமையைச் சொல்லக் கேட்டவராதலின் ஆசிரியரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன் இருந்தார். அவர் பெயர் ஃபொண்டேனியோ. ஆகவே ஆசிரியர் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொள்வதற்குச் சப்-கலெக்டருடைய சேவகன் ஒருவனை அழைத்துக் கொண்டு அவர் ஒரு நாள் கும்பகோணம் வந்தார்.

ஆசிரியரைச் சந்தித்து ஜூலியன் வின்சன் அடிக்கடி ஆசிரியரைப் பற்றிச் சொல்வது உண்டு என்றும், ஆசிரியர் தமிழுக்குச் செய்த தொண்டைப் பற்றிப் பாராட்டிச் சிலவிடங்களில் எழுதியிருப்ப தாகவும் அவர் சொன்னார். அவர் பதிப்பித்துள்ள ஒரு தமிழ் நூலின் பிரெஞ்சு மொழிபெயர்ப்பையும் வழங்கினார். ஒரு மணி நேரம் அந்தப் பிரெஞ்சுக்காரர் ஆசிரியருடன் பேசிக்

கொண்டிருந்தார். அப்போது பேராசிரியர் சுந்தரராமையர் உடன் இருந்த அவர் சொன்னதை மொழிபெயர்த்துச் சொன்னார். ஆசிரியரிடம் இருந்த ஏட்டுச் சுவடிகளையும் கடிதப் பிரதிகளையும் கண்டு அந்தப் பிரெஞ்சுக்காரர் வியப்புற்றார்.

புதுச்சேரி, காரைக்கால் முதலிய பிரெஞ்சு ஆட்சியில் இருந்த இடங்களுக்கு எல்லாம் போய்விட்டுத் தம் ஊருக்குப் போவதாக இருந்தார். ஏதாவது ஒரு நூலைக் கொடுத்தால் அதைப் போகும் இடங்களில் படித்து விட்டு, மறுபடியும் அனுப்பிவிடுவதாக ஆசிரியரிடம் கேட்டார்.

ஆசிரியர் பழைய காஞ்சிப்புராணக் கடிதப் பிரதி ஒன்றை அவரிடம் வழங்கினார். அதை ஏதோ புதையல் கிடைத்ததைப் போல அந்தப் பிரெஞ்சுக்காரர் வாங்கிக்கொண்டார். தாம் போகும் இடங்களில் எல்லாம் அதைப் படித்துவிட்டு, இரண்டு வாரத்தில் அதை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பினார்.

தஞ்சாவூரில் இருந்த சப்-கலெக்டரிடம் அந்தப் பிரெஞ்சுக்காரர் ஆசிரியப் பெருமானின் உழைப்பையும், அவரது விரிந்த புலமையையும், அவர் பதிப்பித்த நூல்களால் தமிழுக்கு உண்டான ஏற்றத்தையும் எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஏட்டுச்சுவடியில் உள்ளதை ஆராய்ந்து பதிப்பிப்பது என்பது மிகவும் அருமையான காரியம் என்பதையும் அவர் நன்றாக விளக்கி யிருக்கிறார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய நூல்கள் இன்றும் படிப்பதற்கு உரியனவாக இருப்பதை அறிந்து அவர் வியப்பில் ஆழ்ந்தார்.

### கலெக்டர் பாராட்டு

அதன் பயனாக ஆசிரியப்பெருமானுக்கு ஒரு நன்மை கிடைத்தது. 1903-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி அன்று 7-ஆம் எட்வர்ட் மன்னர் முடிசூட்டு விழாக் கொண்டாட்டம் நடந்தது. தஞ்சை மாநகரத்தில் இருந்த கலெக்டர் ஒரு பேரவையைக் கூட்டி ஒரு விழா நடத்தினார். அதற்கு வரவேண்டுமென்று ஆசிரியப் பெருமானுக்கு சப்-கலெக்டர் ஒரு கடிதம் எழுதினார். அதன்படியே ஆசிரியர் சென்றபோது தமிழ் நூல்களில் பெருமையை உணர்ந்து, அதன் சிறப்பை உலகுக்கு எடுத்துக்காட்டியதற்காக ஒரு பாராட்டி தழை ஆசிரியருக்கு அளித்தார். உண்மையான உழைப்பை அரசினர் பாராட்டியதை அறிந்து யாவரும் களி கொண்டனர்.

### சீகாழிக் கோவை

பிள்ளையவர்கள் இயற்றிய நூல்களை எல்லாம் நன்றாகப் பதிப்பித்துத் தமிழ் உலகத்திற்கு வழங்க வேண்டுமென்ற ஆசை நெடுங்காலமாக

ஆசிரியப்பெருமானுக்கு இருந்தது. பிள்ளையவர்களின் வரலாற்றைப்பற்றி அங்கங்கே சிறப்புரையாற்றினார். எங்கே சொற்பொழிவு செய்தாலும் பிள்ளையவர்களைப் பற்றிப் பேசாமல் இருக்கமாட்டார். அந்த மாபெரும் கவிஞரின் அருங்குணங்களைப் பற்றி அங்கங்கே பல பல சுவையான நிகழ்ச்சிகளைச் சொல்லுவார்.

சீகாழிக் கோவை பாடியது பற்றியும் வேதநாயகம் பிள்ளை அரங் கேற்றத்துக்கு வந்திருந்து சிறப்பித்ததையும் அப்போது நடந்த சுவையான நிகழ்ச்சிகளையும் சிலரிடம் சொல்லிக்கொண்டிருந்தார். சீகாழிக் கோவையின் பெருமையை உணர்ந்து இடமணல் என்னும் நகரிலுள்ள விஜயராகவன் என்பவர் அந்த நூலை அச்சிடும்படி ஆசிரியரிடம் சொன்னார்; 50 ரூபாய் பணமும் கொடுத்து எப்படியாவது அதை நிறைவேற்ற வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அப்படியே அந்த நூல் அச்சேறியது. அதை அரங்கேற்றியபோது ஜில்லா முன்சீப்பாக இருந்த வேதநாயகம்பிள்ளை 20 பாடல்கள் பாடி அந்தக் கோவையைச் சிறப்பித்தார். அவற்றில் சில சுவையான பாடல்கள் வருமாறு:

"பிரமபுரத் தீசர்மேல் மீனாட்சி
சுந்தரமால் பெட்பிற் செய்த
வரமுறுகோ வையைக்கேட்போர் மகிழுவர்;
அஞ்சுவன்தமியேன் வள்ளி னிற்கேட்
டரவரசு சிரமசைக்கின் தரையசையும்,
வரையசையும், அசையும் ஆழி;
மரம் அசையும், மனை அசையும், மன்னுயிர்எல்
லாம்அசைந்து வருந்தும் என்றே."

"விதிஎதிரில் அரிமுதலோர் புகழ்புகலி
ஈசரே, விண்ணோர் மண்ணோர்
துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர்;
மீனாட்சி சுந்த ரப்பேர்
மதிமுதியன் கோவையைப்போல் பெற்றீர்கொல்?
இக்காழி வைப்பில் நீதி
அதிபதிநாம் எனஅறிவீர்; நம்முன்னம்
சத்தியமாய் அறைகு வீரே."

ஜூலியன் வின்சனின் மாணாக்கர் புதுச்சேரி சென்றவுடன் தாம் ஆசிரியரைப் பார்த்த விவரங்களைப் பாரிசில் இருந்த ஜூலியன் வின்சனுக்கு எழுதினார். அதைப் பார்த்தப் பாரிசிலிருந்து அந்த அறிஞர் மனம் மிகவும் மகிழ்ந்து ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

By Command of His Excellency the Viceroy and Governor-General in Council this Certificate is presented in the name of His Most Gracious Majesty King Edward VII, Emperor of India, to M.R.Ry. V. Swaminatha Aiyar, Tamil Pandit, Kumbakonam College, son of Venkatasubbier

in recognition of his researches and his work in connection with ancient Tamil manuscripts.

Madras,

1st January 190[illegible].

Chief Secretary to the Government of Madras.

உ.வே.சாமிநாதையரவர்களுக்கு அரசாங்கம் வழங்கிய பாராட்டிதழ்

"எமதன்பிற்குரிய எவ்வுலகும் புகழ்ந்து வணங்கும் மாட்சிமையுடைய பண்டிதனே!" என்று தம் கடிதத்தைத் தொடங்கியிருந்தார்.

இப்படி அவர் எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் ஆசிரியரைப் பாராட்டிப் புகழ்ந்து எழுதுவது வழக்கம். அவருடைய மாணாக்கர் பாரிசுக்குத் திரும்பியபின், தம் மாணாக்கர் பாரிசுக்குத் திரும்பி விட்டார் என்பதையும் பின்னர் அவர் எழுதினார்.

*20-12-1901* அன்று வெள்ளிக்கிழமை; ஆசிரியருடைய சிறிய தகப்பனார் சின்னசாமி ஐயர் இறைவன் திருவடி அடைந்த நாள் அது. அவர் ஆசிரியருடன் இருந்து வந்தார். ஆசிரியரே அவரது ஈமக் கடன்களை நிறைவேற்றினதை முன்பே சொல்லியிருக்கிறேன்.

சேஷையா சாஸ்திரிகள் புதுக்கோட்டையில் திவானாக இருந்து சிறப்புப் பெற்றவர். அவருக்கும் ஆசிரியருக்கும் பழக்கம் உண்டு. ஆசிரியருடைய சிறிய தகப்பனார் இறந்த அன்று இராமநாதபுரத்திலிருந்து பாஸ்கர சேதுபதி மன்னர் கும்பகோணம் வந்து சேஷையா சாஸ்திரியார் வீட்டில் தங்கியிருந்தார். அவரைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் ஆசிரியருக்கு இருந்தது. அன்றியும் திருவாவடுதுறை ஆதீனகர்த்தரும் ஆசிரியருக்கு அவரைப் பார்த்து வரும்படி எழுதியனுப்பினார்.

அன்று ஆசிரியருடைய சிறிய தகப்பனார் காலமானதால் ஆசிரியரால் இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதியைச் சென்று பார்க்க முடியவில்லை. அவரும் ஆசிரியரைச் சந்திக்கவேண்டுமென்று மிகவும் ஆசையுடன் இருந்தாராம். அந்த விருப்பம் நிறைவேறாமற் போயிற்று.

### பழைய திருவிளையாடற் புராணம்

*1902* டிசம்பர் *21*-ஆம் தேதி பாண்டித்துரைத் தேவர் ஆசிரியப் பெருமானுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப் புதிதாக ஏற்படுத்தியிருப்பதனால் அந்தச் சங்கத்தின் வாயிலாகப் பல அரிய தமிழ்நூல்களை வெளியிட வேண்டுமென்ற ஆசை அவருக்கு இருந்தது. ஆசிரியர் பதிப்பிக்கின்ற நூல்களை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாகக் கொண்டு வந்தால், சங்கத்திற்குப் பெருமை உண்டாகும் என்றும், பல நூல்கள் தமிழ் நாட்டிற்குக் கிடைக்கும் என்றும் எழுதினார்.

பழைய திருவிளையாடற் புராணத்தைப் பதிப்பிக்க ஆசிரியப் பெருமான் விரும்பினார். அதனைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாகக் கொண்டு வரலாம் என்று பாண்டித்துரைத் தேவர் எழுதினார்.

"இம் மதுரைக்கும் தமிழுக்கும் சங்கத்திற்கும் உரிய முழு முதல் கடவுளாகிய ஆலவாயடிகள் திருவிளையாடல் ஆதலால், சங்கத்திற்குத் தலைமை வித்துவானாகிய தங்களால் பார்வையிடப் பெற்று அச்சிடப்பெறும் அந்நூலை இந்தத் தமிழ்ச்சங்கத்தின் முதல் வெளியீடாகக் கொண்டு வருவது இன்றியமையாச் சிறப்புடையதாக இருக்கும் என்று கருதி இப்படி எழுதினேன்" என்று தெரிவித்திருந்தார். ஆனால் அப்போது அதை வெளியிட முடியவில்லை. வேறு நூற்பதிப்பில் ஆசிரியர் ஈடுபட்டிருந்தார். பிற்காலத்தில் அந்த நூலை ஆசிரியர் வெளியிட்டபோது பாண்டித்துரைத் தேவர் அதற்குப் பொருளுதவி செய்தார்.

## சுருக்கமும் பெருக்கமும்

சங்க நூல்களில் ஒன்றாகிய ஐங்குறுநூற்றை ஆராய்ந்து அதற்கு வேண்டிய குறிப்புக்களை ஆசிரியர் குறித்துக் கொண்டிருந்தார். யாழ்ப் பாணத்திலிருந்து வந்த ஒரு கடிதத்தில், நூலை மிகவும் பெருக்காமல் சுருக்கமாக வெளியிட்டால், பலவற்றைச் சீக்கிரத்தில் வெளியிடலாம் என்று ஓர் அன்பர் எழுதியிருந்தார்.

அதை நினைவில் வைத்துக்கொண்டு ஐங்குறுநூற்றை விரிவான முறையில் பதிப்பிக்கவேண்டுமென்று எண்ணியிருந்த ஆசிரியர் அந்த நூலைச் சுருக்கமான முறையில் 1903-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் வெளியிட்டார்.

அது வெளிவந்த பிறகு அந்த யாழ்ப்பாணத்து அன்பர், "இப்படி எல்லாவற்றையும் சுருக்கிக் கொள்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை. நான் தவறாக எழுதிவிட்டேன். இந்நூல் பற்றித் தங்களிடமிருந்து தமிழ்நாடு பெற்றிருக்க வேண்டிய பெரும் பயனை இழந்துவிட்டது; அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்" என்று ஒரு கடிதம் எழுதினார்.

## ஜட்ஜு சினம் ஆறியது

கும்பகோணத்தில் எஸ்.கிருஷ்ணையர் என்ற ஹைக்கோர்ட் வக்கீல் இருந்தார். அவர் ஆசிரியருடைய சிறிய தாயாரின் பிள்ளை. வக்கீல் தொழிலை நன்றாக நடத்தினார். வருமானமும் இருந்தது. கச்சேரியில் பேசும்போது மிகவும் அழுத்தந் திருத்தமாகப் பேசுவார். அவரது வாக்கு வன்மை மிகவும் சிறந்தது என்று எல்லோரும் கொண்டாடுவார்கள்.

அத்தகைய பெருமை இருந்தமையினால் அவருக்கு ஒரு சமயம் அகங்காரம் மிகுதியாகிவிட்டது. சப்-கோர்ட்டில் வாதம் செய்யும் போது சப்-ஜட்ஜ் வருந்தும்படியாகச் சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டார். அப்போதே சப்-ஜட்ஜ் கிருஷ்ணையரைக் கண்டித்தார்.

கிருஷ்ணையர் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். தாம் பேசியது தவறு என்பதை அப்போது உணரலானார். அதன் பயனாகச் சப்-ஜட்ஜ் தம் உத்தியோகத்திற்கு ஏதேனும் தீங்கு செய்துவிடலாம் என்ற வருத்தம் அவர் உள்ளத்தில் ஏறிக்கொண்டது. தம் பிழைப்புக்கே தீங்கு வந்து விட்டால் என்ன செய்வது என்ற எண்ணம் அவரது அடி வயிற்றைக் கலக்கியது. உடனே ஆசிரியப்பெருமானிடம் வந்தார். வரும்போது மிக்க வாட்டத்துடன் மெல்ல நடந்து வந்தார்.

"என்ன இப்படி இருக்கிறாய்" என்று ஆசிரியர் கேட்டார்.

"என்னுடைய போதாத காலம். என்னுடைய நாக்கில் சனி இருந்தது. முன்பெல்லாம் நன்றாகப் பேசி வருவேன். அந்த அகங்காரத்தில் யாரிடம் என்ன பேசுகிறோம் என்பது தெரியாமல் சப்-ஜட்ஜிடம் கச்சேரியில் சில தகாத வார்த்தைகளைச் சொல்லிவிட்டேன். சப்-ஜட்ஜுக்கு என்மேல் கோபம் வந்தது. இனிமேல் என் தொழிலுக்கு அவரால் ஏதேனும் இன்னல் வந்துவிடுமோ என்ற பயம் இப்போது பிடித்துக்கொண்டுவிட்டது. நான் இந்தச் சங்கடத்திலிருந்து எப்படித் தப்புவது என்று தெரியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறேன். தாங்களே சப்-ஜட்ஜிடம் என் விஷயமாகப் பேசி அவரது கோபத்தை ஆற்ற வேண்டும்" என்று ஆசிரியர் காலில் விழுந்து கெஞ்சினார்.

ஆசிரியப்பெருமான், "எதைக் கொட்டினாலும் பொறுக்கிக் கொள்ளலாம். வார்த்தைகளை மாத்திரம் கொட்டக்கூடாது. குறைவாகப் பேசினாலும் தவறு இல்லை. வரம்பு மீறிப் பேசுவதனால் நமக்குச் சங்கடங்கள் உண்டாகின்றன" என்று சொல்லி, "சப்-ஜட்ஜுடன் எனக்கு நேரில் பழக்கம் இல்லை. ஆனாலும் அவருக்குத் தெரிந்தவர்கள் மூலம் என்ன செய்யலாம் என்று யோசித்து என்னால் முடிந்ததைச் செய்கிறேன்" என்று சொல்லி அனுப்பினார். "இனி மேலாவது அடக்கமாகப் பேச வேண்டும் என்பதை மறந்துவிடாதே" என்று அவருக்கு அறிவுரை கூறினார்.

அடுத்த நாள் தம் கல்லூரியைச் சேர்ந்த கே.ஆர்.துரைசாமி ஐயர் என்கிற பேராசிரியரை அழைத்துக்கொண்டு அந்தச் சப்-ஜட்ஜைப் பார்க்கப் போனார். குருமூர்த்தி என்பது அந்தச் சப்-ஜட்ஜின் பெயர்.

எதிர்பாராதபடி ஆசிரியப்பெருமான் தம்மைப் பார்க்க வந்தது அவருக்கு மிகவும் மகிழ்ச்சியை உண்டாக்கியது. "நீங்கள் வருவதற்கு நான் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கிறேன்" என்று தம் மகிழ்ச்சியை வெளியிட்டார்.

சிறிது நேரம் க்ஷேம சமாசாரங்களைப் பேசிக்கொண்டிருந்து விட்டு ஆசிரியர் தாம் வந்த காரியத்தை எடுத்துச் சொல்லத் தொடங்கினார்.

"தங்கள் பெயர் குருமூர்த்தி; குருமூர்த்தி என்றவுடன் எனக்கு என் ஆசிரியப்பெருமான் நினைவுதான் வந்தது. அவர் ஒரு சமயம் தம் சம்பந்தி குருசாமி என்பவரைத் திருவாவடுதுறை ஆதீனகர்த்தராகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் அப்போது மிகவும் நயமாகப் பேசுகின்ற சுப்பிரமணிய தேசிகர், குருசாமியைப் பார்த்து, 'நீரும் குருசாமி, நாமும் குருசாமி' என்று சொன்னார்".

"என்னுடைய குருசாமியாகிய பிள்ளையவர்கள் மிகவும் சாந்த மூர்த்தி. உங்களுடைய பெயரைக் கேட்டவுடன் என்னுடைய ஆசிரியப் பெருமான் நினைவு எனக்கு வந்தது. இயல்பாகச் சாந்தமாக இருக்கிற நீங்கள் சினம் உண்டாவதற்கான நிகழ்ச்சி நடந்தாலும் அதைப் பொறுத்துக் கொள்வதையும் அறிவேன். என்னுடைய உறவினனாகிய கிருஷ்ணன் ஏதோ தவறாகத் தங்களிடம் நடந்து கொண்டு விட்டானாம். இளமைத் துடிப்பில் அப்படி நடந்து கொண்டு விட்டு, வீட்டிற்கு வந்து மிகவும் வருந்துகிறான். சாப்பிடவே இல்லை. இரவு முழுவதும் தூக்கமும் இல்லை. இனிமேல் அவ்வாறு தங்களிடம் அவன் நடந்து கொள்ளக்கூடாது என்று கண்டித்து வைத்தேன்".

"குற்றம் செய்தால் தண்டிப்பது நியாயந்தான். அவன் இளமைத் துடிப்பில் இப்படிச் செய்துவிட்டு இப்போது வருந்துகிறான். இனி இப்படி நடந்துகொள்ளமாட்டான் என்று நிச்சயமாக நம்புகிறேன். ஆறுவது சினம் என்று ஔவைப் பிராட்டி சொல்லியிருக்கிறாள். தங்களுக்குச் சினம் வந்தாலும் அது ஆறிவிடும் என்று உணர்ந்தேன். அதனால்தான் நானே தங்களிடம் வந்தேன்" என்று சொன்னார்.

ஆசிரியப்பெருமானே நேரில் வந்து அன்போடு தம்முடன் பேசியதைக் கேட்டு மகிழ்ந்த சப்-ஜட்ஜுக்கு இருந்த கோபம் எல்லாம் மறைந்துவிட்டது. "நான் எல்லாவற்றையும் மறந்து விட்டேன். நீங்கள் அதைப்பற்றிக் கவலைப் படவேண்டாம்" என்று சொல்லியனுப்பினார். கிருஷ்ணையர் ஆசிரியப் பெருமான் போன பிறகு, என்ன முடிவு ஏற்படுமோ என்ற கவலையுடன் தம் வீட்டில் உட்கார்ந்திருந்தார். சிறிது நேரம் ஆனதனால் அவருக்கு அந்தக் கவலை மிகுதியாயிற்று. ஆசிரியர் சப்-ஜட்ஜின் வீட்டிலிருந்து திரும்பி வந்தவுடன், "இனி இப்படி நடந்துகொள்ளக் கூடாது" என்று அறிவுறுத்தினார்.

இப்படி எத்தனையோ சந்தர்ப்பங்களில், கோபம் அடைந்தவர்களைச் சாந்தப்படுத்தியும், பிறருடைய இடையூறுகளைத் தீர்த்தும், பகை உள்ளவர்

களைச் சமாதானப்படுத்தி இணைத்தும் ஆசிரியர் உதவி செய்த நிகழ்ச்சிகள் பலப்பல.

### டங்கன் செய்த உதவி

அந்தக் காலத்தில் அரசாங்கக் கல்லூரியில் பெரும்பாலும் ஆங்கிலேயர்களே முதல்வர்களாக இருந்தார்கள். கும்பகோணம் கல்லூரியில் எச்.எஸ்.டங்கன் *(H.V.Duncan)* என்பவர் முதல்வராக இருந்தார். ஆசிரியர் பழைய நூல்களை ஆராய்ந்து வெளியிட்டு வருவதை அவர் நன்கு அறிந்திருந்தார். தம் கல்லூரியில் இருக்கும் தமிழாசிரியர் ஒருவர் உலகப் புகழ்பெற்றதை அறிந்து அவருக்கே பெருமை உண்டாயிற்று. ஒரு நாள் ஆசிரியப்பெருமான் வீட்டிற்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது. அவர் அதை ஆசிரியரிடம் தெரிவித்தபோது, அப்படியே செய்யலாம் என்று ஒரு நாளைக் குறிப்பிட்டார்.



எச்.எஸ்.டங்கன்

ஆங்கிலேயராக இருக்கிற ஒருவர் இப்படிச் சாமான்யமாக எல்லோர் வீட்டிற்கும் வருவது இல்லை. ஆனாலும் டங்கன் துரைக்கு ஆசிரியப்பெருமானுடைய நூல் தொகுப்புக்களைக் காணவேண்டுமென்ற ஆசை அதிகமாக இருந்தது.

குறிப்பிட்ட நாளில் அவர் ஆசிரியர் இல்லத்திற்கு வந்தார். ஆசிரியர் தாம் சேகரித்து வைத்திருந்த சுவடிகளை எல்லாம் எடுத்துக் காட்டினார். பார்ப்பதற்கு அழகாக இல்லாமல் இருந்த சுவடிகளை எல்லாம் பார்த்து, அவற்றை எவ்வளவு அழகான நூல்களாக வெளிக் கொண்டு வந்திருக்கிறார் என்பதை நினைந்து அவர் வியந்தார். அந்த ஏட்டுச்சுவடியில் இருந்த எழுத்துக்கள் எதுவும் அவருக்கு விளங்க வில்லை.

“இது என்ன எழுத்து?” என்று கேட்டார். “இது தமிழ்தான். அந்தக் காலத்தில் எழுதியது. இதைப் படிப்பதற்குப் பயிற்சி வேண்டும்” என்று ஆசிரியர் சொன்னார்.

"இதை உங்களால் எளிதில் படிக்க முடியுமா?" என்று ஆசிரியரிடம் கேட்டார். ஆசிரியர் ஒரு பகுதியைப் படித்துக்காட்டினார்.

"நீங்கள் இந்த ஆராய்ச்சியிலே ஈடுபட்டிருக்கிறீர்களே, உங்களுக்கு யாராவது பண உதவி செய்கிறார்களா? உங்களுக்கு உதவி செய்வதற்கு எத்தனை பேர் இருக்கிறார்கள்?" என்று கேட்டார்.

"ஆண்டவன் திருவருளை நம்பித்தான் நான் இந்தப் பணியைச் செய்து கொண்டிருக்கிறேன். என் சம்பளத்தை வைத்துக்கொண்டு நான் இதைச் செய்ய முடியுமா?" என்று ஆசிரியர் சொன்னார்.

அதன்பிறகு டங்கன் துரையின் சிபாரிசின் பேரில் ஆசிரியருக்குப் பரீட்சாதிகாரி வேலை சில சமயங்களில் கிடைத்தது. அதனால் கிடைத்த வருவாயை அவருடைய பதிப்பு வேலைக்குப் பயன்படுத்திக்கொண்டார்.

### திருவாவடுதுறைக் கோவை

திருவாவடுதுறை சம்பந்தமான செய்திகளை எல்லாம் மிகவும் ஆர்வத்துடன் சேகரிப்பதில் ஆசிரியருக்கு ஊக்கம் இருந்தது. தம் பேச்சில் அந்த ஆதீனத்தைப் பற்றிச் சொல்லாமல் இருக்கமாட்டார். அந்த ஊருக்கு ஒரு புராணம் உண்டு. அதை வெளியிட வேண்டு மென்ற ஆசை ஆசிரியருக்கு இருந்தாலும், அதற்கு அதிக காலம் செலவாகும் என்பதை அறிந்து அதனை மேற்கொள்ளவில்லை. ஐங்குறுநூறு முதலிய சங்க நூல்களின் ஆராய்ச்சியினாலும் வேறு பல நூல்களின் ஆராய்ச்சியினாலும் அவருக்குப் போதிய ஓய்வு கிடைக்கவில்லை. இருந்தாலும் திருவாவடுதுறை சம்பந்தமான ஏதாவது ஒரு நூலை அச்சிட வேண்டுமென்ற ஆர்வம் இருந்தது.

தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய திருவாவடு துறைக்கோவை என்று ஒரு நூல் இருந்தது. அதை ஆராய்ந்து பதிப்பிக்க ஆசிரியர் நினைத்தார்.

அப்போது திருவாவடுதுறை ஆதீனத்தில் 17-ஆவது பட்டத்தில் இருந்த அம்பலவாண தேசிகர் அதனை அறிந்து மிகவும் மகிழ்ந்து, பொருளுதவி செய்தார். அந்த நூல் சென்னை வைஜயந்தி அச்சுக்கூடத்தில் அச்சிடப் பெற்று, 1903-ஆம் ஆண்டு வெளிவந்தது. திருவாவடுதுறைப் புராணத்தை வெளியிட இயலாவிட்டாலும் இந்த நூலையேனும் வெளியிட்டதனால் ஆசிரியருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று.

ஐங்குறுநூற்றின் முதல் பதிப்பு 1903-ஆம் வருஷம் ஜூன் மாதம் வெளியாயிற்று. அதற்குரிய பொருளுதவியைப் பேராசிரியர் சுந்தரராமையர் வழங்கினார். தம் நன்றிக்கு அறிகுறியாக ஆசிரியர் தமக்கு வேலை வாங்கித் தந்த தியாகராஜ செட்டியாருக்கு அந்த நூற்பதிப்பை உரிமையாக்கினார்.

# 9. சென்னை வாசம் தொடக்கம்

## சென்னை செல்வதை ஏற்றுக்கொண்டது

*1903*-ஆம் வருடம் கோடை விடுமுறையில் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த ஸ்ரீநிவாசாசாரியார் நோய்வாய்ப்பட்டுச் சில மாதங்கள் வேலைக்குச் செல்லாமல் ஓய்வு எடுத்துக்கொண்டார். அப்போது வை.மு.சடகோபராமானுஜா சாரியார் என்பவரைத் தமிழாசிரியராக அப்பதவியில் அமர்த் தினார்கள்.

நோய்வாய்ப்பட்ட ஸ்ரீநிவாசாசாரியார் காலமாகிவிட்டார். எனவே, அந்த இடத்தில் பணியாற்றி வந்த சடகோபராமானுஜாசாரியார் தமக்கே அந்த வேலை நிலையாகக் கிடைக்கும் என்று எண்ணியிருந்தார்.

அந்தக் காலத்தில் ஆசிரியப் பெருமான் பதிற்றுப்பத்தை ஆராய்ச்சி செய்து வந்தார். அதைப் பதிப்பிக்க வேண்டுமென்று எண்ணி அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யச் சென்னைக்கு வந்தார். மணிமேகலைக்கு வேண்டிய செய்திகளைச் சேகரித்துக் கொடுத்த மளூர் ரங்காசாரியார் என்ற பேராசிரியரையும், வேறு சில நண்பர்களையும் பார்த்துவிட்டுக் கும்கோணத்திற்குத் திரும்பினார்.

ஒருநாள் கல்லூரியில் முதல்வராக இருந்த ஜே.எம்.ஹென்ஸ் மென் என்பவர் ஆசிரியர் இல்லத்திற்கு வந்தார். அவர் யாழ்ப் பாணக்காரர். தமிழில் மிக்க அன்பு உடையவர். அவர் ஆசிரியரிடம் ஒரு செய்தியைச் சொன்னார். கல்வித் துறைத் தலைவர், ஆசிரியர் அவர்களைச் சென்னை மாநிலக் கல்லூரிக்கு மாற்றியிருப்பதாகவும், அவருக்குப் பதிலாக வேறு யாரை நியமிக்கலாம் என்று தம்மிடம் கேட்டிருப்பதாகவும் சொன்னார்.

கும்பகோணததில் பலகாலம் இருந்த பழக்கத்தாலும், அடிக்கடி திருவாவடுதுறை சென்று ஆதீனகர்த்தருடன் சல்லாபம் செய்து வரும் சந்தர்ப்பம் இருந்ததாலும் ஆசிரியருக்குக் கும்பகோணத்தை விட்டுச் செல்ல முன்பே வாய்ப்புக் கிடைத்தும் போகவில்லை.

ஆனாலும் ஹென்ஸ்மென் அவர்கள், "நீங்கள், சென்னைக்குச் சென்றால் உங்கள் தமிழ்நூல் பதிப்பு வேலைகளுக்குப் பல உதவிகள் கிடைக்கும். அடிக்கடி இங்கிருந்து சென்று, சென்னை அச்சகங்களில் புத்தகங்களைப்

பதிப்பிப்பதைவிட, அங்கே இருந்தே ஒவ்வொரு நாளும் திருத்தங்களைச் செய்து பதிப்பிக்கலாம். அது மட்டுமின்றி, அங்கே எத்தனையோ பெரியவர்களும், அறிஞர்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய பழக்கமும் உங்களுக்கு ஏற்படும். உங்கள் புகழும் பரவும்'' என்று விரிவாக எடுத்துச் சொல்லி, ஆசிரியரைச் சென்னைக்குச் செல்லச் சம்மதிக்கும்படி செய்தார். தம் பதிப்பு வேலைகளுக்கு உதவியாக இருக்கும் என்ற எண்ணமே மேலோங்கி நின்றதால் ஆசிரியர் அதற்கு உடன்பட்டார்.

ஆசிரியப்பெருமான் கும்பகோணத்தை விட்டுச் சென்னைக்குச் செல்லப் போகிறார் என்ற செய்தி மெல்ல மெல்ல நகரம் முழுவதும் பரவியது. கடந்த 23 ஆண்டுகளாகக் கும்பகோணம் கல்லூரியில் இருந்த ஆசிரியரை விட்டுப் பிரிவதற்கு அந்த நகரப் பெருமக்களுக்கு மனம் இல்லை. என்றாலும் அவர் நல்லதோர் இடத்திற்குப் போய்ச் சேருகிறார் என்பதை அறிந்து ஒருவாறு மகிழ்ந்தார்கள்.

இந்தச் செய்தி திருவாவடுதுறை ஆதீனகர்த்தருக்கும் தெரிந்தது. அவருக்கு வருத்தம் உண்டாகவில்லை. சென்னைக்குச் சென்றால் ஆசிரியருக்குப் பல நலங்கள் கிடைக்கும் என்றும் தம் ஆதீனத்தின் புகழை அங்கும் பரப்புவார் என்றும் வேண்டும் பொழுது சென்னையிலிருந்து வரச்செய்யலாம் என்றும் எண்ணினார். ஆசிரியர் ஆதீனத்திற்குச் சென்ற போது, அப்போது அதன் தலைவராக இருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் உயர்ந்த சால்வை ஒன்றை ஆசிரியருக்குப் போர்த்தி, "நீங்கள் இந்த ராஜதானியின் தலைநகராகிய சென்னைக்குப் போவதனால் பல செல்வர்களின் பழக்கம் உங்களுக்கு ஏற்படும். நம்முடைய ஆதீனத்தின் பெருமையைச் சென்னையில் நீங்கள் பரப்புவீர்கள். அதனால் நீங்கள் சென்னைக்குப் போவது எல்லா வகையிலும் நல்லது'' என்று தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

ஆசிரியப்பெருமான் ஒரு நல்ல நாள் பார்த்துச் சென்னைக்குப் புறப்பட்டார்.

### சென்னை வருகை

சென்னைக்கு வந்த ஆசிரியர் தம்முடைய தம்பி இருந்த திருவேட்டீசுவன் பேட்டையில் உள்ள வீட்டுக்குச் சென்று தங்கினார். மாநிலக் கல்லூரிக்குச் சென்று வேலையை ஒப்புக்கொண்டார்.

அந்தக் காலத்தில் மாநிலக் கல்லூரியின் முதல்வராக இருந்தவர் பில்டர்பெக் துரை என்பவர். அவர் முதலில் கும்பகோணம் கல்லூரியில்

முதல்வராக இருந்தவர். ஆதலின் ஆசிரியப்பெருமானுக்கு அவருடைய பழக்கம் முன்பே இருந்தது.

அந்தக் காலத்தில் கல்லூரியில் தமிழ் வகுப்புக்களுக்கு அவ்வளவு சிறப்புத் தருவது இல்லை. சென்னை மாநிலக் கல்லூரியில் இருந்த தமிழ் வகுப்பும் அப்படித்தான் இருந்தது. கும்பகோணம் கல்லூரியில் தமிழ் வகுப்பில் உயர்ந்த மேடையும், நல்ல மேசையும், நாற்காலியும் இருந்தன. ஆனால் சென்னை மாநிலக் கல்லூரியிலோ அந்த அமைப்புகள் எல்லாம் அப்போது இல்லை. ஏதோ ஒரு பழைய மேசை மட்டும் இருந்தது.

ஒரு நாள் ஆசிரியர் முதல்வரைக் கண்டார். "கும்பகோணத்துக்கும் சென்னைக்கும் வேறுபாடு தெரிகிறதா?" என்று முதல்வர் கேட்டார். "இங்கே எல்லாம் சிறப்பாக இருக்கின்றன. இந்தக் கல்லூரி எவ்வளவு பழையதென்பதை நான் பழகும் மேசை காட்டுகிறது" என்று சொல்லிச் சற்றே நிறுத்தினார்.

"நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே!" என்று முதல்வர் சொன்னார். "எனக்குக் கிடைத்திருக்கும் நாற்காலியும் மேசையும் பல காலம் கண்டவை. மேசையில் அங்கங்கே குழிகள் உள்ளன. அவை அந்த மேசையின் பழமையைக் காட்டுகின்றன, பொருட்காட்சிச் சாலையில் வைப்பதற்கு ஏற்ற அரிய பண்டங்கள் அவை" என்று ஆசிரியர் சொன்னார்.

அதைக் கேட்ட முதல்வர் சிரித்துவிட்டார்; உண்மையை உணர்ந்து கொண்டார். அப்பால் உயர்ந்த மேடையும், பீரோவும் நல்ல நாற்காலி மேசையும் அந்த வகுப்பறையில் அமைக்க ஏற்பாடு செய்தார்.

தம் குடும்பத்தை விட்டுச் சில காலம் தனியாகச் சென்னையில் இருந்த ஆசிரியர், அந்த ஆண்டு கோடைக்கால விடுமுறைக்குக் கும்பகோணம் சென்று தம்முடைய குடும்பத்தையும் சென்னைக்கு அழைத்து வந்தார் முதலில் பெரிய தெருவில் ஓர் இல்லத்தில் குடியிருக்க எண்ணினார். ஆனால் அந்த வீடு கிடைக்கவில்லை.

பிறகு திருவேட்டீசுவரன் பேட்டையில் பிள்ளையார் கோவில் தெருவில் மாதம் 20 ரூபாய் வாடகையில் ஒரு வீட்டை ஏற்பாடு செய்து கொண்டார். இந்த வீட்டிற்கு 1904-ஆம் வருஷம் ஜனவரி மாதம் குடி வந்தார். பிள்ளையார் கோவில் தெரு என்று அந்தத் தெருவுக்குப் பெயர் அமைந்திருப்பதே ஆசிரியப்பெருமானுக்கு நல்ல சகுனமாகத் தோன்றியது. கணபதி மந்திரத்தைப் பலமுறை ஜபித்து வந்தவர் அவர்.

திருவல்லிக்கேணியில் ஒரு பகுதி திருவேட்டீசுவரன் பேட்டை இறைவன் வேடுவனாக வந்து அருச்சுனனுடைய வில்லால் அடிபட்டதாகப்

பாரதம் சொல்கிறது. இறைவன் வேடுவனாக வந்ததை நினைப்பிப்பது திருவேட்டீசுவரர் என்னும் திருநாமம். அருச்சுனனால் அடிபட்ட தழும்பைக் குறிக்கும் சுவடு லிங்கத்தின் திருமுடியில் இருக்கும். அதனால் அதனைப் 'பார்த்தப் பிரகரலிங்கம்' என்று வடமொழியில் கூறுவார்கள்.

அந்தக் காலத்தில் ந்யூயிங்டன் பங்களா என்ற இடத்தில் ஜமீன்தார்களின் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் நிறுவியிருந் தார்கள். ஆசிரியருடைய முயற்சியால் திருமானூர்க் கிருஷ்ணையர் தமிழாசிரியராக அங்கே வேலை பார்க்கத் தொடங்கினார். அதனால் ஆசிரியப்பெருமானுடன் இருந்து பல உதவிகளைச் செய்வதற்குரிய வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

ஆசிரியர் பதிற்றுப்பத்தை ஆராய்ச்சி செய்து பல குறிப்புக்களுடன் சென்னை வைஜயந்தி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கத் தொடங்கினார்.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று பதிற்றுப்பத்து என்பது. பத்துச் சேர மன்னர்களைப் பாராட்டி ஒவ்வொருவருக்கும் பத்துப் பாட்டாக வெவ்வேறு புலவர் பாடியது அது. அதன் முதற்பத்தும் கடைசிப் பத்தும் கிடைக்கவில்லை. முற்றும் கிடைத்த பிறகு பதிப்பிக்கலாம் என்று எண்ணி யிருந்த ஆசிரியர், எங்குத் தேடியும் அந்தப் பகுதிகள் கிடைக்காமையால் கிடைத்தவற்றை மட்டும் பதிப்பித்தார்.

ஆசிரியர் ஏட்டுச்சுவடிகளிலிருந்து கையால் எழுதிய புத்தகங்கள் பலவற்றைத் தொகுத்து வைத்திருந்தார். அப்படியே பதிற்றுப்பத்துக்கும் செய்திருந்தார். அந்த நூல் 1904-ஆம் வருஷம் ஜூன் மாதம் வெளியாயிற்று.

### மணி ஐயர் செய்த அருஞ்செயல்

மயிலாப்பூரில் 13-01-1905இல் பென்னாத்தூர் சுப்பிரமணிய ஐயர் உயர்நிலைப் பள்ளியைத் (பி.எஸ்.ஹைஸ்கூல்) தொடங்கினார்கள். சங்கராந்தி தினத்தன்று அதன் திறப்புவிழா நடை பெற்றது. உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாக இருந்த மணி ஐயர் (ஸர் எஸ்.சுப்பிரமணிய ஐயர்) அந்த விழாவுக்கு தலைமை தாங்கினார். அவருக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்க வேண்டுமென்று ஆசிரியரை நிருவாகிகள் கேட்டுக்கொண்டார்கள். அவ்வாறே ஆசிரியரும் செய்யுள் வடிவில் ஒரு வரவேற்புப் பத்திரம் எழுதிக் கொண்டு, விழாவிற்குச் சென்றார். அங்கே பெருங் கூட்டம். உள்ளேயும், வெளியிலேயும் மக்கள் நெருக்கிக்கொண்டு நின்று கொண்டிருந்தார்கள். கூட்டம் மிக அதிகமாகவும் நெருக்கமாகவும் இருந்தமையினால் ஆசிரியரால் விழா மேடைக்குச் செல்ல முடியாமல் இருந்தது. விழாத் தலைவராக மேடையில் அமர்ந்திருந்த மணி ஐயர் அவர்கள், ஆசிரியர் உள்ளே வர

முடியாது தவிப்பதைப் பார்த்துவிட்டார். உடனே யாரேனும் ஒருவரை அனுப்பி ஆசிரியரை மேடைக்கு அழைத்துவரச் சொல்லியிருக்கலாம். ஆனால் அவர் செய்த காரியம் மிகச் சிறப்பாக இருந்தது. அங்கே இருந்த படியே, "ஐயர்வாள், வரவேணும், வரவேணும்!" என உரத்த குரலில் ஆசிரியரை வரவேற்றார்.

அடுத்த கணம் எல்லோரும் வெளிப்புறமாகத் திரும்பிப் பார்த்தார்கள். ஆசிரியப்பெருமான் வருவதைக் கண்டு தாங்களாகவே விலகி ஒதுங்கிக் கொண்டு அவர் விழா மேடையைப் போய் அடைவதற்கு வழிவிட்டார்கள். மணி ஐயர் வேறு யாரையேனும் ஆசிரியரை உள்ளே அழைத்து வர அனுப்பியிருந்தால்கூட ஆசிரியரால் அவ்வளவு எளிதாக உள்ளே போயிருக்க முடியாது. ஆனால் விழாத் தலைவரே அப்படி அழைத்ததனால், எல்லோரும் ஆசிரியருக்கு மதிப்புக் கொடுத்து வழிவிடவே, ஆசிரியப்பெருமான் மேடைக்குச் சென்றார். அங்கே தமிழின் பெருமையைப் பற்றியும், கல்வியின் சிறப்பைப்பற்றியும் ஒரு மணி நேரத்திற்கு மேலாக விரிவாகப் பேசினார். அதைக் கேட்டுப் பலரும் உவகை அடைந்தார்கள்.

இந்த நிகழ்ச்சியைப் பற்றிப் பிற்காலத்தில் ஆசிரியர் சொல்ல நேர்ந்த பொழுது, "அவமதிப்பும் ஆன்ற மதிப்பும், மிகைமக்களால் மதிக்கற் பால என்பதை அன்று நான் நன்கு உணர்ந்தேன். மணி ஐயரவர்கள் அப்படிச் செய்யாவிட்டால் நான் கூட்டத்தில் நசுக்குண்டு என் கடமையைச் செய்ய முடியாமல் வீட்டிற்குத் திரும்பிப் போயிருக்க வேண்டியதுதான்" என்று சொன்னார்.

சென்னையில் பல சங்கீத சபைகள் உண்டு. அவ்விடங்களில் அடிக்கடி இசை நிகழ்ச்சிகளும் கதாகாலக்ஷேபங்களும் நிகழும் இப்போதைப் போலச் சினிமா வளர்ச்சி பெறாத ஊமைச் சினிமாவாக இருந்ததனால் அத்தகைய கச்சேரிகளுக்கும் கால க்ஷேபங்களுக்கும் மக்கள் திரள்திரளாகக் கூடுவார்கள். அத்தகைய நிகழ்ச்சிகளுக்கு ஒருவரைத் தலைமை வகிக்கச் செய்து நிகழ்ச்சி நடத்தியவரை இறுதியில் பாராட்டும் வழக்கம் அப்போது இருந்து வந்தது. ஆசிரியப்பிரான் சென்னைக்கு வந்த பிறகு இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றில் கலந்துகொள்ள நேர்ந்தது. எல்லாச் சபையினரும் ஆசிரியரை அழைப்பார்கள். பொழுது விடிந்தால் இதே வேலையாக இருந்தால் தம் தமிழ்ப்பணிக்கு இடையூறு நேரு மென்றெண்ணிச் சில முக்கியமான நிகழ்ச்சிகளுக்கு மட்டும் போய்ச் சிறப்பித்துவிட்டு வருவார். அப்படியே இலக்கியக் கூட்டங்களுக்கும் போய் வருவார்.

ஆசிரியப்பிரானுடைய பாராட்டுப் பெற்றவர்கள் பலர். மாங்குடி சிதம்பர பாகவதர், பிடாரம் கிருஷ்ணப்பா, பாலக்காடு அனந்தராம பாகவதர், பழனி சுப்பிரமணிய பாகவதர், திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகள், முத்தையா பாகவதர் முதலியவர்களுடைய நிகழ்ச்சிகள் பலவற்றில் ஆசிரியர் கலந்து கொண்டு அவ்வப்போது உசிதமாகப் பாராட்டுரை பகர்ந்தார்.

### அன்னையார் மறைவு

1905-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் ஆசிரியப்பெருமானுடைய அன்னையார் சரஸ்வதி அம்மாள் நோய்வாய்ப்பட்டு 24-03-1905இல் சிவபதம் அடைந்தார்கள். சரஸ்வதியினுடைய பிள்ளை என்று சிறப்பாகப் போற்றப் பெறும் வகையில் ஆசிரியரைச் செய்தவர் அந்தப் பெருமாட்டியார். உத்தமதான புரத்திலிருந்து வேத வித்தகர்கள் வந்து எல்லாக் காரியங்களையும் நடத்திக் கொடுத்தார்கள்.

அப்போது அரசில் பெரிய உத்தியோகத்தில் இருந்த திவான் பகதூர் சீநிவாச ஐயங்கார் ஆசிரியர் வீட்டிற்குத் துக்கம் கேட்க வந்திருந்தார். அவர் பல ஆண்டுகள் பச்சையப்பன் கல்லூரி அறக்கட்டளைக் குழுவில் தலைவராக இருந்தார். ஜன விநோதினி என்ற பத்திரிகையையும் மகாராணி என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தில் திராவிட மொழிக் குழுவின் தலைவராக அவர் இருந்தார்.

அவர் ஆசிரியர் இல்லத்துக்கு வந்தபோது ஆசிரியர் அவரை வரவேற்றார். துக்கம் விசாரித்தார். அந்தச் சமயம் பேச்சோடு பேச்சாக மணிமேகலைக் கதைச்சுருக்கத்தை எம்.ஏ.வகுப்புக்குப் பாடமாக வைக்க ஏற்பாடு செய்தி ருப்பதைச் சொல்லி, "இதனால் வருகிற பணம் மாதுர் கைங்கர்யத்திற்கு இருக்கட்டும்" என்று சொன்னார். 'இறைவன்திருவருள்எப்படிஎப்படியோவந்து நமக்கு உதவி செய்கிறது', என்று ஆசிரியப்பிரான் எண்ணங்கொண்டார்.

### மாணவர் துடுக்கை அடக்கியது

சென்னை மாநிலக்கல்லூரிக்கு ஆசிரியர் வந்த புதிது. இங்கே மாணவர் களில் சிலர் அடக்கமின்றி நடந்து வந்தார்கள். ஒரு சமயம் வகுப்பின் கடைசி வரிசையில் இருந்த ஒரு மாணவர் பாடத்தைக் கவனிக்காமல் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தார்.

ஆசிரியர் மேடையிலிருந்து இறங்கி அந்த மாணவர் அருகில் சென்று, "பாடத்தைக் கவனிக்காமல் ஏதோ கிறுக்கிக் கொண்டிருக்கிறாயே!" என்று கேட்டார்.

உடனே அந்தப் பையன் துடுக்காக, "இங்கே நாங்கள் விரும்பியதைச் செய்வோம். இது கும்பகோணம் அல்ல" என்று சொன்னான். ஆசிரியருக்கு வருத்தமுண்டாகிவிட்டது. உடனே ஒன்றும் சொல்லவில்லை. இரண்டு மூன்று நாட்களாயின. மீண்டும் ஒரு நாள் ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது அவனைக் கவனித்தார். அந்தப் பையன் கால்மேல் கால்போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அதைக் கவனித்த ஆசிரியர் பாடம் சொல்லிக் கொண்டிருந்தபோதே ஒரு கதையைச் சொல்லத் தொடங்கினார்.

"இராவணனுக்கு முன் அனுமானைக் கொண்டு வந்தார்கள் இராவணன் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். அந்த அவையில் அனுமானுக்கு உட்கார அவன் இடம் கொடுக்கவில்லை. உடனே அனுமான் தன் வாலை நீட்டிச் சுருட்டிச் சுருட்டிப் பெரிய சிம்மாசனம் போல அமைத்து. அதன்மேல் உட்கார்ந்து கொண்டு கால்மேல் கால் போட்டுக் கொண்டான். அவன் உட்கார்ந்திருந்தது எப்படி இருந்தது தெரியுமா? அதோ அவர் உட்கார்ந்திருக்கிறாரே, அது மாதிரி இருந்தது" என்ற அந்தப் பையனைச் சுட்டிக்காட்டினார்.

உடனே எல்லா மாணவர்களும் அந்தத் துடுக்கு மாணவன் பக்கம் திரும்பிப் பார்த்துக் கொல் என்று சிரித்தார்கள். அந்த மாணவனுக்கே மிகவும் வெட்கமாகிவிட்டது.

உடனே ஆசிரியர், "சரியான சமயத்தில் எனக்கு உதாரணம் காட்டுவதற்கு ஏற்றபடி நடந்து கொண்டாய்; மிக்க நன்றி" என்று சொல்லி மேலே பாடத்தைத் தொடங்கினார்.

அது முதல் அந்தப் பையன் மிகவும் அடங்கியவனாக மாறி விட்டான்.[1]

---

[1] இத்தகைய பல நிகழ்ச்சிகளை ஆசிரியர் தாம் எழுதிய "மாணாக்கர் விளையாட்டுக்கள்" என்ற கட்டுரையில் எழுதியிருக்கிறார்.

## 10. சென்னை வாழ்க்கை உறுதியானது

### கண்டனத்தைப் புறக்கணித்தல்

ஆசிரியப்பெருமானது வகுப்பில் இருந்த சில மாணவர்களைச் சில பேர்கள் தூண்டிவிட்டு ஆசிரியர் பாடம் சொல்லும் போது பல விதமான தடைகளை உண்டாக்கும்படி செய்வார்கள்.

ஒரு சமயம் யாரோ ஒருவர் ஒரு துண்டுப் பத்திரிகையை வெளியிட்டிருந்தார். அதில், "நச்சினார்க்கினியர் தவறு செய்தார்; சங்கராசாரியார் தவறு செய்தார்; உ.வே.சாமிநாதையரும் பிழைகளைச் செய்திருக்கிறார்" என்று அச்சிட்டிருந்தது.

ஒரு மாணவன் மிகவும் வருத்தத்தோடு அந்தத் துண்டுப் பத்திரிகையை ஆசிரியரிடம் கொண்டு வந்து காட்டினான்.

அதில் இருப்பதைப் பார்த்தவுடன் ஆசிரியப்பெருமான் கோபம் கொள்ளவில்லை; வருத்தம் அடையவில்லை. புன்னகை பூத்த முகத்துடன், "இந்த எளியேனை அவ்வளவு உயரத்திற்கா ஏற்றி விட்டார்கள்? சங்கராசாரியாருடனும், நச்சினார்க்கினியருடனும் சமமாக என்னை வைத்தல்லவா சொல்லியிருக்கிறார்கள்?" என்றவுடன், மிகவும் வருத்தத்துடன் அந்தத் துண்டுப் பத்திரிகையைக் கொண்டு வந்த மாணவனே வருத்தம் மாறிச் சிரித்துவிட்டான்.

மற்றொரு சமயம், ஆசிரியரைப் பற்றிய கண்டனத் தாள் ஒன்றை ஒரு மாணாக்கன் ஆசிரியரிடம் காட்டி வெளிப்படையாகத் தூஷிப்பதையும் காட்டி மிகவும் வருந்தினான். ஆசிரியரோ சிறிதும் கோபம் கொள்ளாமல், "இதை எழுதியவர் என் தாயைவிடப் பெரியவர்" என்றார். மாணாக்கர் ஒன்றும் விளங்காமல் ஆசிரியர் முகத்தைப் பார்த்தார். "என் தாய் என் மலத்தைக் கையால்தான் எடுப்பார். இவர்களோ தம் நாவால் எடுக்கிறார்கள்" என்றார்.

ஆசிரியப்பெருமான் பாடம் சொல்லும்போது இடையிடையே ஒரு மாணவன் அடிக்கடி கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தான். பாடத்திற்கும் அந்தக் கேள்விகளுக்கும் ஒரு சம்பந்தமும் இராது. என்றாலும் ஆசிரியர்

பொறுமையாக அவன் கேட்கும் கேள்விகளுக்குச் சில காலம் விடையளித்து வந்தார்.

அந்த மாணவன் வேண்டுமென்றே இப்படிக் குறும்பாகப் பல கேள்விகளைக் கேட்கிறான் என்றும், வேறு யாரோ ஒருவரது தூண்டுதலினால் தான் அப்படிக் கேட்கிறான் என்றும் ஆசிரியர் உணர்ந்தார்.

ஒரு நாள் அந்தப் பையன் வழக்கம்போலக் கேள்வி கேட்டவுடன் அதற்குப் பதில் சொல்லிவிட்டு ஆசிரியர் பேசலானார். "நான் இங்கே பாடம் சொல்ல வந்திருக்கிறேன். பாடத்திற்குச் சம்பந்தப்பட்ட கேள்வி கேட்டால் நான் பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். பாடத்திற்குச் சம்பந்தம் இல்லாத கேள்விகளைக் கேட்பதற்கோ, அவற்றுக்கு நான் பதிலளிப்பதற்கோ இது நேரம் அன்று. இதிலே பொழுதைப் போக்கிவிட்டால், சொல்லிக் கொடுக்க வேண்டிய பாடம் நின்றுவிடும். உங்கள் கேள்விகளுக்கு விடை தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வம் இருந்தால் என் வீட்டிற்கு வந்து கேளுங்கள்; பதில் சொல்கிறேன்" என்று சொன்னதோடு, "இந்தக் கேள்விகளை நீயாகக் கேட்கவில்லை என்று நிச்சயமாகத் தெரியும். நீ கேட்கும் கேள்விகள் வேறு நூல்களில் இருப்பவை. வேறு யாரோ தூண்டிவிட்டு உன்னைக் கேட்கச் சொல்லியிருக்கிறார்கள் என்பதை நான் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறேன்" என்று சொன்னவுடன் அந்தப் பையனுக்கு நடுக்கம் உண்டாகிவிட்டது. அதுமுதல் அவன் கேள்வி கேட்பதை நிறுத்திக் கொண்டான்.

## கும்பகோணத்துக்கு மாற்றம் ஆகாமை

ஆசிரியர் கும்பகோணத்தில் வேலை பார்த்து வந்தபோது அங்கே மிடில்மாஸ்ட் என்பவர் முதல்வராக இருந்தவர். பிறகு அவர் சென்னை மாநிலக் கல்லூரிக்குக் கணித ஆசிரியராக வந்தார். அதன் பிறகு அவர் கல்வித்துறையில் துணை இயக்குநராக ஆனார்.

1904-ஆம் ஆண்டு இறுதியில் ஒரு நாள் மிடில்மாஸ்ட் தம்மை வந்து பார்க்கும்படியாக ஆசிரியருக்குச் சொல்லி அனுப்பினார். ஆசிரியர் அவரைப் பார்க்கச் சென்றபோது, "உங்களைக் கும்பகோணத்திற்கு மறுபடியும் மாற்றலாம். நீங்கள் அதற்குச் சித்தமாக இருங்கள்" என்று தெரிவித்தார்.

எதிர்பாராத இந்தச் செய்தியைக் கேட்ட ஆசிரியருக்கு மனம் குழம்பியது. ஒன்றும் பேசத் தோன்றவில்லை. 'இதுவும் ஆண்டவன் சோதனை போலும்!' என்று எண்ணித் தம் இல்லத்திற்குத் திரும்பி விட்டார்.

பதிப்பு வேலையும், ஆராய்ச்சியும் சென்னையிலே மிகவும் சிறப்பாக நடந்துவந்த நேரம் அது. மறுபடியும் கும்பகோணத்திற்குப் போனால்

இந்த அனுகூலங்கள் எல்லாம் அங்கே கிடைப்பது அரிதாயிற்றே என்று ஆசிரியருக்குக் கவலை உண்டாயிற்று. என்ன செய்வது என்று தெரிய வில்லை.

அப்போது ஆசிரியருடைய நண்பராகிய ஆர்.வி.சீநிவாசையர் பதிவுத்துறைத் தலைவராக இருந்தார். அவரிடம் சென்று மிடில் மாஸ்ட் தம்மிடம் சொன்னதைத் தெரிவித்ததோடு, "கும்பகோணம் போவதற்கு எனக்கு வேறு எந்த விதமான தடையும் இல்லை. இங்கே என்னுடைய பதிப்பு வேலைகளுக்கு எவ்வளவோ அனுகூலங்கள் இருக் கின்றன. அங்கே நான் திரும்பவும் போவதனால் இந்தப் பதிப்பு வேலை களுக்கும், பழைய நூல்களின் ஆராய்ச்சிப் பணிக்கும் தடங்கல் உண் டாகுமே என்று தான் வருந்துகிறேன்" என்று தெரிவித்தார்.



இ.டபுள்யு. மிடில்மாஸ்ட்

அப்போது சீநிவாசையர் வேறு ஒன்றும் சொல்லவில்லை. "மிடில் மாஸ்ட் துரை தமக்கும் மேலே வேறு ஓர் அதிகாரி இருப்பதைத் தெரிந்து கொள்ளவில்லை போலும்!" என்றார்.

"இதைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பு என்னுடையது. நீங்கள் இதுபற்றிச் சிறிதும் கவலை கொள்ளவேண்டாம். எவ்விதச் சோர்வும் இல்லாமல் உங்கள் வேலையைப் பாருங்கள்" என்று ஆறுதலளித்து ஆசிரியரை அனுப்பிவைத்தார்.

அப்போது கல்வித்துறையின் தலைவராக இருந்தவர் போர்ன் துரை. அவர் உதகமண்டலத்திற்குச் சென்றிருந்தார். சீநிவாசையர் அங்கே சென்று அவரைக் கண்டு பேசினார். "ஐயர் அவர்கள் தாமாக விரும்பிச் சென்னைக்கு வரவில்லை. நாங்கள் எல்லோருமாகச் சேர்ந்து அவரை இங்கே வருவித்தோம். அவருடைய ஆராய்ச்சிப் பணிகளும், பதிப்பு வேலைகளும் இங்கே நன்றாக நடைபெறுகின்றன. அவர் செய்யும் ஆராய்ச்சி அவருக்கு மாத்திரம் நன்மை உண்டாக்கும் என்பது இல்லை. அவை தமிழ் உலகத்திற்கே பெரும் உபகாரமாக இருக்கின்றன. அவருடைய புகழ் உலகம் முழுவதும் பரவியிருக்கிறது. வெளிநாட்டில் அவர் நண்பர்கள் பலர் இருக்கிறார்கள். அத்தகையை அவருக்கு

எத்தனையோ வகைகளில் நாம் உதவி செய்தாக வேண்டும் அல்லவா?" என்று எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படிச் சொன்னார்.

அதைக் கேட்டுக் கல்வித்துறை அதிகாரி சென்னையிலிருந்து ஆசிரியப் பெருமானை மாற்றவே கூடாது என்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டார்.

### அரசினர் உதவி

ஆசிரியர் வெளியிடும் நூல்கள் தமிழின் பெருமையையும் பழங் காலத்தில் இருந்த தமிழர்களின் நாகரிகத்தையும் அறிந்து பலரும் வியந்து பாராட்டினார்கள். கல்வித்துறையில் தலைவர்களாக இருந்தவர்களுக்கும் ஆசிரியருடைய உழைப்பின் பயனும் அவருடைய கல்வித் திறமையும் நன்றாகப் புலப்பட்டன. அதனால் அவர்கள் ஆசிரியரைப்பற்றிய பரிந்துரையை அரசினருக்கு எழுதுவது வழக்கம். அதன் பயனாகச் சென்னை அரசினர் ஆசிரியரின் புத்தக ஆராய்ச்சிச் செலவுக்கு ஆயிரம் ரூபாய் வழங்குவதாகத் தீர்மானித்து வழங்கி னார்கள். அதற்குரிய உத்தரவு 1909 ஆகஸ்டு மாதம் 5-ஆம் தேதி கிடைத்தது.

### தியாகராச லீலை

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகராசப் பெருமான் செய்த திருவிளையாடல்கள் பல இருக்கின்றன. மதுரை மாநகரில் சொக்கநாதர் 64 லீலைகள் செய்தார். ஆனால் திருவாரூர்த் தியாகராசரோ 360 லீலைகள் செய்ததாகப் புராணம் சொல்கிறது. அந்த லீலைகளைப் பற்றிய வடமொழிப் புராணம் ஒன்று உண்டு.

திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அந்த நூலைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டுமென்று அவாவினார். மூலநூல் முற்றும் கிடைக்கக்கூடும் என்ற எண்ணத்தில் நாட்டுப் படலம், நகரப் படலம் முதலியவற்றை மிக விரிவாக அந்தக் கவிஞர் அமைத்தார். ஆனால் மூல நூல் முற்றும் கிடைக்கவில்லை. கிடைத்த சிலவற்றைக் கொண்டு 14 லீலை களை இயற்றினார்.

ஆசிரியப் பெருமான் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்ட காலத்தில் அந்த நூலை நன்கு பாடம் கேட்டு இன்புற்றிருந்தார். பிள்ளையவர்கள் சொல்லச் சொல்ல அந்த நூலை எழுதியவர் தியாகராச செட்டியார். முற்றுப் பெறாத நூல் என்றாலும் அது சுவை மிக்கதாக இருந்தமையினால் அதை அச்சிட வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டாயிற்று.

தூத்துக்குடிச் செல்வர் ரா.மா.மே.சி.தா.சிதம்பரம் செட்டியார் அவர்கள் வேண்டிய உதவி செய்வதாகச் சொல்லி நூலைப் பதிப்பிக்கும்படி வற்புறுத்தினார். அவ்வாறே 1905-ஆம் ஆண்டு அந்த நூல் பதிப்பிக்கப் பெற்றது.

ஆசிரியப்பிரான் மிகவும் அருமையான சங்க நூல்களைப் பதிப்பித் திருக்கிறார். தியாகராச லீலையோ பிற்காலப் புலவர் இயற்றிய நூல்; அரை குறையானது. நமக்கு அப்படித்தான் தோன்றும். ஆனால் ஆசிரியருக்கோ அது தம் ஆசிரியர் பாடிய நூல், அதைப் பதிப்பித்த போது முன்னுரையில் ஒரு பாடல் எழுதி அமைந்தார்.

> "எண்ணிய பலவும் மாணவர்க் கன்பின் ஈந்திடு நிதிதமிழ் விளங்க
> நண்ணிய புகழ்மீ னாட்சிசுந் தரநன் னாவலன் நன்கினி தாய்ந்து
> பண்ணிய வீதி விடங்கர்தம் ஆடற் பனுவலைப் பதிப்பிக்க இயைந்த
> புண்ணிய மதனை நினைதொறும் எனது புந்திமிக் கின்புறு மாலோ".

சங்க நூல்களைப் பதிப்பித்ததைவிடத் தம் ஆசிரியர் நூலைப் பதிப்பித்ததைப் பெறும் புண்ணியமாகக் கருதினார். என்னே அவருடைய குருபக்தி!

# 11. மகாமகோபாத்தியாயப் பட்டம் பெற்றது

1906-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி பிறந்தது. அரசினர் இந்த நாட்டிலுள்ள பல மக்களுக்குப் பல பட்டங்களை வழங்கி ஊக்கம் அளிக்கும் நாள் அது.

அன்று காலையில் சி.வி.கங்காதர சாஸ்திரிகள் ஆசிரியப் பெருமானை வந்து கண்டார். "எங்களுக்கு எல்லாம் அளவில்லாத மகிழ்ச்சி. எல்லோரும் ஆனந்தத்தால் குதிக்கிறோம்" என்றார்.

ஆசிரியப்பெருமானுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "உங்களுக்கு மகாமகோபாத்தியாயப் பட்டம் கிடைத்ததைப் பற்றிக் கொண்டாடுகிறேன். அந்தச் செய்தி இன்னமும் உங்களுக்குத் தெரியாதா? தெரிந்திருக்க வேண்டுமே!" என்று கேட்டார் சாஸ்திரிகள். ஆசிரியருக்கு அந்தச் செய்தி அப்போதுதான் தெரிந்தது.

அதுமுதல் நேரிலே கண்டு ஆசிரியரைப் பாராட்டியவர்கள் பலர். கடிதங்கள் மூலமாகத் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டவர்கள் மிகமிகப் பலர்.

உயர்நீதிமன்றத்தில் நீதிபதியாக இருந்த மணி ஐயர், "மகா மகோபாத்தியாயப் பட்டம் தங்களுக்கு வழங்கப்பட்டதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அது தங்களுக்கு வரும் என்று எனக்குத் தெரியும்" என ஒரு கடிதம் அனுப்பினார். அவருடைய முயற்சியினால்தான் ஆசிரியருக்கு அந்தப் பட்டம் கிடைத்தது என்பது அதனால் தெரிய வந்தது.

பத்திரிகைகள் எல்லாம் ஆசிரியருக்கு அந்தப் பட்டம் கொடுத்தது பற்றி மிகமிகப் பாராட்டி எழுதின. பலர் செய்யுட்களாலேயே பாராட்டி எழுதினார்கள். எல்லோருக்கும் ஆசிரியர் ஒரு பதிலை அனுப்பினார். அது வருமாறு:

"தாங்கள் அன்புடன் எழுதிய பத்திரிகை வரப்பெற்றுத் தாங்கள் வைத்திருக்கும் உள்ளன்பின் மிகுதியை உணர்ந்தேன்".

"குறிப்பிட்ட பெயரை வகிப்பதற்கு ஒருசிறிதும் ஆற்றல் இல்லே னானதால் அச்செய்தி தெரிந்த நிமிஷம் முதல் மிக்க நாணமும், அச்சமும்



To

**M. R. Ry. V. Swaminatha Aiyar,**
Tamil Pandit, Presidency College,
Madras.

I hereby confer upon you the title of Mahamahopadhyaya as a personal distinction.

Viceroy and Governor General of India.

Fort William,
The 1st January 1906.




மகாமகோபாத்தியாயச் சான்றிதழ்

உடையேனாகிய யான் தங்களுக்கும் தங்கள் போன்றவர்களுக்கும் இதன் நிமித்தம் உண்டாகும் உண்மையான மனமகிழ்ச்சியை நோக்கி ஒருவாறு ஆறுதலுற்று வருகிறேன்".

"பாஷையிலுள்ள பல கலைகளிலும் அதிநிபுணர்களாகிய பண்டிதர்கள் பெற்று வந்த இப்பெயரைச் சிறியேனுக்கு அளித்தது தங்கத்திற்கும் இரும்பிற்கும் பொன் என்ற பெயரை இட்டிருப்பது போலும்."

"ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே? சர்வேசுவரனுடைய திருவருளும் தங்களுடைய மெய்யன்பும் வேண்டிய தமிழ்ப் பயிற்சியை இனி உண்டு பண்ணுவதன்றி இனிச் செய்யவெண்ணியிருக்கும் நூலாராய்ச்சிகளைக் கவலையின்றிச்செய்வித்து, அறிவிக்கவேண்டியவற்றை எனக்கு அறிவித்துப் பாதுகாத்து நிறை வேற்றுமென்று எப்பொழுதும் திருவருளைச் சிந்தித்துக் கொண்டு வருகிறேன்".

"அவனன்றி யோரணுவும் அசையாது என்பது உண்மை யன்றோ?"

பலவிடங்களில் ஆசிரியப்பெருமான் இந்தப் பட்டம் பெற்றதற்காகப் பாராட்டு விழா நடத்தினார்கள். அந்நாள்வரை வடமொழி வல்லுநர்களுக்கே அந்தப் பட்டம் கிடைத்து வந்தது. இப்போது ஆசிரியருக்கு அளித்த இந்தப் பட்டம், அரசினர் தமிழையே கௌரவித்தது ஆகும் என்று பலர் பாராட்டி எழுதினார்கள்.

## வேல்ஸ் இளவரசர் வருகை

*1906*-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வேல்ஸ் இளவரசரும், அவர் தேவியாரும் சென்னைக்கு விஜயம் செய்தார்கள். ஒரு வாரத்திற்குமேல் கவர்னரது மாளிகையில் தங்கியிருந்தார்கள். அந்தச் சமயத்தில் அவர்களைப் பாராட்டிக் கௌரவிப்பதற்காகச் சென்னை நகரே விழாக்கோலம் கொண்டிருந்தது. பலவிடங்களில் கொண்டாட்டங்கள் நடந்தன. வெளியூர்களிலிருந்தும் சிற்றூர்களிலிருந்தும் ஜமீன்தார்களும், செல்வர்களும், மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள். பல அரிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அப்போது கவர்னர் மாளிகையில் ஒரு தர்பார் நடந்தது.

அதற்கு முன்பு சென்னையில் இந்தியர்கள் வசித்து வந்த பகுதியை 'ப்ளாக் டவுன்' என்று ஆங்கிலேயர் வழங்கி வந்தார்கள். அது பலருடைய உள்ளத்தைப் புண்படுத்தி வந்தது. ஜார்ஜ் இளவரசர் வந்ததையொட்டி, அதற்கு 'ஜார்ஜ் டவுன்' என்று பெயரை மாற்றி வழங்கலானார்கள்.

வேல்ஸ் இளவரசர் வரவையொட்டி அறிஞர் பெருமக்களுக்குப் பல வகையான பட்டங்களும், சன்மானமும் அளிக்கப்பெற்றன. அப்போது ஆசிரியப் பெருமானுக்குத் தங்கத் தோடா அணிவித்து மதிப்புச் செய்தார்கள்.

## பாரதியார் பாடல்கள்

1906-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 17-ஆம் தேதி சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ச் சங்கத்தில் ஆசிரியப்பெருமான் மகா மகோபாத்தியாயப் பட்டம் பெற்றதைப் பாராட்ட ஒரு கூட்டம் நடைபெற்றது. அந்தக் கூட்டத் திற்குப் பாரதியார் வந்திருந்தார்.

இந்நிகழ்ச்சி பற்றிச் சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ் மாணவர்கள் சங்க 1905-6-ஆம் ஆண்டு அறிக்கைப் பத்திரத்தில் பின்வருமாறு குறிக்கப் பெற்றுள்ளது.

"எங்கள் ஆசிரியரும், இச்சங்கத் தலைவருமாகிய மகா-ஸ்ரீ-ஸ்ரீ வே.சாமிநாதையரவர்கள் இராசாங்கத்தாரால் மகாமகோபாத்தியாயப் பட்டம் சூட்டப்பட்ட விஷயத்தைக் குறித்துக் கொண்டாடுவதற்குச் சென்னைச் சர்வகலாசாலை அங்கத்தினர்களில் ஒருவராகிய மகா-ஸ்ரீ-ஸ்ரீ. ஜே.எம்.வேலுப்பிள்ளை அவர்களுடைய அக்கிராசனத்தின் கீழ் இவ் வருஷம் மார்ச்சு மாதம் 17-ஆம் தேதி ஒருமுறை கூடியது. அப்போது மயிலாப்பூர், பி.எஸ்.ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் மகா-ஸ்ரீ-ஸ்ரீ இ.வை அனந்தராமையர் அவர்களும் சுதேசமித்திரன் உதவிப் பத்திராதிபர் ஆகிய மகா-ஸ்ரீ-ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் அவர்களும் மற்றும் சிலரும் பாடல்களை நூதனமாக இயற்றிப் படித்தார்கள்."

இதிலிருந்து மகாகவி சுப்பிரமணிய பாரதியார் அக்காலத்தில் சுதேச மித்திரன் பத்திரிகையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றி வந்தார் என்பது தெரிகிறது.

அப்போது பாரதியார் மூன்று பாடல்களை எழுதி வாசித்தார் அந்த மூன்று பாடல்களையும் அங்கேயே ஒரு தாளில் பென்சிலால் எழுதினார். அந்தப் பாடல்கள் வருமாறு:

1. செம்பரிதி ஒளிபெற்றான்; பைந்நறவு
 சுவைபெற்றுத் திகழ்ந்தது; ஆங்கண்
உம்பரெலாம் இறவாமை பெற்றனரென்று
 எவரேகொல் உவத்தல் செய்வார்?
கும்பமுனி எனத்தோன்றும் சாமிநா
 தப்புலவன் குறைவில் சீர்த்தி
பம்பலுறப் பெற்றனனேல், இதற்கென்கொல்
 பேருவகை படைக்கின் றீரே?

2. அன்னியர்கள், தமிழ்ச்செவ்வி அறியாதார்
இன்றெம்மை ஆள்வோ ரேனும்,
பன்னியசீர் மகாமகோ பாத்தியா
யப்பதவி பரிவின் ஈந்து,
பொன்னிலவு குடந்தைநகர்ச் சாமிநா
தன்றனக்குப் புகழ்செய் வாரேல்,
முன்இவன்அப் பாண்டியர்நாள் இருந்திருப்பின்
இவன்பெருமை மொழிய லாமோ?

3. நிதியறியோம், இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தம் துய்க்கும்
கதியறியோம் என்றுமனம் வருந்தற்க;
குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய்; அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்;
இறப்பின்றித் துலங்கு வாயே.

'சில புலவர்கள் ஏதேனும் காரணத்தால் வெளிப்படையாகப் புகழாமல் இருந்தாலும் அவர்கள் உள்ளம் வாழ்த்தும்' என்ற கருத்து இக்காலத்தில் எவ்வளவு உண்மையானதென்று விளங்குகிறது.

ஆசிரியப்பெருமான் சென்னைக்கு வந்தபிறகு, அவரிடம் தம்முடைய பிள்ளைகளுக்குத் தனியாகப் பாடம் சொல்லும்படி ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சூனாம்பேட்டை ஜமீன்தார் போன்ற சில செல்வர்கள் விரும்பினார்கள். அதற்குத் தக்க ஊதியம் கிடைக்கும் என்பதையும் தெரிவித் தார்கள். முன்பு சிலர் பாட புத்தங்களை எழுதச்சொன்னதுபோல இருந்தது இந்த யோசனை.

ஆசிரியருக்கோ பண்டைத் தமிழ்நூல் ஆராய்ச்சியிலும், பதிப்பிலும் இருந்து வந்த உள்ளம் வேறு எதிலும் ஈடுபாடு கொள்ளவில்லை.

கல்லூரியில் மாணவர்களுக்குப் பாடம் நடத்துவார். தமக்கு உதவி செய்கிறவர்களுக்கு மட்டும் தம் வீட்டில் தமிழ் நூல்களைப் பாடம் சொல்லி வந்தார். ஊதியம் கருதிச் செல்வர்களின் வீட்டிற்குச் சென்று அவர்கள் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லும் வழக்கத்தை அவர் மேற்கொண்டி ருந்தால் ஒருகால் நிறையப் பொருளை ஈட்டியிருக்கலாம். அதனால் அவர் விரும்பியபடி பண்டைத் தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்யப் போதிய அவகாசம் அவருக்குக் கிடைக்காமல் போயிருக்கும். எனவே, பொருளைக் கருதி அத்தகைய வேலைகளை மேற்கொள்ளாமல் மறுத்துவிட்டார்.

## அர்பத்நட் வங்கி முறிவு

அந்தக் காலத்தில் அர்பத்நட் வங்கி என்ற பெரிய நிறுவனம் சென்னையில் மிகப் புகழ்பெற்று விளங்கியது. 1906-ஆம் ஆண்டு அது திடீரென்று வீழ்ச்சியுற்றது. அதில் பணம் போட்டிருந்த பல பேர்கள் தம் பொருளை இழந்து துயரத்திற்கு ஆளானார்கள். பல குடும்பங்கள் ஆயிரக்கணக்கில் அதில் பணம் போட்டிருந்தமையால், அது முறிந்த பிறகு அவல நிலைக்கு வந்துவிட்டனர். பலர் சித்த சுவாதீனம் இழந்தனர். குறைந்த வருமானம் உடையவர்கள் சிலர் தாம் சம்பாதித்தது அனைத்தையும் தங்கள் எதிர்காலம் கருதி அதில் போட்டிருந்ததனால், அது முறிந்தவுடன் உயிரையே விட்டு விட்டார்கள்.

அந்தக் காலத்தில் தம்பு செட்டித் தெருவில் ரிப்பன் புத்தக சாலை என்ற ஒரு புத்தக வெளியீட்டு நிலையம் இருந்தது. அதில் ஆசிரியப் பெருமான் பதிப்பித்த நூல்களையும் விற்பனை செய்து வந்தார்கள். விற்பனை யாகும் புத்தங்களின் கணக்கை மூன்று மாதத்திற்கு ஒரு முறையோ, ஆறு மாதத்திற்கு ஒரு முறையோ, அவற்றுக்குரிய விலையைச் 'செக்'காக வைத்து அனுப்புவது வழக்கம். அர்பத்நட் கம்பெனி முறிந்து போவதற்கு ஒரு வாரத்திற்கு முன்தான் ரூ.125-க்கு அர்பத்நட் கம்பெனிச் செச்கை ரிப்பன் புத்தக சாலை நிறுவனத்தார் ஆசிரியருக்கு அனுப்பி வைத்தார்கள்.

இரண்டு நாள் கழித்துத் திருவல்லிக்கேணியில் இருந்த அர்பன் கோவாபரேடிவ் சொசைடிக்கு ஆசிரியப் பெருமானுடைய குமாரர் திரு கல்யாணசுந்தரையர் சென்று வீட்டிற்கு வேண்டிய சாமான்களை எல்லாம் வாங்கிகொண்டு, அதற்கு அந்தச் செக்கை அவர் களிடம் கொடுத்துவிட்டு, மிச்சப் பணத்தைப் பெற்றுக் கொண்டு வந்துவிட்டார்.

அர்பத்நட் கம்பெனி ஒரு வாரத்திற்குள் முறிந்துவிட்டது. அந்தக் கூட்டுறவுச் சங்கத்தில் வேலை பார்த்து வந்த ஒருவர் ஆசிரியப் பெருமானிடம் வந்து, "நீங்கள் கொடுத்த செக்கை மாற்ற முடியவில்லை. செக்கிற்குப் பணம் கொடுங்கள். இல்லையானால் பிறகு தருவதாகவாவது எழுதிக் கொடுங்கள். இந்தக் செக்கிற்குரிய பணத்தை நீங்கள் ரிப்பன் புத்தகசாலை நிறுவனத் தாரிடமிருந்தே பெற்றுக் கொள்ளலாம்" எனத் தெரிவித்தார்.

ஆசிரியரும் அந்தச் செக்கைப் புத்தகசாலை உரிமையாளரிடமே கொடுத்து, அதற்குரிய பணத்தைப் பெற்று வரச் சொன்னார். ஆனால் அர்பத்நட் கம்பெனியில் பணத்தைப் போட்டு இழந்தவர் களில் ரிப்பன் புத்தக வெளியீட்டாரும் ஒருவர் ஆதலால், அவர் மிகவும் வருத்தத்துடன், "அது எப்படி முடியும்? முன்பே நான் செக் கொடுத்தவுடன் நீங்கள்

அதனைப் பணமாக மாற்றிக் கொண்டிருக்கலாம். அப்படி மாற்றாமல் பல நாட்கள் வைத்திருந்தது உங்கள் குறைதான்'' என்று சொல்லிவிட்டார்.

திருவல்லிக்கேணி அர்பன் கூட்டுறவுச் சங்கத்தைத் தொடங்கியவர் களில் ஆசிரியரும் ஒருவர். பல பேர் அந்தச் சங்கத்திற்கு இப்படிச் செக்கு களைக் கொடுத்திருந்தார்கள். எனவே இதுபற்றி யோசித்து முடிவு செய்ய வேண்டுமென்று அந்தச் சங்கத்திற்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார்.

அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. சில நாள்கள் கழித்து ஆசிரியர் அந்தச் செக்குக்குரிய பணத்தை அந்தச் சங்கத்திற்குக் கொடுத்துவிட்டார். 'தாமதம் காரணமாக இப்படி நேர்ந்ததே!' என்று அவர் எண்ணவில்லை. பாங்கு முறிந்ததனால் எவ்வளவு குடும்பங்கள் அவல நிலையை அடைந் திருக்கும் என்றே எண்ணி இரங்கினார்.

### ஜி.யு.போப்

ஆக்ஸ்பர்டு பல்கலைக்கழகத்தில் தமிழாசிரியராக இருந்த ஜி.யு.போப் அவர்கள் அடிக்கடி ஆசிரியருக்குக் கடிதம் எழுதுவார். ஆசிரியர் பதிப்பித் திருந்த புறநானூற்றை மிகவும் அழுத்தமாகப் படித்தார். 9-10-1906 அன்று அவர் எழுதிய கடிதத்தில், "தாங்கள் அனுப்பிய புறநானூற்றை மூன்றாம் தடவையாக இப்போது வாசித்துக் கொண்டிருக்கிறேன். அவற்றில் உள்ள பல அரிய பகுதிகளை ஏற்கெனவே இங்கிலீஷில் மொழிபெயர்த்துவிட்டேன். மணிமேகலையையும் முழுதும் ஊன்றிப் படித்து மொழிபெயர்த்தும் ஆயிற்று. தங்களுடன் பல மணிநேரம் உட்கார்ந்து நேரில் தமிழைப் பற்றிப் பேச விரும்புகிறேன். தங்களைத்தான் நான் என்றும் என் தமிழ்க்குருவாகக் கொண்டுள்ளேன்'' என்று எழுதியிருக்கிறார்.

அவர் பல நூல்களைத் தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த் திருக்கிறார். அவற்றில் சிலவே வந்தனவன்றி யாவும் வெளிவரவில்லை. அது தமிழர்களின் துரதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும்.

ஜி.யு.போப்புக்கும் ஆசிரியப் பெருமானுக்கும் இருந்த தொடர்பை 'என் சரித்திரத்'தில் காணலாம்.

### தலைப்பில்லாத பேச்சு

1906-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 13-ஆம் தேதி அன்று சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ் மாணவர்களின் சங்கத்து ஆண்டு விழா நடக்க ஏற்பாடாகி இருந்தது. அதற்கு வந்து தலைமை தாங்க வேண்டுமென்று பாண்டித்துரைத் தேவருக்கு ஆசிரியர் எழுதியிருந்தார். அவரும் விழாவுக்கு இரண்டு நாட்கள் முன்பே சென்னைக்கு வந்துவிட்டார். அவர் சென்னைக்கு

வந்ததைப் பயன்படுத்திக் கொண்டு பலவிடங்களில் அவரது பேச்சை அன்பர்கள் அமைக்க எண்ணினர். ஆசிரியப்பிரானிடம் தம் கருத்தைச் சொல்லி அப்படியே அமைத்துக் கொண்டனர்.

மாநிலக் கல்லூரியில் விழா நடப்பதற்கு முதல் நாள் கிறிஸ்துவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த கோபாலாசாரியார், பாண்டித்துரைத் தேவரைத் தம் கல்லூரிக்கு அழைத்து, நல்ல முறையில் ஒரு வரவேற்பு நடத்தினார். அந்த வரவேற்பில் பலர் பேசினார்கள். ஒவ்வொருவர் பெயருக்கும் எதிரில் இன்ன பொருள் பற்றிப் பேசுவார் என்று நிகழ்ச்சி நிரலில் போடப்பட்டிருந்தது. எனினும் ஆசிரியர் பெயருக்கு எதிரில் பொருள் எதையும் குறிக்காமல் 'பேசுவார்' என்று மட்டும் அச்சிட்டிருந்தது.

அதைக் கண்டு ஆசிரியர் வருத்தப்படவில்லை. பாண்டித்துரைத் தேவருக்கு நடைபெறும் பாராட்டைக் காணவேண்டுமென்ற ஆசையினால் கிறிஸ்துவக் கல்லூரிக்குச் சென்றார்.

அங்கே பலரும் பேசிய பிறகு ஆசிரியரையும் பேசச் சொன்னார்கள். "என் பெயரைப் போட்டு, எனக்குப் பேசுவதற்கு என்று எந்தத் தலைப்பையும் இந்த விழா அமைப்பாளர்கள் கொடுக்கவில்லை" என்று சற்றுச் சினத்தோடு ஆசிரியர் பேசக்கூடும் என்று அதனை அமைத்தவர்கள் நினைத்திருக்கக்கூடும். ஆனால் ஆசிரியர் அதனை நயமாகப் புலப்படுத்தி, அதைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு பேசினார்.

"எனக்கு இந்தக் கல்லூரித் தமிழாசிரியர் கோபாலாசாரியார் மிக்க உதவியைச் செய்திருக்கிறார். இன்ன விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டு மென்று குறிப்பிட்டிருந்தால் அதற்காகச் சில நூல்களைப் பார்த்துச் சித்தம் செய்துகொண்டு வந்திருக்கவேண்டும். ஏதேனும் பேசுவார் என்று போட்டி ருப்பதால் நான் என் மனம் போலச் சிலவற்றை உங்கள் மத்தியில் பேசி விடலாம்."

"இன்றைக்கு விழாத் தலைவராக வீற்றிருக்கும் தேவர் அவர்கள் சென்னைக்கு விஜயம் செய்திருப்பது மிகவும் அரிய விஷயம். அவரது பேச்சைக் கேட்டாலே போதும்; பல அரிய விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம். நாளைய தினம் மாநிலக் கல்லூரியில் தமிழ் மாணவர்கள் சங்க விழா நடக்க இருக்கிறது. தேவர் அவர்களே நாளைய தினம் அங்கும் தலைமை வகிக்கிறார். தவறாமல் நீங்கள் எல்லோரும் நாளைக்கு அங்கும் வந்திருந்து தேவர் அவர்களது பேச்சைக் கேட்டுப் பயன் அடையவேண்டும்" என்று தம் பேச்சைச் சுருக்கமாக அமைத்துக் கொண்டார். அவையில் உள்ளவர் களுக்கு அந்த விழா அமைப்பாளர்கள் செய்தது நியாய மற்றது என்பது புலனாகிவிட்டது.

# 12. பாண்டித்துரையின் தொடர்பு

*மாநிலக் கல்லூரி விழா*

*1906-ஆம் ஆண்டு அக்டோபர் 13-ஆம் ஆம் தேதி மாநிலக் கல்லூரியில் நடைபெற்ற விழா, பெரிய விழாவாக அமைந்து விட்டது. அந்தக் காலத்தில் மதுரையில் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கியவர் பாண்டித்துரைத் தேவர் என்ற செய்தி பரவியிருந்தது. சேதுபதி அவர்களுக்கு இருந்த பெருமையைக் காட்டிலும் அவருக்கு அதிகமான பெருமை இருந்தது. ஆகையால் மாநிலக் கல்லூரியில் மாணவர்கள் அல்லாமல் வேறு பல செல்வர்களும், புலவர்களும் அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள்.*

*அந்தக் கூட்டத்தில் கடவுள் வணக்கம் பாடுவதற்காக ஏ.மகாலிங்கையர் என்பரை ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர் எட்டையபுரம் மகாராஜாவின் குமாரருக்குப் பாடம் சொல்லி வந்தார். மிகவும் அழகான வடிவம் உடையவர். அவரது சாரீரம் கணீரென்று இருக்கும். அருமையாகப் பாடுவார். அவர் பாடுவதே அந்த விழா வுக்குச் சிறப்பாக இருக்கும் என்ற எண்ணத்தினால் அவரிடம் முன்கூட்டியே சொல்லியிருந்தார்கள். ஆனால் துரதிருஷ்ட வசமாக அவருக்குத் தொண்டை கட்டிக் கொண்டதனால் கடைசி நேரத்தில் யாரைக் கொண்டாவது பாடச் சொல்லுங்கள் என்று ஆசிரியருக்குச் சொல்லி யனுப்பிவிட்டார்.*

*ஆசிரியர் சிறிது நேரம் யோசித்தார். திருவாரூர்ப் போர்டு உயர் நிலைப் பள்ளியில் எம்.எஸ்.சந்தானமையங்கார் என்பவர் தமிழாசிரி யராக இருந்தார். அவர் அருமையாகப் பாடுவார். தந்தி கொடுத்து அவரை வரச் செய்து அந்த விழாவில் முதலில் கடவுள் வணக்கம் பாடச் சொன்னார் அவர் தம் இசைத் திறமையைக் காட்டி, இறை வணக்கம் பாடினார். அவையினர் மிகவும் களிப்படைந்தார்கள். மகாலிங்கையர் வராத குறையைச் சந்தானமையங்கார் போக்கிவிட்டார்.*

*பாண்டித்துரைத் தேவரது பேச்சு அன்று மிக்க எடுப்பாக இருந்தது. மாலை 5 மணிக்குத் தொடங்கிய விழா இரவு 8 மணி வரை நடந்தது.*

*ஆசிரியரிடம் யாவருக்கும் உள்ள மதிப்பை அறிந்து அவர் பெருமகிழ்ச்சி அடைந்தார். 'கும்பகோணத்தைவிடச் சென்னை பெரிய நகரமாயிற்றே.*

அங்கே கடலில் பெருங்காயத்தைக் கரைத்தது போல இவருடைய பெருமை ஆகிவிடுமோ?' என்ற அச்சம் அவருக்கு இருந்தது. ஆனால் இங்கே வந்த போது ஆசிரியருக்கு முன்னைவிடப் பெரும்புகழும் செல்வாக்கும் இருப்பதை அறிந்து பெருமகிழ்ச்சி அடைந்தார்.

அவர் ஊருக்குச் சென்றவுடன் ஆசிரியருக்குத் தமக்குண்டான பெருமகிழ்ச்சியையும் ஆசிரியர் சென்னையில் கதிரவனைப்போல விளங்குவது பற்றிய இன்பத்தையும் வெளியிட்டு ஒரு கடிதம் எழுதினார்.

### கடனைப் பெறாமல் விட்டது

கும்பகோணத்தில் ஆசிரியர் இருந்தபோது சீவகசிந்தாமணியைப் பதிப்பித்த செய்தி அவருடைய வரலாற்றில் இருக்கிறது. அப்போது சைனமத சம்பந்தமான பல செய்திகளை ஆசிரியருக்கு வீடூர்ச் சந்திரநாத செட்டியார் சொன்னார். அவர் கும்பகோணம் கடைத் தெருவில் மளிகைக் கடை வைத்து வியாபாரம் செய்து வந்தார். அவர் தமக்கு உதவியாக இருந்த ஒருவரை நம்பிக் கடையை ஒப்படைத்திருந்தார். அவர் சந்திரநாத செட்டியாரை ஏமாற்றிவிட்டார். அதனால் எதிர்பாராத நஷ்டம் அவருக்கு ஏற்பட்டது. வியாபாரத்தை நிறுத்தும் படியாக நேர்ந்து பின்னர் வறுமையினால் மிகவும் துன்புற்றார்.

ஆசிரியர் சென்னை வந்த பிறகு, ஒரு நாள் சந்திரநாத செட்டியாரின் குமாரர் சி.மல்லிநாத செட்டியார் ஆசிரியரின் இல்லத்திற்கு வந்தார். அவர் ஆசிரியரிடம் ஒரு கருத்தைத் தெரிவித்தார். "தாங்கள் இந்த ஊருக்கு வந்த பிறகு தங்களுடைய பதிப்பு நூல்கள் கும்பகோணத்தில் கிடைக்க வில்லை. பலர் என் தந்தையாரிடம் வந்து, 'சீவகசிந்தாமணிப் பதிப்பு இருக்கிறதா?' என்று கேட்கிறார்கள். இல்லையென்றால் 'உங்களிடம் இருக்கும் புத்தகத்தை யாவது கொடுங்கள். பார்த்துவிட்டுத் தருகிறோம், என்று கெஞ்சுகிறார்கள். நீங்கள் பதிப்பித்துள்ள நூல்கள் சிலவற்றை என்னிடம் கொடுத்தால் நான் அவற்றைக் கும்பகோணத்தில் வைத்துவிற்று, அவ்வப்போது தங்களுக்குப் பணத்தை அனுப்பி வைக்கிறேன்" என்று கேட்டுக் கொண்டார்.

அப்படியே ஆசிரியர் அவரிடம் சில புத்தகங்களைக் கொடுத்து அனுப்பியதோடு கூட, பின்பும் ரயில் பார்சல் மூலம் அவர் விருப்பப்படி பல புத்தங்களை அனுப்பி வந்தார்.

புத்தகங்களை வாங்கிக்கொண்டு போனவர், வறுமை காரணமாக அவற்றை விற்று வந்த பணத்தைத் திருப்பி அனுப்பவில்லை. பல மாதங்கள் ஆகியும் அவரிடமிருந்து செய்தி எதுவும் வராததனால் ஆசிரியருடைய குமாரர் அவருக்கு ஒரு கடிதம் எழுதினார். பிறகு கும்பகோணத்திற்கு

நேரில் சென்றும் விசாரித்தார்.

செய்தி தெரிந்தவுடன், சந்திரநாத செட்டியார் மிகவும் வருந்தினார். "நீங்கள் அவனை நம்பிப் புத்தகங்களைக் கொடுக்கலாமா? நாணயத்தைக் காப்பாற்றத் தெரியாதவன் அல்லவா? எப்படியாவது நான் வற்புறுத்திச் சொல்லிப் பணத்தை அனுப்பச் சொல்லுகிறேன்" என்று சொல்லி அனுப்பினார்.

வந்தபிறகும் செட்டியாருடைய குமாரரிடமிருந்து எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. ஆகையால் ஆசிரியருடைய குமாரர் ஒரு வக்கீலை அமர்த்தி, ஒரு நோட்டீஸ் கொடுக்கச் சொன்னார்.

சில வாரங்கள் கழிந்தன. அந்த நோட்டீசுக்கும் பதில் ஒன்றும் வராமையினால், மேலே வழக்குத் தொடரலாம் என்ற எண்ணத்தில் வக்கீல் தம் குமாஸ்தாவை ஆசிரியரின் குமாரரைப் பார்த்து வரும்படி அனுப்பினார்.

அந்தக் குமாஸ்தா ஆசிரியர் குமாரரைப் பார்க்காமல் நேரே ஆசிரியரிடம் வந்துவிட்டார். தாம் வந்த காரியத்தை ஆசிரியரிடம் சொன்னவுடன் ஆசிரியர் அதிர்ச்சி அடைந்தார். "நான் சொன்னதாக உம் சிநேகிதரிடம் போய்ச் சொல்லுங்கள். அந்தத் தொகையை நானே கொடுத்துவிடுகிறேன். அவர் தந்தையார் எனக்குச் செய்துள்ள பேருதவிக்கு இது எம்மாத்திரம்?" என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

தமக்கு ஒருவர் செய்த நன்றிக்கு, அவரது பரம்பரையினர் செய்த குற்றத்தையும் பொறுக்கும் ஆசிரியரது இயல்பை இந்த நிகழ்ச்சி காட்டுகிறது.

# 13. சொந்த வீடு

## சொந்த வீடு வாங்கியது

சென்னையில் திருவேட்டீசுவரன் பேட்டையில் பிள்ளையார் கோவில் தெருவில் ஆசிரியர் குடியிருந்த வீட்டிற்கு ஆரம்பத்தில் 20 ரூபாய்தான் வாடகை கொடுத்துக்கொண்டிருந்தார். அவரது குடும்பத்திற்குப் போதிய இடம் அங்கே இருந்தது.

ஆசிரியருடன் கல்லூரியில் பழகி வந்த ஆங்கிலப் பேராசிரியர் ஒருவர் ஒருநாள் அவரது வீட்டிற்கு வந்தார். தாம் தமிழில் பள்ளிக் கூடத்து மாணவர்களுக்காக ஒரு புத்தகம் எழுதியிருப்பதாகவும், அதைப் பார்த்துத் திருத்திக் கொடுத்தால் மிகவும் உபயோகமாக இருக்கும் என்றும் சொன்னார்.

ஆசிரியர் தமக்கு நேரம் இல்லாமையினால் தம் குமாரரைப் பார்த்துக் கொடுக்கச் சொன்னார். அவ்வேலை சம்பந்தமாக அந்தப் பேராசிரியர் ஆசிரியர் வீட்டிற்கு அடிக்கடி வரும்போது ஒருமுறை ஆசிரியருடைய குமாரரைப் பார்த்து, வீட்டிற்கு வாடகை என்ன என்பதைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். அந்த வீட்டின் சொந்தக்காரரர் எங்கே இருக்கிறார் என்றும் கேட்டு அறிந்துகொண்டார்.

உடனே அந்த வீட்டின் சொந்தக்காரரைப் போய்ப் பார்த்து, அவரிடம், "திருவேட்டீசுவரன் பேட்டையிலுள்ள உங்கள் வீட்டை ஏன் இவ்வளவு குறைந்த வாடகைக்கு விட்டிருக்கிறீர்கள்? வேறு யாருக்காவது கொடுத்தால் அதிக வாடகை கிடைக்குமே!" என்று சொன்னார்.

அந்த வீட்டின் சொந்தக்காரராகிய முதலியாருக்கு ஆசிரியரிடம் மிகவும் மதிப்பு உண்டு. இதைக் கேட்டவுடன் அவருக்குக் கோபம் வந்துவிட்டது. "ஐயா, நான் அவரிடம் 20 ரூபாய் வாங்குவதே தவறு. என் கையிலிருந்து மாதம் 20 ரூபாய் அவருக்குக் கொடுத்து அவரை அந்த வீட்டில் குடியிருக்கச் சொல்ல வேண்டும். அவர் அவ்வளவு பெரியவர். அவர் குடியிருப்பதனால்தான் இன்றைக்கு என் வீடு ஒரு கோவில் மாதிரி இருக்கிறது. எத்தனை பெரியவர்கள் அவரைப் பார்ப்பதற்காக

அந்த வீட்டிற்கு வருகிறார்கள் தெரியுமா? அவரே இடம் போதவில்லை என்று வேறு வீடு பார்த்தக்கொண்டு போனாலன்றி, நான் அவரை என் வீட்டிலிருந்து போகச் சொல்ல மாட்டேன். நீர் இதுபோல என்னிடம் வந்து சொன்னதே தவறு'' என்று கண்டித்து அனுப்பிவிட்டார்.

மேலும் சிறிது நாள் கழித்து அந்தப் பேராசிரியரே, முதலியாரைப் போய்ப் பார்த்தார். "அந்த வீடு சிறியதாகவும் இருக்கிறது. அதிலிருந்து கிடைக்கிற வாடகையும் குறைவாக உள்ளது. நீங்கள் நல்ல விலை கிடைத்தால் அதை விற்றுவிட்டு, வேறு ஓர் இடத்தில் பெரிய வீடாகவே கட்டலாமே!'' என்று சொன்னார்.

"நான் அந்த வீட்டை விற்பதுபற்றி இதுவரை யோசித்தது இல்லை. அப்படி விற்கிற எண்ணம் வந்தால் உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன். இப்போது போய் வாருங்கள். அந்த வீட்டைப் பற்றி உங்களுக்கு இவ்வளவு அக்கறை உண்டாவதற்கு என்ன காரணம் என்று எனக்கு விளங்கவில்லை'' என்று சொல்லி முதலியார் அவரை அனுப்பிவிட்டார்.

எனினும் அந்தப் பேராசிரியர் சொன்னது முதலியாரின் மனத்தை உறுத்த ஆரம்பித்துவிட்டது. 'அந்த வீடு நமக்குச் சொந்தம் என்பதனால் தானே, இப்படிப் பலரும் பல விதமான எண்ணங்களை நம்மிடம் வந்து வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்? ஆசிரியர் அவர்களுக்கே அந்த வீட்டை உரியதாக்கிவிட்டால் என்ன?' என்று நினைக்கலானார்.

ஒருநாள் ஆசிரியரிடமே வந்து, ஐயா, உங்களுக்குச் சென்னையில் வீடு வாங்கும் எண்ணம் உண்டா? "அப்படியிருந்தால் நான் இந்த வீட்டை உங்களுக்கே விற்றுவிட நினைக்கிறேன்'' என்று சொன்னதோடு அந்த வீட்டிற்கு மூவாயிரம் ரூபாய்க்கு மேல் ஒரு தொகையைக் குறிப்பிட்டுச் சொன்னார்.

அப்போது கும்பகோணத்தில் ஆசிரியருக்குச் சொந்தமாக ஒரு வீடு இருந்தது. அதனால் சென்னையில் புதிய வீடு வாங்குவது பற்றி அவர் சிந்தித்ததே இல்லை. மேலும் சென்னையில் தாம் நிரந்தரமாக இருக்க முடியுமோ, முடியாதோ என்ற சந்தேகமும் இருந்தது. ஆகையால் முதலியார் அப்படிக் கேட்டவுடன், வீடு தமக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டார்.

அடுத்த ஆண்டு அந்த ஆங்கிலப் பேராசிரியர், தமக்குத் தெரிந்த வேறு ஒருவர் மூலமாக முதலியாரிடம் அந்த வீட்டை 4,300 ரூபாய்க்குப் பேசி, முன்பணமும் கொடுத்துவிட ஏற்பாடு செய்தார்.

முதலியார் அந்தச் செய்தியை ஆசிரியருக்குச் சொல்லி அனுப்பினார். அதைக் கேட்டவுடன் ஆசிரியருக்கு மிக்க கவலை உண்டாயிற்று. 'அந்த

வீட்டில் கிடக்கும் அத்தனை ஏட்டுச்சுவடிகளையும், புத்தகங்களையும் வேறு இடத்திற்குக் கொண்டு போக வேண்டுமே! புதிய இடம் வசதியாக இருக்குமோ, இருக்காதோ?' என்றெல்லாம் குழம்பினார்.

ஒருநாள் ஆசிரியர் தம் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, முதலியாருக்குத் தெரிந்த கணக்குப்பிள்ளை ஒருவர் தெரு வழியே போனார். ஆசிரியர் அவரை அழைத்து, "உங்கள் முதலியார் இந்த வீட்டை வேறு ஒருவருக்கு விற்க முன் பணம் வாங்கிவிட்டாராமே! முன்பணம் வாங்கப் போவதைக் கொஞ்சம் முன்னால் என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா? நானே வாங்கிக் கொண்டிருப்பேனே!" என்று தெரிவித்தார்.

"போன வருஷமே, முதலியார் அந்த வீட்டை உங்களுக்கு விற்பதாகச் சொன்னாராமே. நீங்கள் வீடு வேண்டாம் என்று சொல்லிவிட்டீர்களாம். 'என்ன காரணத்தினாலோ வேண்டாம் என்கிறார்கள்; வேறு இடத்தில் மனை வாங்கி, பெரிய வீடாகக் கட்டிக் கொள்ளலாம் என்று நினைக்கிறார்கள் போலும்!' என்று எண்ணிக் கொண்டுதான் வெளியில் வீடு விற்பதைப் பற்றியே அவர்கள் முடிவு செய்தார்கள்" என்றார் கணக்குப்பிள்ளை.

"அப்படியா? அப்போது அதைப்பற்றி நான் நினைக்கவில்லை. இப்போது எனக்கு இந்த வீட்டையே வாங்கிக் கொள்ள வேண்டுமென்ற



'தியாகராச விலாசம்'

அபிப்பிராயம் இருக்கிறது. அவர் பேசியுள்ள தொகைக்கு மேல் நூறு ரூபாய் தருகிறேன். உங்களுக்கும் ஏதாவது உதவி செய்கிறேன். எப்படியாவது இந்த வீட்டை எனக்கு வாங்கிக் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொல்லி அனுப்பினார் ஆசிரியர்.

அன்று மாலையிலேயே கணக்குப்பிள்ளை வந்தார். ''உங்களுக்கு நல்ல சமாசாரம் கொண்டுவந்திருக்கிறேன். முதலியார் தாம் வாங்கிய முன் பணத்தை அவர்களிடமே கொடுத்துவிட்டார். இந்த வீட்டை உங்களுக்கே விற்பதற்கும் சம்மதித்துள்ளார்'' என்று தெரிவித்தார்.

ஆசிரியருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. அவ்வளவு எளிதில் காரியம் முடிந்துவிடும் என்று அவர் நினைக்க வில்லை. முன் பணம் கொடுத்தவர் தகராறு செய்யக் கூடுமே என்ற கவலை மட்டும் இருந்தது .

கணக்குப்பிள்ளை சொன்னார்; ''நீங்கள் சொன்னதை முதலியாரிடம் சொன்னேன். அவருக்கு முதலிலிருந்தே இந்தப் பணம் கொடுத்தவர் விக்கிரய பத்திரத்தில் சில நிபந்தனைகளை எழுதச் சொன்னார். அது தான் சரியான சாக்கு என்று, 'இந்த நிபந்தனைகளுக்கு எல்லாம் நான் உடன்படமாட்டேன்' இந்தாருங்கள் உங்கள் முன்பணம்' என்று கோபமுடையவரைப் போல நடித்து அந்தப் பணத்தைத் திருப்பிவிட்டார்'' என்றார்.

ஒரு மாதத்திற்குப் பிறகு உரிய விலை கொடுத்து அந்த வீட்டை ஆசிரியர் வாங்கினார். தமக்குக் கும்பகோணம் கல்லூரியில் வேலை வாங்கித் தந்த தியாகராச செட்டியாரின் நினைவாக அந்த இல்லத்திற்குப் பெயர் வைத்தார். அந்த வீடுதான் 'தியாகராச விலாசம்' என்ற பெயரோடு இன்றும் விளங்குகிறது.

## 14. சில நூல்களின் வெளியீடு

### பழைய திருவிளையாடற் பதிப்பு

இப்போது எங்கும் வழங்கும் பரஞ்சோதி முனிவரது திருவிளையாடற் புராணத்திற்கு முன்பு வேம்பத்தூரார் திருவிளையாடற் புராணம் என்கிற ஒன்று வழங்கி வந்தது. செல்விநகரப் பெரும்பற்றப்புலியூர் நம்பியால் அது இயற்றப்பெற்றது. ஆசிரியர் அதை ஆராய்ந்து வந்தார். அதற்காக மதுரை முதலிய இடங்களுக்குச் சென்று, திருவிளையாடல்களை நினைப்பூட்டும் இடங்களைப் பற்றி எல்லாம் விசாரித்துக் குறிப்புக்களைச் சேகரித்தார். வேம்பத்தூர் சென்று அந்த நூலாசிரியரைப்பற்றிய செய்திகளைத் தொகுத்தார்.

1906-ஆம் வருஷம் ஜூலை மாதம் 12-ஆம் தேதி அந்த நூல் அரும்பத உரையோடும், வேறு பல ஆராய்ச்சிக் குறிப்புக்களோடும் வெளியாயிற்று. அதற்குப் பாண்டித்துரைத் தேவர் ரூபாய் 200 உதவினார். அந்தக் காலத்தில் அது மிகவும் மதிப்புடைய தொகை. அந்தத் திருவிளையாடலில் பரஞ் சோதி முனிவர் புராணத்தில் இல்லாத பல செய்திகள் புலனாயின.

### செந்தமிழில் நூல்களை வெளியிட்டது

மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து செந்தமிழ் என்ற பத்திரிகை வெளி வந்தது. அதில் அந்தக் காலத்தில் இருந்த புலவர்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதினார்கள். தமிழ்ச் சங்கத் தலைவராகிய பாண்டித்துரைத் தேவர் ஆசிரியப் பெருமானுக்கு அடிக்கடி கடிதம் எழுதி, செந்தமிழ்ப் பத்திரிகையில் ஆசிரியர் ஒவ்வோர் இதழிலும் கட்டுரை எழுதவேண்டுமென்று வற்புறுத்தி வருவார்.

"தாங்கள் சொல்வது நல்லதுதான். எழுதுவதற்கு எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. ஆனாலும் பண்டைத் தமிழ் நூல்களை ஆராய்வதற்கே எனக்கு நேரம் போதவில்லையே! வேறு பணியை மேற்கொண்டால் இதுவும் செய்ய முடியாது; அதனையும் நிறைவேற்ற முடியாது" என்று ஆசிரியர் தெரிவித்தார்.

"தங்கள் கட்டுரை இருந்தால்தான் பத்திரிகைக்கே மதிப்பு உண் டாகும். தங்கள் விருப்பம் எப்படியோ அந்த வகையில் செய்யுங்கள்" என்று பின்னர் நயந்து எழுதினார்.

பாண்டித்துரைத் தேவரின் வற்புறுத்தலையும் அவருடைய அன்பையும் அறிந்த ஆசிரியர் செந்தமிழ்ப் பத்திரிகைக்கு ஏதேனும் ஒரு வகையில் நலம் செய்ய வேண்டுமென்று விரும்பினார்.

தாம் ஆராய்ந்து கொண்டிருந்த பண்டைத் தமிழ் நூல்களில் எதையேனும் 'செந்தமிழில்' தொடர்ந்து பதிப்பித்து வரலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதன்படி திருவாரூர் உலாவை ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு பகுதியாகச் செந்தமிழில் வெளியிடலானார். அந்தகக்கவி வீரராகவ முதலியார் இயற்றிய அந்த நூல் சுவைமிக்கது. 1905-ஆம் ஆண்டு அந்த நூல் நிறைவேறியது.

### ஆசிரியரின் புராணங்களை அச்சிடல்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை பாடிய புராணங்களில் மிகவும் சிறியது தனியூர்ப் புராணம். மாயூரத்தை அடுத்த கூறை நாட்டைச் சேர்ந்த சிவத்தலம் தனியூர். அங்கே உள்ள கோவிலுக்குப் புழுகீசுரம் என்று பெயர். புனுகுப் பூனை பூசித்த பாடல் பெற்ற சிவத்தலம் அது. சங்க நூல்களை அச்சிட்டுக் கொண்டிருந்த ஆசிரியருக்குப் பிள்ளைவர்களுடைய புராணங்களையும் பதிப்பிக்க வேண்டுமென்ற எண்ணம் இருந்தது. ஆகவே அந்தத் தனியூர்ப் புராணத்தை அச்சிட்டார்.

பின்பு மண்ணிப்படிக்கரைப் புராணம் வெளியாயிற்று. அதுவும் மீனாட்சிசுந்தரம்பிள்ளை இயற்றிய புராணம். மாயூரத்திற்கு அருகில் காவிரியின் வடகரையிலுள்ள பாடல் பெற்ற சிவஸ்தலம் அது. இலுப்பைப்பட்டு என்று இப்போது வழங்குகிறது.

சிவத்தலம் சம்பந்தமான செய்திகளைத் தொகுப்பதிலும், சேகரிப்பதிலும் ஆசிரியருக்குப் பேரார்வம் இருந்தது. ஆகையால் புராணங்களைப் பதிப்பிக்கும் போது அந்த அந்தத் தலத்தைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து முன்னுரையில் காட்டுவார். அவருடைய புராணப் பதிப்புக்களைப் பார்த்தால் சங்கநூல் பதிப்புக்களைப் போலவே, தாம் அது பற்றி ஆராய்ந்து தொகுத்த செய்திகளைத் திரட்டிக் குறிப்புரை முதலியவற்றோடு வெளியிட்டி ருப்பதைக் காணலாம். ஏதேனும் ஒரு நூலை மீண்டும் பதிப்புக்குக் கொண்டு வந்தால் முதலில் பதிப்பித்த பிறகு கிடைத்த ஏட்டுச்சுவடிகளி லிருந்த திருத்தங்களை அமைத்துக் கொள்வார் அதோடு வேறு பல புதிய பகுதிகளையும் அதில் சேர்ப்பார்.

சீவகசிந்தாமணி முதலிய நூல்களைப் பார்த்தால் ஒவ்வொரு பதிப்பிலும் ஏதேனும் அருமையான புதிய சிறப்பு அமைந்திருப்பதைக் காணலாம். சீவகசிந்தாமணியின் 2-ஆவது பதிப்பு 1907-ஆம் வருஷம் நடந்து வந்தது. முதல்

பதிப்பு வெளியான பிறகு மேற்கொண்டு கிடைத்த சில சுவடிகளைப் பார்த்துச் சில புதிய திருத்தங்களைச் செய்து இருப்பதும் தெரியும். 1907-ஆம் ஆண்டு டிசம்பர் மாதந்தான் சிந்தாமணியின் 2-ஆவது பதிப்பு நிறை வேறியது.

முதற்பதிப்பு 1887-ஆம் ஆண்டு வெளியாயிற்று. ஐந்நூறு பிரதிகளே அச்சிட்டார். திருவாவடுதுறை ஆதீனகர்த்தருக்கும் வேறு சிலருக்கும் அனுப்பிய பிரதிகள் போக மற்றவை செலவாக இருபது ஆண்டுகள் ஆயின! அதன் இரண்டாம் பதிப்பு 1907-ஆம் ஆண்டு தான் வெளியாயிற்று.

### நச்சினார்க்கினியர்பால் அன்பு

ஆசிரியப்பெருமானுக்கு நூலை இயற்றிய ஆசிரியர்களைவிடச் சிறந்த நூல்களின் உரையாசிரியர்களிடத்தில் அதிக மதிப்பு இருந்து வந்தது. இலக்கண இலக்கியங்களில் கரை கண்டவராகிய நச்சினார்க்கினியரைப் பற்றியும், அவருடைய உரைகளின் சிறப்பைப் பற்றியும் பல நூல்களில் எழுதியிருக்கிறார். தமிழ்நூல் உரையாசிரியர்களில் அவரை 'உரையாசிரியச் சக்கரவர்த்தி' என்று சொல்லவேண்டும். ஆசிரியப்பிரானுக்கு அவரிடத்தில் அளவில்லாத மதிப்பு இருந்தது. நச்சினார்க்கினியர் உரையெழுதித் தெளிவாக்கியிராவிட்டால் பல இலக்கண இலக்கிய நூல்களில் உள்ள இடங்களுக்குப் பொருளே விளங்கியிருக்காது என்று அடிக்கடி சொல்வார். நச்சினார்க்கினியன் என்பது சிவபெருமான் திருநாமங்களில் ஒன்று. "நச்சினார்க் கினியர் போலும் நாகவீச் சுரவ னாரே" என்பது தேவாரம்.

ஒரு சமயம் மதுரையில் நடந்த தமிழ்ச்சங்க விழாவுக்கு ஆசிரியர் போயிருந்தார். அப்போது நச்சினார்க்கினியரைப்பற்றிச் சிறப்பித்துப் பேசினார். அவர் செய்துள்ள மகோபகாரத்திற்கு வேண்டுமென்று வற்புறுத்திச் சொன்னார். அப்போது மதுரையில் இருந்த தமிழாசிரியராகிய ம.கோபாலகிருஷ்ணையர் என்பவர் அந்தப் பேச்சில் மிகவும் ஈடுபட்டார் அவர் ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளையும் அறிந்தவர். ஆசிரியப்பெருமான் சொன்ன கருத்து அவர் உள்ளத்தில் நன்றாகப் பதிந்தது. அவர் நச்சினார்க்கினியர் பெயரில் ஒரு புத்தக சாலையை அமைத்து ஆசிரியருக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு ஆசிரியர் மிகவும் மகிழ்ந்து தம்முடைய வாழ்த்தை அனுப்பினார். பிற்காலத்தில் கோபாலகிருஷ்ணையர் நச்சினார்க்கினியர் என ஒரு பத்திரிகையையே நடத்தி வந்தார்.

நச்சினார்க்கினியர் பெருமையைப் பற்றி ஆசிரியர் பேசும் போது தமிழ்ச்சங்க விழாவிற்கு வந்திருந்த சோழவந்தான் தமிழ்ப் புலவர் அ.சண்முகம் பிள்ளை உடனே எழுந்தார். அவர் தம்முடைய கையில் தங்கத் தோடா அணிந்திருந்தார். அவர் உணர்ச்சி வசப்பட்டு, அந்தத் தோடாவைக் கழற்றி

வைத்து நச்சினார்க்கினியர் நினைவுச் சின்னத்துக்கு வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆசிரியரை வணங்கினார். அப்போது எல்லோரும் உணர்ச்சி மிக்கவர்களானார்கள்.

அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த வயி.நாக.ராம. இராமநாதன் செட்டியார் ஒரு வெண்பாப் பாடித் தம்முடைய காணிக்கையாக 20 ரூபாய் தந்தார். அந்தத் தொகையைக் கோடி என்று சொல்வது ஒரு மரபு.

"தன்மதுரை யாம்பாண்டிச் சாமி நடாத்துதமிழ்த்
தென்மதுரைச் சங்கஞ் செழித்தோங்க - நன்மனத்தால்
நாடியா ரும்புகழும் நாவலீர் கேண்மின்ஒரு
கோடியான் ஈயும் கொடை,"

இந்த விழாவுக்கு வேம்பத்தூர் வித்துவான் சிலேடைப்புலி பிச்சு வையரும் வந்திருந்தார். அவர் அப்போது பாடிய பாட்டு:-

"சைவம் தழைக்குமிடம் சாத்திரமீ தோங்குமிடம்
தெய்வப் புலவர்குழாம் சேருமிடம் - கைவரைநேர்
துன்னலந்தாழ் பாண்டித் துரைப்பூ பதிவளர்க்கும்
கன்னிபுரம் மேவியசங் கம்."

## கிருஷ்ணசாமி ஐயர் செய்த உதவி

சென்னையில் இருந்த வி.கிருஷ்ணசாமி ஐயர் பல வகையில் வித்துவான்களுக்கும், புலவர்களுக்கும் உதவி செய்து வந்தார். அவரே சம்ஸ்கிருதக் கல்லூரியை நிறுவினவர். ஆசிரியப்பெருமானிடம் அவருக்கு மிக்க மதிப்பு இருந்தது. சிந்தாமணியின் 2-வது பதிப்பை ஆசிரியர் அவரிடம் கொடுத்த போது அதில் அமைந்திருக்கும் முகவு ரையைக் கண்டு மிகவும் பாராட்டினார். "தமிழில் இப்படி அருமையான நூலை இந்தக் காலத்தில் யார், பதிப்பிக்கிறார்கள்? தங்கள் அறிவின் நுட்பத்தையும், உழைப் பையும் இந்தப் பதிப்புக் காட்டுகிறது" என்று ரூ.70 கொடுத்தார் அதோடு ஆசிரியருக்கு வேறு வகையிலும் ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்று எண்ணினார்.



வி.கிருஷ்ணசாமி ஐயர்

அந்தக் காலத்தில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் திராவிடக் கல்விக் கழகம் என்ற ஒன்று இருந்தது. பெரும்பாலும் ஆங்கிலம் தெரிந்தவர்களே அதில் உறுப்பினர்களாக இருந்தார்கள் அந்தச் சபையில் ஆசிரியப் பெருமானை ஓர் உறுப்பினராகச் சேர்க்க வி.கிருஷ்ணசாமி ஐயர் சொல்லி ஏற்பாடு செய்துவிட்டார். பிறகு தமிழ்ப் பரீட்சாதிகாரியாகவும் ஆக்குவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்தார். அவ்வாறே ஆசிரியர் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பரீட்சாதிகாரியானார். அதைப்பற்றிப் பல்கலைக்கழகக் கூட்டம் ஒன்றில் பலர் ஆசிரியருக்கு இந்தப் பதவியைக் கொடுக்கக்கூடாது என்று தடை கூறினார்கள். ஆங்கிலம் தெரியாத ஒருவர் இத்தகைய வேலைகளைச் சரியாகச் செய்யமாட்டார் என்று பெரும்பாலானவர்கள் சொன்னார்கள். கிருஷ்ணசாமி ஐயர் ஏதேனும் ஒன்றை நினைத்தால் அதைச் செய்தே தீருவார். அதற்கு எதிராக எந்தத் தடை வந்தாலும் கலங்கமாட்டார். பெரும்பாலானவர்கள் ஆசிரியரைப்பற்றிக் குறை கூறினபோது, கிருஷ்ணசாமி ஐயர் அவர்களிடத்தில் பல நியாயங்களை எடுத்துக்காட்டி, சில உரைகளை வன்மையாகவும் சொல்லி அவர்களது வாயை அடக்கினார். "ஆங்கிலம் தெரியாதவர் என்று சொல்கிறீர்களே! ஆங்கில நாட்டைச் சேர்ந்தவர்கள் பலர் அவருடன் தொடர்பு கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியுமா? ஆங்கில நாட்டு ஜி.யு.போப், பிரெஞ்சு நாட்டு ஜூலியன் வின்சன் ஆகியோர் அவரது பெருமையை அறிந்து அடிக்கடி அவருக்குக் கடிதம் எழுதுகிறார்களே! உங்களின் யாருக்காவது அத்தகைய பெருமை உண்டா? அவர்களுடைய பதிப்புக்கள் ஆங்கிலேயர்களைப் போன்ற அறிவுத் திறமையைக் காட்டுவதாக இருக்கின்றனவே! அவற்றை எல்லாம் பார்க்காமல் ஏன் உங்கள் இழிந்த குணத்தை வெளிப்படுத்திக் கொள்கிறீர்கள்?" என்று வன்மையாகப் பேசினார். மற்றவர்கள் எல்லாம் அதைக் கேட்டு வாயடங்கினர். ஆசிரியப் பெருமான் அந்தச் சபையில் 30 ஆண்டுக் காலம் தொடர்ந்து உறுப்பினராக இருந்து வந்தார்.

### புதிய மேசை

1908-ஆம் ஆண்டு ஆரம்பத்தில், தம்முடைய சிறிய தகப்பனாருடைய புதல்வியின் கடிமணத்திற்காக ஆசிரியர் ஸ்ரீரங்கம் போயிருந்தார். தம் குடும்பத்துடன் ஒரு வாரம் அங்கே போய் இருந்துவிட்டு வந்தார். அப்படியே ஒரு நாள் திருவாவடுதுறை சென்று தங்கி, ஆதீனத் தலைவருடன் அளவளாவினார். சென்னைக்குத் திரும்ப ஒரு வாரம் ஆயிற்று. வந்த அன்று கல்லூரிக்குப் போனபோது அவரது வகுப்பு அடையாளம் தெரியாமல் மாறியிருந்தது. அங்கிருந்த மேசை, நாற்காலி, மேடை எல்லாம் மாற்றப் பட்டு இருந்தன. எதற்காக அப்படி மாற்றினார்கள் என்று தெரியாமல் கல்லூரி எழுத்தரிடம் அதைப்பற்றி

விசாரித்தபோது, "தமிழ் வகுப்புக்கு இந்த அளவுக்குப் போதாதோ?" என்று அவர் சொன்னார். அவருக்குத் தமிழின் பெருமையும் தெரியாது; ஆசிரியப்பெருமானுடைய பெருமையும் தெரியாது.

அப்போது கல்லூரி முதல்வராக இருந்தவர் ஸ்டோன் துரை என்பவர். அவரிடம் ஆசிரியர் இந்த மாற்றத்தைத் தெரிவித்தபோது, "கவனிக்கிறேன்" என்று அவர் சொன்னார். இடைவேளையில் ஆசிரியர் உணவுக்குச் சென்று திரும்புவதற்குள் முன்பு எப்படி இருந்ததோ அப்படியே வகுப்பறை அமைக்கப் பெற்றிருந்தது. அப்படி முதல்வர் உத்தரவு இட்டுவிட்டார். அங்கு நிகழ்ந்த மாற்றம் முதல்வருக்குத் தெரியாமல் நிகழ்ந்தது என்பது பின்னர்த்தான் தெரியவந்தது.

### வ.உ.சி. கடிதம்

*1908*-ஆம் வருஷம் ஆசிரியருக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தின் மேலே சிறையதிகாரிகள் தணிக்கை செய்த குறிப்பு இருந்தது. கடிதம் சிறையிலிருந்து வந்திருப்பதாக அந்த அடையாளம் காட்டியது. 'நமக்குச் சிறையிலிருந்து யார் கடிதம் எழுதப் போகிறார்கள்?' என்று எண்ணி ஆசிரியர் அதைப் பிரித்துப் பார்த்தார்.



வ.உ.சிதம்பரம் பிள்ளை

அப்போது கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரம்பிள்ளை கோயம்புத்தூர்ச் சிறையில் இருந்தார். அவர் தமிழிலும் நல்ல பயிற்சி உள்ளவர். அவரே அந்தக் கடிதத்தை *14-9-08*ஆம் தேதி எழுதி யிருந்தார். அவர் சிறையில் திருக்குறளை ஆராய்ச்சி செய்து வந்தார். தாம் திருக் குறளை ஆராய்ச்சி செய்வதாகவும் குறள் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வருவதாகவும் அதில் குறித் திருந்தார். அதில் தமக்கு ஏற்பட்டுள்ள ஐயங்கள் சிலவற்றை எழுதி, அவற்றை விளக்க வேண்டுமென்று கேட்டி ருந்தார். ஆசிரியர் அவற்றிற் கேற்றபடி விடை எழுதி அனுப்பினார்.

### தேதியூர் மகாதேவசிவன்

ரதசப்தமி சமயத்தில் திருவாவடுதுறையில் திருவிழா நடைபெறும். அந்தத் திருவிழாவுக்கு ஆசிரியர் திருவாவடுதுறை சென்று வருவார். *1909*-ஆம் ஆண்டும் வழக்கம்போலத் திருவாவடுதுறை சென்றிருந்தார்.

அப்போது தேதியூர் மகாதேவசிவன் என்ற பெரியவர் வந்திருந்தார். அவர் பல தலங்களைப் பற்றிய செய்திகளைத் தெரிந்து வைத்திருந்தார். ஆசிரியருக்கும் தலங்களைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து வைத்துக் கொள்வதில் ஊக்கம் உண்டு. எனவே ஆசிரியர் அவரிடம் சில முக்கியமான தலங்கள் சம்பந்தமான தீர்த்தம், விருட்சம், மூர்த்தி என்னும் விவரங்களை விரிவாகக் கேட்டு எல்லாவற்றையும் குறிப்பு எடுத்துக்கொண்டார். பிற்காலத்தில் முத்து என்றும் வண்ணாரப் பரதேசி என்றும் வழங்கிய ஒருவரிடம் இத்தகைய குறிப்புக்களைக் கேட்டு எழுதிக் கொண்டதை நான் அறிவேன்.

### *அரச வனம்*

அந்த ஆண்டு திருவாவடுதுறையில் குருபூஜை மிகவும் சிறப்பாக நடந்தது. வடமொழிப் புலவர்களும், தென்மொழிப் புலவர்களும், சங்கீத வித்துவான்களும் வந்து கூடியிருந்தார்கள். இராமநாதபுரம் இராஜராஜே சுவர சேதுபதி வந்திருந்தார். குருபூஜை அன்று அடியவர்களுக்கு எல்லாம் அன்னம் பாலிப்பார்கள். அதை 'மாகேசுவர பூஜை' என்று சொல்வது வழக்கம். (மாகேசுவரர் - சிவனடியார்). அந்த அன்னம் பாலிப்பைச் சேதுபதி மன்னர் ஏற்றுக் கொண்டார். இந்தச் செய்தியைக் கேள்வியுற்ற ஆசிரியர் இதைப் பற்றி அவரிடம் பாராட்டிப் பேசினார். "இந்தத் தலம் அரச வனம் என்னும் பெயருடையது. இன்று இங்கே அரச அனந்தான் நடக்கிறது" என்று சொல்லிப் பாராட்டினார். திருவாவடுதுறையில் அரசு தல விருட்சம். அங்கே அரச மரங்கள் ஏராளமாக உள்ளன. அதனால் 'அரச வனம்' என்று திருவாவடுதுறைக்குப் பெயர். சேதுபதி மன்னர் வழங்கும் அன்னம் அன்று எல்லோருக்கும் கிடைக்கிறது என்ற பொருளைத்தான் 'அரசு அனம்' எனச் சிலேடையாக ஆசிரியர் பேசினார். இதைக் கேட்ட மற்றொரு புலவர் எல்லோரும் உண்ணுவதற்குப் புறப்பட்டபோது, "போஜனத்திற்குப் போஜனமே" என்று சொன்னவுடன் எல்லோரும் சிரித்தார்கள். ஆசிரியப்பெருமான் சிலேடை பண்ண அவருக்கும் சிலேடை உணர்ச்சி வந்துவிட்டது.

### *அச்சகத்தார் புரூப்பில் குறிப்பையும் சேர்த்து அச்சிட்டது*

தொல்லை தரும் ஏட்டுச்சுவடியில் உள்ளதைப் படியெடுத்து ஆராய்ந்து அச்சுக்குச் சித்தம்செய்து அனுப்புவது என்பது மலைமேல் ஏறுவது போன்ற காரியம். வெறும் உரைநடை நூலாக இருந்தால் அச்சிடுவதில் அதிகத் தொல்லை இராது. செய்யுள் நூலாக இருந்தால் அச்சுக் கோப்பவரால் பல பிழைகள் நேரும். அவற்றை எல்லாம் திருத்தி ஆழ்ந்து பார்த்து,

செப்பனிட்டு ஆசிரியர் அனுப்புவார். அப்படித் திருத்தி அனுப்பும்போதும் அந்தத் திருத்தங்களைச் செய்யாமல் சில சமயத்தில் அச்சடித்து அனுப்பி விடுவார்கள். சில நேரங்களில் திருத்தங்களைப் போடும்போது புதுப்பிழை களைச் செய்வார்கள். அச்சகங்களில் புரூப் திருத்தங்கள் செய்வதற்குத் தகுதி யானவர்களை நியமிப்பதில்லையே என்ற வருத்தம் ஆசிரியருக்கு உண்டு.

ஒரு சமயம் அச்சகத்திலிருந்து வந்த 'புரூப்' பில் அதிகமான பிழைகள் இருந்தன. அவற்றை எல்லாம் திருத்திவிட்டு, ஓர் ஓரத்தில் "இந்த வேலையைச் செய்தவர் எழுத்தறிவு சிறிதும் இல்லாதவர் என்று தோன்றுகிறது. தயை செய்து கவனிக்க வேண்டும்" என்று குறித்து அனுப்பினார்.

மறுதடவை 'புரூப்' வந்தபோது 'அச்சகத்திலேயே நன்கு திருத்தப் பெற்று, அதிகப் பிழைகளின்றிப் புரூப் வரவேண்டும்' என்று ஆசிரியர் எழுதியிருந்த குறிப்பையும் அச்சுக்கோத்து நூல் பகுதியோடு சேர்ந்து அதை அனுப்பியிருந்தார்கள்! இப்படி எத்தனையோ வேடிக்கைகளை, அச்சகத் திருவிளையாடல்களை, இப்போதும் கூடப் பார்க்கலாம்.

### ஜூலியன் வின்ஸன் கடிதம்

பாரிஸ் மாநகரத்தில் இருந்து ஜூலியன் வின்சன் ஆசிரியருக்கு அடிக் கடி கடிதம் எழுதுவார். பெருங்கதையை ஆசிரியர் ஆராய்ச்சி செய்து கொண்டி ருக்கிறார் என்பதை அறிந்த அவருக்கு அதிக ஊக்கம் உண்டாயிற்று. பிருகத்கதா என்னும் வடமொழி நூலை அவர் படித்திருந்த காரணத்தினால் அதனுடைய தமிழ் மொழி பெயர்ப்பு பெருங்கதை என்பதை அறிந்து அதை விரைவில் பார்க்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று.

சீவகசிந்தாமணியின் இரண்டாவது பதிப்பை ஆசிரியர் அவருக்கு அனுப்பவில்லை. ஆனாலும் புதுச்சேரியிலிருந்து பிரெஞ்சுக்காரரர் ஒருவர் அவருக்கு ஒரு பிரதியை அனுப்பியிருந்தார். அதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. அதன்மேல் 21-5-1909 அன்று ஒரு கடிதம் எழுதினார்.

'எனதன்பிற்குரிய பெருஞ் சிறப்புப் பொருந்திய ஐயனே, நீங்க ளெழுதியருளிய திருமுகம் எங்களிடம் சரியாய்ச் சேர்ந்தது'. அதனால் மிகவுங் களிகூர்ந்து மகிழ்ந்தோம். நாமெழுதினதின் பேரில் நீங்கள் சொன்னது பெரிய சந்தோஷ்துடனே பார்த்து வருகின்றேன்.

'நீங்கள்சீக்கிரம்உதயணன்கதையைஅச்சிட்டுவெளியேகொடுப்போ மென்றதால் தமிழைக் கற்கிறவர்கட்கெல்லாம் ஒப்பிலாக் களி பிறந் தோங்கும். அச்சிறந்த நூல் வெளிப்படு மாத்திரத்தில் எங்கட்கிரண்டு

பிரதிகளை ரிஜிஸ்டர்ட் தபாலில் அனுப்பி வைக்க வேண்டுமென்று மன்றாடு கிறோம். அவை சென்ற பிறகு விலையும் தபாற் கூலியும் செல்விப்போம்.'

நீங்களச்சிட்ட சிந்தாமணி இரண்டாம் பதிப்போவென்றால் அதினொரு பிரதியை எங்கட்குப் புதுச்சேரியினின்று ஒரு சிநேகிதரனுப்பினார், அவருக்கும் பணத்தை வருவித்தோம்.

நீங்கள் நல்ல சௌக்கியமாய் நீடு வாழ்கவென்று எழுதினேன்.

இங்ஙனம்,
அன்பன்
Prof. Julien Vinson
(பேராசிரியர் ஜூலியன் வின்சன்)

இந்தக்கடிதத்தைக்கண்ட ஆசிரியப்பிரான் மகிழ்ந்தார். "தமிழ்நாட்டுக்கு அப்பால் நெடுந்தூரத்தில் உள்ள நாட்டில் இருப்பவருக்குத் தமிழிடம் இவ்வளவு பற்றும் தமிழ் நூல்களில் விருப்பமும் தமிழ் அறிஞர்களிடம் மதிப்பும் இருக்கின்றனவே! தமிழ்நாட்டில் வாழ்கிற பலருக்கு இத்தகைய உணர்ச்சி இருக்கவில்லையே! அயல்மொழியாகிய ஆங்கிலத்தில் உள்ள மோகத்தில் ஒரு சிறிதளவாவது தமிழில் இருக்குமானால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்று வருந்தினார்.

## தந்திக்குத் துதிக்கை

1909-ஆம் ஆண்டு திருவாவடுதுறை மடத்தில் குருபூஜை நடந்தது. அந்தச் சமயம் திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் வயலின் கச்சேரி செய்தார். அப்போது இராமநாதபுரம் சேதுபதி வந்திருந்தார். அரசருக்கு இசையில் நல்ல பயிற்சி உண்டு. அவரே நன்றாகப் பாடுவார். திருப்புகழை மிக இனிமையாகப் பாடுவது அவரது வழக்கம். வித்துவான் 'வாதாபி கணபதிம்' என்று ஆரம்பித்து மிகச் சிறப்பாகப் பாடினார். எல்லோரும் மகிழ்ந்து தலையாட்டினார்.

அப்போது ஆசிரியர் 'தந்திக்குத் துதிக்கை உண்டு' என்று சிலேடை யாகச் சொன்னார். தந்தி என்றால் யானை என்றும் பொருள். துதிக்கை - தும்பிக்கை, பாராட்டுதல்.

❀❀❀

## 15. சில நிகழ்ச்சிகள்

### ஜி.யு.போப்பின் பழக்கம்

ஆக்ஸ்போர்டுப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி வந்த ஜி.யு.போப் காலமாகிவிட்டார். அவருடைய மகனார் ஜே.ஏ.ஆர். போப் என்பவர் தம்முடைய தந்தையின் நண்பர்களை எல்லாம் தெரிந்துகொண்டிருந்தார். ஜி.யு.போப், ஆசிரியர் பதிப்பித்த மணிமேகலையின் முதல் பதிப்பில், பல அடையாளங்களைச் செய்து இடையிடையே பல குறிப்புக்கள் அடங்கிய காகிதங்களை வைத்துப் பைண்டு செய்து வைத்திருந்தார். தம்முடைய தந்தையாரின் நினைவு தமிழகத்திலுள்ள பெரும்புலவராகிய ஆசிரியப் பிரானுக்கு என்றும் இருக்கவேண்டும் என்று நினைத்து அந்த நூலை ஆசிரியருக்கு அனுப்பித் தம்முடைய தந்தை காலஞ்சென்ற செய்தியை எழுதியிருந்தார். அந்த மணிமேகலை நூலைப் பார்த்த ஆசிரியர் அதைப் பொன்னே போலப் பாதுகாத்து வந்தார்.

ஜி.யு.போப்பை ஆசிரியப்பிரான் பார்த்ததில்லை. என்றாலும் இருவருக்கும் இடையே கடிதப் போக்குவரத்து நடந்து வந்தது. அதனால் அவர்களுடைய அன்பு வளர்ந்தது. 'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்' என்ற குறளுக்கு இலக்கியமாக அவர்களுடைய நட்பு இருந்தது.

போப் திருக்குறளையும் நாலடியாரையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்.

### சடகோபாசாரியார்

கும்பகோணம் நகர உயர்நிலைப்பள்ளியில் வடமொழிப் புலவராகச் சடகோபாசாரியார் என்பவர் இருந்தார். அவர் நன்றாகப் படித்தவர். சிறந்த ரசிகர். ஆசிரியர் அவரைத் திருவாவடுதுறைக்கு அழைத்துச் சென்று, அம்பலவாண தேசிகரால் சிறப்புப் பெறும்படி செய்தார் மிகவும் சுவையாகப் பேசுகின்ற சடகோபாசாரியாருடன் ஆசிரியர் அடிக்கடி பழகி, அவர் வாயிலாகப் பல வடநூல் செய்திகளைத் தெரிந்துகொள்வார். நகைச்சுவை ததும்பப் பேசுவதில் சடகோபாசாரியார் வல்லவர்.

1902-ஆம் ஆண்டு இறுதியில் அவர் நோய்வாய்ப்பட்டார். மிகவும் கடுமையான நோயில் வீழ்ந்துவிட்டார். இனிப் பிழைக்க மாட்டார் என்றே தெரிந்தது. படுத்தபடுக்கையாகக் கிடந்தார்.

தம் நண்பராகிய அவரைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று ஆசிரியர் அங்கே சென்றார். அவரைச் சேர்ந்தவர்கள் பலர் வெளியூரிலிருந்து வந்திருந்தார்கள். வீட்டுத் திண்ணையில் பலர் உட்கார்ந்திருந்தார்கள். ஆசிரியரைக் கண்டவுடன், "வாருங்கள்; நீங்கள் வந்திருப்பதைக் கூடத் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் அவர் கிடக்கிறார்; கண்ணைத் திறக்க வில்லை; பேசவும் இல்லை; இனி நாம் செய்ய என்ன இருக்கிறது?" என்று சொன்னார்கள்.

ஆசிரியர் உள்ளே சென்றார். சடகோபாசாரியார் இருக்குமிடம் சென்று கையினால் அவரது உடலைத் தடவிவிட்டபடியே, "உடம்பு எப்படி இருக்கிறது?" என்று மெல்லக் கேட்டார். கண்ணை மூடிக்கொண்டு கிடந்த சடகோபாசாரியார் உடனே கண்ணைத் திறந்தார். அதைக் கண்டு எல்லோரும் வியப்படைந்தனர்.

"நீங்கள் வந்தது மிகவும் சந்தோஷம். நான் விடை பெற்றுக் கொள்கிறேன். இங்கே எல்லாரும் எல்லாவற்றையும் சித்தம் பண்ணி வைத்திருக்கிறார்கள். வீட்டிலே தளிகை இல்லை. பெருமாள் கோவிலிலேயே நன்றாகப் பிரசாதம் செய்யும்படி சாமான்களை அனுப்பியிருக்கிறார்கள். போக்கியமாக இருக்கவேண்டுமென்று சொல்லி அனுப்பியிருக்கிறார்கள்; எல்லோரும் என்னை வழி அனுப்பத்தான் தயாராய் இருக்கிறார்கள். ஆனால் இவன்தான் இன்னும் கிளம்பாமல் இருக்கிறான்" என்று வேதனையும், நகைச் சுவையும் தோன்றச் சொன்னார். அவர் தம் ஹாஸ்ய உணர்ச்சியைத் தாம் சாகும் காலத்திலும் விடவில்லை. மரண வேதனையையும் மிஞ்சிய அவருடைய மன நிலையை அறிந்த ஆசிரியர் வியப்படைந்தார்.

## அச்சகம் பெற மறுத்தது

ஆசிரியர் புத்தகங்களை அச்சிடுவதற்குப் பல அச்சகங்களை நம்பித் தொல்லைப்பட்டு வருவதை அறிந்து திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவாண தேசிகர் ஆசிரியருக்கு அந்த வகையில் ஏதாவது உதவிபுரிய வேண்டுமென்று நினைத்தார். அடிக்கடி அச்சகத்திற்கே போய் ஒரு புத்தகம் அச்சிடுவதற்குள் பல முறைகள் அல்லலுற வேண்டியிருக்கிறது என்பதையும் உணர்ந்து கொண்டார். ஆகையால் அத்தகைய தொல்லை இல்லாமல் இருக்க ஆசிரியப்பெருமானே ஓர் அச்சகத்தை வைத்துக்கொண்டால் நலமாக இருக்கும் என்று எண்ணினார்.

ஒருமுறை திருவாவடுதுறைக்கு ஆசிரியர் சென்றிருந்தபோது, "நான் ஒரு முக்கியமான செய்தியைத் தங்களுக்குச் சொல்லலாம் என்று எண்ணுகிறேன். தாங்கள் பிற அச்சகங்களை நம்பிப் புத்தகங்களைக் கொடுத்துத் தொல்லைப் படுகிறீர்கள். தாங்களே ஓர் அச்சகத்தை வைத்துக்கொண்டால், அதில் தங்கள் புத்தகங்களை மிக விரைவில் அச்சிட வசதியாக இருக்கும் அல்லவா? மடத்திலிருந்தும் வேறு நண்பர்களிடத்திலிருந்தும் சேர்த்து 5 ஆயிரம் ரூபாயை நாம் தங்களுக்கு அளிக்கிறோம். அதை வைத்துக்கொண்டு அச்சகத்தை ஆரம்பித்தால் தங்களுக்கு இன்று இருக்கிற பல தொல்லைகள் குறையும். தங்கள் விருப்பத்தை அறிந்து இதற்கு ஏற்பாடு செய்யலாம் என்று எண்ணியிருக்கிறேன்" என்று மிக அன்புடன் சொன்னார்.

அவருடைய அன்பை நன்கு உணர்ந்துகொண்ட ஆசிரியர் உடனே பதில் சொல்லாமல், "நாளைக்கு என்னுடைய கருத்தைத் தெரிவிக்கிறேன்" என்று வந்துவிட்டார். மறுநாள் சென்றபோது ஆதீனத் தலைவர், "என்ன, எப்போது அச்சகத்தைத் தொடங்கலாம்?" என்று கேட்டார்.

"சந்நிதானத்திற்கு என்னிடம் இருக்கும் பேரன்பை நன்றாக உணர்கிறேன். நான் படும் தொல்லைகளை இந்த அளவு தெரிந்து கொண்டவர்கள் மிகக் குறைவு. அச்சகம் இருந்தால் விரைவாக நூல்களை அச்சிடலாம் என்பது உண்மைதான். ஆனால் இன்று புத்தகத்திற்கு வேண்டிய காகிதம், பைண்டுச் சாதனங்கள் ஆகியவற்றை மட்டும் வாங்கித் தருவதற்குத்தான் நான் கவலைப்பட வேண்டியதாக இருக்கிறது. ஓர் அச்சகத்தை வைத்து நடத்த வேண்டிய வேலையும் எனக்கு ஏற்பட்டுவிடுமானால் ஆட்களை வைத்து, சம்பளம் கொடுத்து நிர்வாகம் செய்ய வேண்டிய பொறுப்பும் ஏற்பட்டு விடுமே! அப்படியானால் நூல் ஆராய்ச்சிக்கு நேரம் கிடைக்குமா என்று அஞ்சுகிறேன். சந்நிதானம் சொல்வதை நான் மறுப்பதாக எண்ணக்கூடாது. என்னுடைய வேலை சிரமமின்றி, வேகமாக நடக்க வேண்டுமென்ற திருவுள்ளத்துடன் தான் சந்நிதானம் இப்படி உத்தரவிடுகிறது என்பதை அறிந்து கொண்டுள்ளேன். ஆனால் அச்சகத்தால் உண்டாகின்ற தொல்லை களைப் பற்றியும் சந்நிதானம் சிந்திக்கவேண்டும். எனக்கு அநுபவத்தில் அது நன்றாகத் தெரியும். வேலைக்காரர்களை வைத்து வேலை வாங்குவது எளிய காரியம் அன்று. ஆகவே இப்போது உள்ளபடியே நடந்துவரச் சந்நிதானம் சம்மதிக்க வேண்டும்" என்றார்.

'எது கிடைத்தாலும் பெற்றுக் கொள்ள ஆவலாயிருக்கும் பெரும்பாலான மக்கள் உள்ள இந்த உலகில் இத்தகையவர்களும் இருக்கிறார்களே!' என்று வியந்த ஆதீனத் தலைவர் அப்பால் அந்தக் கருத்தை வற்புறுத்தவில்லை.

## இந்தக் கட்டிடம்

1910-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 22-ஆம் தேதி சிதம்பரம் சைவப் பிரகாச வித்தியாசாலையின் ஆண்டு விழா நடைபெற்றது. அது ஆறுமுக நாவலரால் நிறுவப்பெற்றது. அந்த விழாவிற்குப் பாண்டித்துரைத் தேவர் தலைமை தாங்கினார். ஆசிரியரும் அதற்குச் சென்றிருந்தார். பல புலவர்கள் வந்து பேசினார்கள். ஆறுமுக நாவலர் பெயரால் அங்கே புதுக் கட்டிடம் கட்டப்பெற்றுக் கிருகப் பிரவேசம் நடைபெற்றது. ஆசிரியரைப் பேசும்படி கேட்டுக் கொண்டார்கள்.

ஆசிரியர் பேசும்போது, "தமிழில் நல்ல நூல்களை எல்லாம் வெளியிட்ட ஆறுமுக நாவலரவர்களுடைய நினைவை மறவாமல் இருக்க இவர்கள் இங்கே ஒரு புதுக் கட்டிடம் கட்டியிருக்கிறார்கள். அதன் திறப்பு விழா இன்று நடைபெறுகிறது. நானும் என்னுடைய ஆசிரியப்பெருமான் நினைவாக ஒரு கட்டிடம் கட்டியிருக்கிறேன்" என்று கூறிச் சிறிதே நிறுத்தினார். "அப்படியா? இவர் எங்கே அந்தக் கட்டிடத்தைக் கட்டியிருக்கிறார்?" என்று சபையில் உள்ளவர்கள் யோசனையில் ஆழ்ந்தார்கள். ஆசிரியர் மேலும் பேசலானார், "இந்தக் கட்டிடம் நூல் வடிவத்தில் இருக்கிறது. இதற்கும் ஒரு திறப்புவிழா முதலில் நடந்தது. எங்கள் ஆசிரியர் எழுதிய நூல்கள் எல்லாவற்றையும் இந்தக் கட்டிடத்தில் ஒருசேர அமைத்து வெளியிட்டிருக்கிறேன்" என்று பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டைப் பற்றிப் பேசினார். பைண்டு செய்வதையும் கட்டிடம் என்று சொல்வது உண்டு.

# 16. பல வகைப் பெருமைகள்

### *திருப்பனந்தாள் மடாதிபதியின் உதவி*

*1910-ஆம் ஆண்டு பிள்ளையவர்களது பிரபந்தத் திரட்டை ஆசிரியர் அச்சிட்டு நிறைவேற்றினார். அவற்றின் இரண்டு பிரதி களைத் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவராக இருந்த காசிவாசி சோமசுந்தரத் தம்பிரானுக்கு அனுப்பினார். ஆசிரியர் மணிமேகலையைப் பதிப்பித்தபோது உடனிருந்து உதவி செய்தவர் அவர். புத்தகம் கிடைத்த பிறகு அவர் ரூ.250 அனுப்பினார். அதோடு ஒரு கடிதம் வந்தது. அவர் தமிழ்ப் புலமை படைத்தவராதலின் அந்தக் கடிதத்தைச் சுவையுடன் எழுதியிருந்தார். "தாங்கள் பண்டுள்ள நூல்களை எல்லாம் பதிப்பித்து வருகிறீர்கள். ஆனாலும் தங்களுக்குப் பண்டு (Fund) இல்லை. அதற்காக இந்தத் தொகையை அனுப்பியுள்ளேன்" என்று எழுதியிருந்தார்.*

*உடனே அதற்கு ஆசிரியர் சமத்காரமாகப் பதில் தெரிவித்தார். திருப்பனந்தாளிலிருந்து முதல் முதலாக வந்த உதவி அது. ஆதலின் அதை மிகவும் பாராட்டி எழுதிதோடு ஒரு கருத்தை எழுதியிருந்தார். "நான் இப்போது செய்கிற தமிழ்த்தொண்டை உலகத்தார் பாராட்டுகிறார்கள். நான் பதிப்பிக்கும் நூல்களுக்கு எல்லாம் மூலமாக இருப்பது ஓலைச் சுவடிகள். பனந்தாளில் உள்ள நூல்களைத்தான் வெளியிடுகிறேன். அவற்றினால் தான் இந்தப்புகழ் கிடைக்கிறது. திருப்பனந்தாளில் இருந்துதான் இந்தப் பொருளும் கிடைத்திருக்கிறது" என்று சுவையாகப் பதிலையும் எழுதினார்.*

### *அகநானூற்றைப் பதிப்பிக்காமை*

*எட்டுத்தொகையில் ஒன்றாகிய அகநானூற்றைப் பதிப்பிக்க வேண்டு மென்ற எண்ணம் ஆசிரியருக்கு இருந்தது. 1910-ஆம் ஆண்டிலேயே பல ஏடுகளைத் தொகுத்து ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார். மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவராகிய பாண்டித்துரைத் தேவரும் ஆசிரியர் மூலமாக அகநானூறு வந்தால் மிகவும் சிறப்பாக இருக்கும் என்று எழுதினர். சங்க நூல்களைப் பதிப்பிப்பதில் ஆசிரியருக்கு இருந்த திறமை உலகம்*

முழுவதும் தெரிந்திருந்ததால் அவரே அதைப் பதிப்பிக்க வேண்டுமென்று வற்புறுத்தினார். ஆசிரியருக்கும் அதை ஆராய்ந்து பதிப்பிக்க வேண்டு மென்ற எண்ணம் இருந்தது.

ஆசிரியப்பிரான் சங்கநூல்களைப் பதிப்பித்துப் புகழும் பணமும் பெறுகிறார் என்ற எண்ணம் பலருக்கு இருந்தது. புகழ் இருந்ததேயொழியப் பணம் இல்லை. ஆசிரியர் ஏடுகள் தேடி ஊர்கள்தோறும் போனதற்குச் செலவிட்ட பணம் அதிகம். அது மாத்திரம் அன்று; பல இடங்களில் ஏட்டுச்சுவடி இருப்பதாகச் சொல்லி, அதைத் தருவித்துத் தருவதாகப் பலர் அவ்வப்போது பணம் பெற்று வந்தார்கள். ஆசிரியரிடம் பழைய நூல்களின் பெயரைச் சொன்னால் போதும், பணம் கொடுத்து விடுவார் என்ற எண்ணமும் பலரிடம் வளர்ந்திருந்தது. அப்படி எத்தனையோ பேர் ஆசிரியரிடம் ஏதாவதொரு பழைய நூலின் பெயரைச் சொல்லிப் பணம் பெற்றுப் போயிருக்கிறார்கள்; சிலர் தங்களிடம் தமிழ்நெறி விளக்கம் இருப்பதாகப் பொய் சொல்லிக் கடிதம் எழுதிப் பணம் பெற்றிருக்கிறார்கள்.

அகநானூற்றை ஆசிரியர் ஆராய்ந்துகொண்டிருந்தபோது, அதைத் தாங்களே பதிப்பித்தால் தங்களுக்குப் பெயரும், பொருளும் வரும் என்று பலர் எண்ணினார்கள். சிலர் அந்த முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது ஆசிரியருக்குத் தெரிந்தது. வேறு ஒருவர் செய்யும் காரியத்தைத் தாமும் செய்யப் புகுந்தால் அவர்களது முயற்சி தடைப்படும் என்ற காரணத்தினால் அவர்களே பதிப்பிக்கட்டும் என்று ஆசிரியர் இருந்துவிட்டார்.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் ஆசிரியருடன் நன்கு பழகியவர். அவர் அகநானூற்றைப் பதிப்பிக்க வேண்டுமென்ற முயற்சியில் பல ஏட்டுச் சுவடிகளை விரிவாக ஆராய்ந்து கொண்டிருந்தார். எனினும் அவர் அதனைப் பதிப்பிக்கவில்லை; கடைசியில் வே.இராசகோபாலையங்கார் அவர்களால் அகநானூறு பதிப்பிக்கப்பெற்றது.

### ‘மேருமலை ஒன்றுதானே?’

1909-ஆம் வருஷம் வி.கிருஷ்ணசாமி ஐயர் ஹைகோர்ட் நீதிபதியாக நியமிக்கப் பெற்றார். அவருடைய மேதையை அறிந்து, பலர் அவருக்கு ஏற்ற பதவி கிடைத்தது என மகிழ்ந்து பாராட்டினார்கள். ஆசிரியப்பிரானும் அவரைப் போய்ப் பார்த்துத் தம் பாராட்டுதலைத் தெரிவித்துவரச் சென்றார்.

ஆசிரியரைப் பார்த்தவுடன் கிருஷ்ணசாமி ஐயருக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. “வாருங்கள், வாருங்கள். உங்களைப் பார்த்ததனால் எனக்குப்

புதிய ஊக்கம் உண்டாகிறது. வக்கீலாக இருந்தால் எனக்கு நேரம் இராது. இப்போது கிடைத்திருக்கும் பதவி அதிக வேலை உள்ள பதவியன்று. ஆகையால் இப்போது நீங்கள் அடிக்கடி வரலாம். உங்களோடு உரை யாடினால் போதும்; நான் பல செய்திகளைந் தெரிந்துகொள்வேன்'' என்று ஆசிரியப்பெருமானிடம் சொன்னார். அதன்படி ஆசிரியப்பெருமானும் அடி க்கடி சென்று போய்ப் பார்த்துவிட்டு வருவது வழக்கம்.

ஒரு சமயம் வி.கிருஷ்ணசாமி ஐயர் திருவிடைமருதூருக்குச் சென்றிருந்தார். திருவிடைமருதூரில் அவரை வரவேற்கத் திருவாவடு துறை ஆதீனத்தார் ஏற்பாடு செய்தார்கள். அந்தச் சமயத்தில் தாங்களும் வந்து இருக்கவேண்டுமென்று ஆசிரியப்பிரானுக்கு ஆதீனத்தலைவர் கடிதம் எழுதியிருந்தார். அப்படியே ஆசிரியரும் அங்கே போனார்.

விழா நன்கு நடைபெற்றது. கிருஷ்ணசாமி ஐயர் ஆதீனத் தலைவருடன் ஆதீன சம்பந்தமாகப் பல செய்திகளைப் பேசிக் கொண்டிருந்தார். பிறகு ஆதீனத் தலைவரைப் பார்த்துத் திடீரென்று ஒரு கேள்வி கேட்டார். "உங்கள் ஆதீனத்தில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இருந்தார்கள். பின்பு ஐயரவர்கள் இருந்தார்கள். அவர்கள் கல்லூரியில் வேலைக்குப் போய்விட்டார்கள். அந்த ஸ்தானத்தில் இவர்களைப் போல யாரை இப்போது வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். ஆதீனத் தலை வருக்குச் சற்றுச் சங்கடமாகப் போய்விட்டது. என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை.

உடனே அருகில் இருந்த ஆசிரியப்பிரான் பதில் சொன்னார்; "உங்களுக்குப் பின்னால் உங்களைப் போல வேறு யாராவது வருவார்களா? உங்களைப் போலவே வேறு யாராவது ஒருவரைத் தான் தேடிப் பிடிக்க முடியுமா? அவ்வாறே பிள்ளையவர்களைப் போல வேறு யார் ஒருவர் இருக்க முடியும்? மேருமலை என்றால் ஒரு மலைதானே உண்டு? மற்ற மலைகளெல்லாம் மேரு ஆகுமா?'' என்று சொன்னார். வி.கிருஷ்ணசாமி ஐயர் சிரித்துக்கொண்டார்.

### ஜூலியன் வின்சன் பாடல்

ஆசிரியர் பெருங்கதை ஆராய்ச்சி செய்து வருகையில் பேராசிரியர் ஜூலியன் வின்சன் அடிக்கடி அதைப்பற்றி விசாரித்துக் கடிதம் எழுதினார். ஒரு கடிதத்தில்

> பூதலஞ் செழிக்கமுத் தீதனை வளர்க்கும்
> வேதியர் மரபை விளக்கத் தோன்றிய
> சாமி நாதநன் னாமப் பெரும

புலவோர்க் கெல்லா மிலகு திலக
சேம மாகிய நேம நெறியுணர்
அரும்பெறல் நூலின் பெரும்பொருட் பயனெலாம்
கைம்மாறு கருதாது பெய்மாரி போல
உலகோ ருய்யப் பலகாற் பொழிந்தோய்
நின்னருள் கல்வி நேயம் கொடைசீர்
நின்னர்க் குணமெலா மியானொரு நாவான்
நவிற்ற வொண்ணுமோ உவகை யடங்குமோ
தண்டமிழ் தழைக்கத் தண்டா வூக்கந்
துன்னுங் கருத்த, நின்னொன்று கூறுவல்
தகுதி யாள மிகுதி கேண்மியா
நிகரிலாப் புண்ணிய நிற்கே யுறுமென.

என ஓர் அகவலை முன்னால் எழுதியிருந்தார்.

## 17. பிறருக்குச் செய்த உதவிகள்

ஒரு சமயம் வி.கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் ஆசிரியருடைய இல்லமாகிய தியாகராச விலாசம் வந்தார். ஆசிரியப்பெருமான் ஏட்டுச் சுவடிகளைத் தொகுத்து வைத்திருப்பதையும், எப்போதும் வேலை செய்து கொண்டிருப்பதையும் பார்த்து ஆச்சரியப்பட்டார்.

ஆசிரியப்பெருமானுக்கு ஏதாவது உபகாரம் செய்யவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. மாதந்தோறும் அரசாங்கத்திலிருந்து ஏதாவது பொருளுதவி கிடைக்க வேண்டுமென்று அவர் முயன்றார் ஆனால் அது கைகூடவில்லை.

கடைசியில் அவரது முயற்சியினால் மகாமகோபாத்தியாயப் பட்டம் கிட்டியது. ஆண்டொன்றுக்கு நூறு ரூபாய் அந்தப் பட்டம் பெற்றவர்களுக்கு அரசாங்கத்தார் கொடுத்து வந்தார்கள். அந்தக் காலத்தில் வடமொழிப் புலவர்களுக்கே அந்தப் பட்டம் கிடைத்து வந்தது.

### தங்கக் காப்பு

ஒரு நாள் ஓர் எளிய மாணவன் ஆசிரியரிடம் வந்தான். அவன் இந்து உயர்நிலைப்பள்ளியில் படித்துக்கொண்டிருந்தான். அவன் வறியவன். ஆகையால் உபகாரச் சம்பளம் பெற்றால் படிப்பதற்கு வசதியாக இருக்கும் என்று எண்ணினான். ஆசிரியரிடம் தன் வறுமை நிலைமையை எடுத்துரைத்தால் ஏதாவது நன்மை கிடைக்கும் என்று எண்ணி வந்ததாகச் சொன்னான்.

ஆசிரியர் அவனைப் பற்றிய செய்திகளை விசாரித்தறிந்தார். அவன் சொன்ன விவரங்கள் யாவும் உண்மையாக இருந்தன. அதன் பின்னர் இந்து உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியருக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுத்தார்.

அந்தக் கடிதத்தை அவனிடம் கொடுக்கும்போது ஆசிரியர் சொன்னார். “நீ உன் கையில் தங்கக் காப்பு அணிந்திருக்கிறாய். இந்தத் தங்கக் காப்புடன் நீ போய், நான் ஏழை என்று சொன்னால் யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். உலகம் ஒவ்வொருவரையும் எடைபோடுகிற முறையில்தான் உன்னையும் எடைபோடும். அதைக் கழற்றி வைத்துவிட்டு இந்தக் கடிதத்தைக் கொண்டு

போய்க் கொடு" என்று சொன்னார். உலகியலை நன்கு தெரிந்தே அந்த அறிவுரையைக் கூறினார். பையனும் அப்படியே செய்தான். ஆசிரியர் கொடுத்த கடிதத்தால் அவனுக்கு நன்மை கிடைத்தது.

### தர்பார்ப் பாட்டு

*1916*-ஆம் ஆண்டு டெல்லியில் தர்பார் நடந்தது. ஐந்தாவது ஜார்ஜ் மன்னர் வந்திருந்தார். அப்போது அதைப் பாராட்டும் முறையில் திருவா வடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவாண தேசிகர் லட்ச தீபம் ஏற்றி அந்த விழாவைக் கொண்டாடினார். அப்போது ஆசிரியரும் அங்கே சென்றிருந்தார். அப்போது ஆசிரியர் இயற்றிய சில செய்யுட்கள் வருமாறு:-

தார்பூத்த ஒளியுடைய முடிமன்ன ரெவரிலும்நம்
ஜார்ஜு மன்னர்
பேர்பூத்த ஒளியுடைய ரேனுமினும் ஒளிமருவிப்
பிறங்க எண்ணி
ஏர்பூத்த விடைமருதற் கோரிலக்கந் தீபம்இந்நாள்
ஏற்று வித்துச்
சீர்பூத்த புகழ்பெற்றாய் துறைசையிலம் பலவாண
தேவ நன்றே. *(1)*

நலமே மிகுமேக நாதன் பொருட்டு
நலமே மிகுமேக நரதற்-கலசில்சிறப்
பம்பல வாண வருமணியே நின்போல
இம்பப் புரிவா ரிலை. *(2)*

ஏகநாதர்-திருவிடைமருதூர்ச் சிவபெருமான்; தனித் தலை வராகிய ஜார்ஜ் மன்னர்.

இலக்கத்தீ பங்கொண் டிலக நரேசன்
இலக்கத்தீ பங்கள்தே வேசற்-கலக்கமற
ஏற்றுவித்தாய் நாவலந்தீ வென்னுந்தீ பத்துயரை
மாற்றுவித்தாய் யார்நின்போல் வார். *(3)*

நலம்படைத்த ஜார்ஜுமன்னர் முடிசூடும் சிறந்தவிந்த
நாட்கோ முத்திக்
தலம்படைத்த பலனெனுமம் பலவாண தேசிகன்செய்
சிறப்பாற் பாரில்
கலம்படைத்தோர் களுமரிய கலைபடைத்தோர்
களுமின்னுங் கணக்கி லாத
பலம்படைத்தோர் களும்நிதியப் பயன்படைத்தோர்
களுமானார் பாரு ளாரே. *(4)*

மின்னுமணி முடியரசர் சிகாமணியாம் ஜார்ஜுமன்னர்
மேரி யோடு
துன்னுபல வகைச்செல்வம் மருவி அழியாஇன்பம்
துனிஎல் வோர்க்கும்
இன்னுமுப காரங்கள் பலபுரிந்து மேன்மேல்வாழ்ந்
திருக்கும் வண்ணம்
மன்னுமுழு முதலாய வொருபொருளின் மலரடியை
வாழ்த்து வேனால். (5)

### தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி

கொழும்பிலிருந்த பெருஞ்செல்வரும், சிறந்த அறிஞருமாகிய பொ.குமாரசாமி முதலியார் என்பவர் ஆசிரியருக்கு அடிக்கடி கடிதம் எழுதுவார். அவர் காலமாகிவிட்டார். அவருடைய மூத்தகுமாரர் ஸ்ரீகாந்த முதலியார் என்பவர் கொழும்பில் இருந்தார்.

குமாரசாமி முதலியார் காலமான பிறகு, அவரது பரம் பரையில் வேறு யார் யார் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பிய ஆசிரியர், குமாரசாமி முதலியாரின் சகோதரர் அருணாசல முதலியாருக்குக் கடிதம் எழுதியிருந்தார். அருணாசல முதலியார் எழுதிய கடிதத்தின் மூலந்தான் குமாரசாமி முதலியாரின் மூத்தகுமாரர் ஸ்ரீகாந்த முதலியார் விலாசம் ஆசிரியருக்குக் கிடைத்தது. அதுமுதல் ஸ்ரீகாந்த முதலியாருக்கு ஆசிரியர் கடிதம் எழுதி வந்தார். அவரும் ஆசிரியருக்கு எழுதினார்.

தம் தந்தையாரைப் போலவே ஸ்ரீகாந்த முதலியாரும் தமிழில் மிக்க அன்பு உள்ளவராக இருந்தார். ஆசிரியரின் தொடர்பு அவருக்கு ஏற்பட்டவுடன் தமிழ்ப் புலவர்களுக்கு ஊக்கம் அளிக்கும்படி ஏதாவது ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பற்றிச் சிறப்பான ஆராய்ச்சி ஒன்றை எந்தப் புலவர் எழுதுகிறாரோ அவருக்குப் பரிசு தரலாம் என்றெண்ணி ஆசிரியரிடம் யோசனை கேட்டார். மிகவும் நல்ல காரியம் என்று ஆசிரியரும் அதை ஆமோதித்தார்.

அதன்பிறகு தமிழ்நாட்டில் உள்ள பத்திரிகைகளில் அதைப்பற்றி விளம்பரம் கொடுங்கள் என்று அவர் எழுதியதன்மேல் ஆசிரியப்பெருமானும் விளம்பரம் செய்தார்.

1911-ஆம் ஆண்டு நடந்தது இது. அப்போது புலவர்களிடையே தொல்காப்பிய ஆராய்ச்சி அவ்வளவு சிறப்பாக நிகழவில்லை. நன்னூலையே படித்தும் ஆராய்ந்தும் பாடம் சொல்லியும் வந்தார்கள். ஆகையால் பலர் இந்தக் கட்டுரைப் போட்டியில் கலந்து கொள்ளவில்லை. இராமநாதபுரத்தில்

இருந்த மு.இராகவையங்காரும் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டராயிருந்த வே.முத்துசாமி ஐயரும் கட்டுரைகளை எழுதி அனுப்பியிருந்தார்கள்.



மு.இராகவையங்கார்

அந்தக் கட்டுரைகளை ஆசிரியப் பெருமானே பார்த்துப் பரிசுக்கு ஏற்றது எது என்பதைத் தீர்மானிக்க வேண்டுமென்று ஸ்ரீகாந்த முதலியார் கருதினார். ஆசிரியரும் அப்படியே அந்த இரண்டு கட்டுரைகளையும் ஆராய்ந்து, இராகவையங்காரின் கட்டுரை சிறப்பாக இருக்கிறது என்று அறிந்து, அதற்கு அந்தப் பரிசை அளிக்க வேண்டுமென்று பரிந்துரைத்தார். அந்தக் கட்டுரை பின்னாலே 'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி' என்ற பெயரில் புத்தகமாகவும் வெளியிடப் பெற்றது.

## 18. பல பெருமக்களின் வருகை

### மைக்கேல் பிரபுவுடன் படம் எடுத்துக்கொண்டது

ஒரு சமயம் சிலாசாசன அலுவலகத்தைச் சேர்ந்தவர்கள் கவர்னர் தம்பதிகளைத் தம்முடைய காரியாலயத்திற்கு வரவேண்டுமென்று அழைத்தார்கள். அப்போது கவர்னராக இருந்தவர் மைக்கேல் பிரபு. அவரும் அந்தக் காரியாலயத்திற்கு விஜயம் செய்ய ஒப்புக்கொண்டார். அந்தக் காரியாலயத்தில் நிறையப் பழைய விக்கிரகங்கள் இருந்தன. கவர்னர் தம்பதிகள் வரும்போது அந்த விக்கிரங்களைப் பற்றி ஏதாவது கேட்டால், சரியான தகவல்களை எடுத்துச்சொல்ல வேண்டுமே என்ற கவலை அந்தக் காரியாலயத்தின் தலைவருக்கு உண்டாயிற்று.

ஒரு நாள் காலையில் அந்தக் காரியாலயத்தின் மானேஜர் ஆசிரியரிடம் வந்தார். அடுத்த வாரம் கவர்னர் தம்பதிகள் தம்முடைய நிலையத்திற்கு விஜயம் செய்யப்போகிறார்கள் என்றும், அங்குள்ள விக்கிரகங்களைப்பற்றிச் சரியாக விளக்கிச் சொல்பவர் யாரும் இல்லையென்றும், ஆசிரியர் அவர்களே அந்த நேரம் அங்கே வந்திருந்து அவர்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டு மென்றும் கேட்டுக்கொண்டார்.

அப்படியே செய்வதாக இசைந்தார் ஆசிரியர். சிலாசாசன அலுவலகத் திற்குக் கவர்னர் தம்பதிகள் விஜயம் செய்தார்கள். ஆசிரியப்பெருமான் அவர்கள் கூடவே இருந்து அங்குள்ள விக்கிரகங்களைப்பற்றி எல்லாம் தமிழில் எடுத்துச்சொல்ல, அந்த அலுவலக மானேஜர் அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொன்னார். அவற்றைக் கேட்டுக் கவர்னர் தம்பதிகள் மிகவும் வியப்பு அடைந்தார்கள்; மகிழ்ச்சியும் பெற்றார்கள். அரை மணிக்கும் அதிகமாகவே அங்கு இருந்தார்கள். அவ்வளவு நேரம் அந்த இடத்தில் அவர்கள் செலவழித்தது மற்றவர்களுக்கு எல்லாம் மிகவும் ஆச்சரியமாக இருந்தது. "நான் இதுவரையில் தெரிந்துகொள்ளாதவற்றைத் தெரிந்து கொண்டேன். இங்கே இவ்வளவு அற்புதமான விக்கிரங்கள் எல்லாம் சிற்பக் களஞ்சியமாக விளங்குவதைக் கண்டு வியப்படைகிறேன். அதுவும் நீங்கள் ஒவ்வொன்றையும் எடுத்து விளக்கிய பிறகுதான் தமிழ்நாட்டின் பெருமையை ஓரளவு எங்களால் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது" என்று சொன்னார்.



கவர்னர் கார்மைக்கேல் குழுவினருடன் ஐயரவர்கள்

அப்போது அந்த அலுவலகத்தில் உள்ளவர்கள் கவர்னர் தம்பதி களை வைத்துப் படம் எடுக்க வேண்டுமென்று எண்ணினார்கள். ஆசிரியர் காரியாலய அறையிலேயே தங்கிவிட்டார்.

பங்களாவின் முன்புறத்தில் படம் எடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்தார்கள். நான்கு நாற்காலிகள் போடப்பெற்றிருந்தன. கவர்னர் தம்பதிகளை அழைத்து வந்து நாற்காலிகளில் அமரச் செய்தார்கள். மற்ற இரண்டு நாற்காலிகளிலும் காரியாலயத் தலைவரும் மானேஜரும் உட்கார இருந்தார்கள். அப்போது கவர்னர் சுற்றுமுற்றும் பார்த்தார். "எங்கே அந்தப் பண்டிதர்?" என்று கேட்டார். "அவரையும் இங்கே வந்து அமரச் சொல்லுங்கள்" என்றார். உடனே ஒருவர் பின்னும் ஒரு நாற்காலி கொண்டுவர ஓடினார். மற்றொருவர் அலுவலகத்தில் உட்கார்ந்திருந்த ஆசிரியரை அழைத்துவரச் சென்றார். ஐந்தாவதாக வேறு ஒரு நாற்காலி போடப் பெற்று அதில் ஆசிரியர் வந்து அமர்ந்த பிறகே கவர்னர் தம்பதிகள் போட்டோ எடுத்துக் கொண்டார்கள்.

சாமானியத் தமிழ்ப் பண்டிதரைப் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டு படம் எடுத்துக் கொண்டார்களே என்று மற்றவர்கள் நினைத்திருக்கலாம். ஆனால் கவர்னரோ ஆசிரியப்பெருமான் அங்குள்ள விக்கிரகங்களைப் பற்றி யெல்லாம் எடுத்துச்சொன்ன விளக்கங்களைக் கேட்டு, அவர் மிகப் பெரிய வராகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்டார். ஆகையால், "உங்கள் பக்கத்தில் உட்கார்ந்து போட்டோ எடுத்துக்கொள்வதை நான் பெரும் கௌரவமாகக் கருதுகிறேன்" என்று சொன்னார்.

## கார்மைக்கேல் பிரபு வருகை

*1911*-ஆம் ஆண்டு டிசம்பரில் கவர்னர் கார்மைக்கேல் பிரபு சென்னை மாநிலக்கல்லூரிக்கு வருவதாக ஏற்பாடாகி இருந்தது. அவர் வரும்போது சில கையெழுத்துப் பிரதிகளையும் ஏட்டுச்சுவடிகளையும் எடுத்து வந்து அவருக்குக் காட்டுவதோடு, ஏட்டுச் சுவடியில் எப்படி எழுதுவது என்பதையும் எழுதிக் காட்ட ஆசிரியர் எண்ணினார். அதன் பொருட்டுச் சீவகசிந்தாமணியின் அச்சிட்ட பிரதியையும், ஏடு எழுத்தாணி முதலியவற்றையும் கல்லூரிக்கு எடுத்துச் சென்றார்.

அப்போது கல்லூரித் தலைவராக இருந்தவர் மிடில்மாஸ்ட் என்பவர். அவரிடம் ஆசிரியர் தம் விருப்பத்தைத் தெரிவித்தபோது, "அப்படியே செய்யலாம். கவர்னர் மிகவும் ஆச்சரியப்படுவார்" என்று தம்முடைய உடன் பாட்டைத் தெரிவித்தார்.

கவர்னர் கல்லூரிக்கு வந்தார். மிகச் சிறந்த முறையில் வரவேற்பு நிகழ்ந்தது. அப்போது வடமொழிப் பேராசிரியராக இருந்த ரங்காசாரியார் முதல்வருடன் வந்து எல்லோரையும் கவர்னருக்கு அறிமுகப்படுத்தினார். தமிழ் வகுப்பையும் காட்டி, ஆசிரியப்பெருமானையும் அறிமுகப்படுத்தினார். "எனக்கு இவரை முன்பே தெரியும். விக்கிரகங்களைப் பற்றி எனக்குச் சொன்னவர் இவர் தாம்" என்று கவர்னர் சொன்னார்.

உடனே ஆசிரியப்பெருமானும் அவரைத் தம் வகுப்பறைக்குள் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ள அவரும் உள்ளே வந்தார். அவருக்குத் தனி ஆசனம் போட்டு உட்காரச் சொன்னபோது, அதில் உட்காராது, மாணவர்கள் உட்காரும் ஒரு பெஞ்சியிலே அமர்ந்தார்.

ஆசிரியர் அவருக்குப் பழைய ஏட்டுச்சுவடிகளையும், அவற்றில் உள்ள எழுத்துக்களையும், அவற்றைக் கொண்டு அச்சிடப்பெற்ற நூலையும் எடுத்துக்காட்டி, எழுத்தாணி கொண்டு எவ்வாறு ஏட்டுச்சுவடியில் எழுதுவது என்பதையும் தாமே எழுதியும் காட்டினார்.

பத்து நிமிடங்களுக்குள் வந்து திரும்புவதாக இருந்த கவர்னர், அங்கேயே அரைமணிக்கும் மேலாகத் தங்கினார்.

அந்தக் காலத்தில் கல்லூரிகளில் தமிழ்ச் செய்யுட்கள் பாடமாக அமைக்கப் பெறவில்லை. வெறும் கட்டுரை எழுதுவது மாத்திரந்தான் உண்டு. எனவே, அப்போது கவர்னரிடம் ஆசிரியர் சொன்னார்; "தமிழில் நிறையச் செய்யுட்கள் இருக்கின்றன. நான் பழைய செய்யுள் நூல்களை நன்றாகப் படித்திருக்கிறேன். அவற்றையெல்லாம் நாங்கள் பாடம்

சொல்வதற்கும் மாணவர்கள் படிப்பதற்கும் இப்போது வாய்ப்பே இல்லை. காரணம், கல்லூரிப் பாடங்களில் அவை சேர்க்கப் பெறாது வெறும் கட்டுரை எழுதுவது மாத்திரந்தான் இருக்கிறது. தமிழில் எத்தனையோ நூல்கள் இருக்கின்றன. அவற்றை ஆராய்ந்து படிக்கின்றவர்கள் குறைவாக இருக் கிறார்கள். கல்லூரிப் பருவத்திலேயே அவர்களுக்கு அந்த நூல்களின் சுவையை அனுபவிப்பதற்கு வழியமைத் தால், பின்னால் அவற்றை முழுவதும் நன்றாகப் படிக்கவேண்டுமென்ற எண்ணம் உண்டாகும். எனவே கல்லூரி களிலேயே தமிழ் இலக்கியங்களைப் படிப்பதற்கு வழி செய்வது நன்றாக இருக்கும்'' என்று சொன்னார்.

பின்னர் ஒரு சமயம் கவர்னர் மகாபலிபுரத்திற்கு விஜயம் செய்வதாக இருந்தார். உடனே அதிகாரிகள் கவர்னருக்கு மகாபலிபுரத்தைப்பற்றி நன்றாக விளக்கவேண்டுமென்று ஆசிரியரிடம் வந்து, பழைய நூல்களில் மகாபலிபுரம் பற்றியுள்ள செய்திகளை எல்லாம் விரிவாக எழுதித் தரவேண்டு மென்று கேட்டனர். மாமல்லபுரம் என்பதே மகாபலிபுரம் என்று வழங்குவ தாகவும் அங்கே ஜலசயனப் பெருமாள், தலசயனப் பெருமாள் என்று இரண்டு திருக்கோயில்கள் உள்ளனவென்றும் எழுதியதோடு வேறு பல செய்திகளையும் எழுதி உதவினார். அவற்றைக் கேட்டுக் கவர்னர் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார். இப்படிக் கவர்னருக்கும், ஆசிரியப் பெருமானுக்கும் அடிக்கடி தொடர்பு உண்டாயிற்று.

### முதல்வர் ஆசிரியர் இல்லத்துக்கு வருகை

1912-ஆம் வருஷம் தொடங்கியது. ஜனவரி மாதம் முதல் தேதி கல்லூரி முதல்வரை யாவரும் போய்ப் பார்த்து வந்தார்கள். அப்போது முதல்வராக இருந்த துரையைப் பார்த்து வரலாம் என்று ஆசிரியர் எண்ணினார். தம்முடைய குமாரரை அழைத்துக் கொண்டு அவர் இருந்த பங்களாவுக்குச் சென்றார். தாம் வந்திருப்பதை ஒரு சீட்டில் எழுதி உள்ளே அனுப்பினார்.

அப்போது உள்ளே வேறு யாரோ துரையிடம் பேசிக் கொண்டிருந்தார். ஆசிரியர் வெளியே காத்திருக்க வேண்டி நேர்ந்தது. உள்ளே பேசிக் கொண்டிருந்தவர் வெளியில் வந்தவுடன் ஆசிரியப் பெருமானைக் கண்டார். சிறிதே நடுங்கி ஆசிரியரை வணங்கினார். அவர் ஆசிரியரிடம் படித்தவர். "நான் நெடுநேரம் உள்ளே பேசிக் கொண்டிருந்துவிட்டேன். தாங்கள் வந்திருக்கிறீர்கள் என்று தெரிந்திருந்தால் இவ்வளவு நேரத்தை எடுத்துக் கொண்டிருக்கமாட்டேன்; மன்னிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

பிறகு உள்ளே சென்றவுடன் துரையிடம் பல செய்திகளைப் பற்றிப் பேசினார். தியாகராச விலாசம் வந்து தமது புத்தக சாலையைப் பார்க்க வேண்டுமென்று துரையிடம் ஆசிரியர் கேட்டுக் கொண்டார். அவர் மிகவும் உவகை அடைந்தார். "பிறகு வருகிறேன்" என்று சொன்னார். என்றாலும் அன்று மாலையே 3 மணிக்குத் தம் காரில் வந்துவிட்டார். தியாகராச விலாசத்தில் 1½ மணி நேரம் இருந்து எல்லாவற்றையும் பார்த்து இன்புற்றார் ஏட்டுச்சுவடிகளையே முன்பு பார்த்திராத அவருக்கு அவற்றைக் கண்டபோது பெருவியப்பாக இருந்தது. அதிலுள்ள எழுத்துக்கள், எழுதும் முறை பற்றியெல்லாம் விரிவாகக் கேட்டார். "புலவர் தமது நூலை ஓர் ஏட்டுச்சுவடியில் எழுதியிருப்பார். மூலச் சுவடியிலிருந்து எத்தனையோ பேர் பிரதிகள் பண்ணியிருக்கிறார்கள். இது காரணமாகப் பல பிழைகளும் சுவடிகளில் வந்துவிட்டன. இவற்றைப் பார்த்து அச்சி டும் போது, பல நூல்களில் ஆராய்ச்சியால், இன்ன இடத்தில் இன்னவாறு இருத்தல் வேண்டும் என்பதை உணர்ந்து பிழைகளைத் திருத்தி அச்சிட வேண்டியுள்ளது" என்பதை ஆசிரியர் விளக்கினார்.

சுவடி வடிவத்தில் கவர்ச்சி இல்லாமல் உள்ள நூல்கள் அச்சிட்ட புத்தகங்களாக வரும்போது எவ்வளவு அழகு பெறுகின்றன! ஆனால் அந்த அழகு மட்டும் இருந்தால் போதுமா? நூற்பதிப்பும் திருத்தமாக இருக்க வேண்டும் அல்லவா? அத்தகைய சிறந்த தொண்டைச் செய்யும் ஆசிரியருக்குத் தமிழுலகம் எந்தக் காலத்தும் கடமைப் பட்டிருக்க வேண்டும் என்று எண்ணினார். ஆசிரியப்பிரான் செய்கிற காரியம் செயற்கரிய செயல் என்று உணர்ந்து பாராட்டினார்.

### கிருஷ்ணசாமி ஐயர் மறைவு

1911-ஆம் வருஷம் டில்லியில் தர்பார் நடந்த சமயத்தில் ஆசிரியர் திருவிடைமருதூரில் இரண்டு மூன்று நாள் தங்கியிருந்தார். அந்த நிகழ்ச்சியை முன்னிட்டு அப்போது அங்கே லட்ச தீபத்தைச் சிறப்பாக நடத்தினார்கள். அதைக் கண்டு ஆசிரியர் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் மீது சில பாடல்கள் இயற்றிப் பாடினார்.

டில்லி தர்பார் முடிந்த பிறகு திரு. வி.கிருஷ்ணசாமி ஐயர் வீட்டிற்குத் திரும்பினார். அவருக்குத் தேக அசௌச்சியம் ஏற்பட்டது. பல காலமாக ஐயர் அவரை அறிவார்; ஆதலின் அவருடைய வீட்டிற்கு அடிக்கடி சென்று பார்த்து வந்தார். பிறகு கிருஷ்ணசாமி ஐயர் காலமானார். அவருடைய பிரிவினால் ஒரு முக்கியமான உபகாரியை இந்த துயரம் ஆசிரியருக்கு உண்டாயிற்று.

# 19. பலர் செய்த உதவிகள்

## திருக்காளத்திப் புராணப் பதிப்பு

1911-ஆம் வருஷம் திருக்காளத்திப் புராணம் என்ற பழைய நூலை ஆசிரியர் ஆராயத் தொடங்கினார். ஏதாவதொரு தலசம்பந்தமான நூலை ஆராயும்போது, அந்த நூல் சம்பந்தமான பிற தலங்களுக்குச் சென்று பல விவரங்களைக் கேட்டும், பார்த்தும் செய்திகளைச் சேகரித்து வருவது அவரது வழக்கம்.

சீகாளத்தியில் திருவாளர்கள் மெ.அரு.நா.இராமநாதன் செட்டியார், மெ.அரு.அரு.அருணாசலம் செட்டியார் இருவரும் மிக்க பணம் செலவழித்துக் கும்பாபிஷேகம் நடத்தினார்கள். அதற்கு முன்பாகத் திருகாளத்திப் புராணம் என்ற பழைய நூலை அச்சிட வேண்டும் என்று ஆசிரியரிடம் சொன்னார்கள்.

ஆசிரியர் திருக்காளத்தி பற்றிய மூல புராணத்தையும், அத் தலத்தைப் பற்றிய தெலுக்கு நூல்களில் உள்ள செய்திகளையும், வாய்மொழியாக வழங்கப்பெறும் செய்திகளையும் அங்கங்கே சென்று விசாரித்துச் சேகரித்தார். கண்ணப்ப நாயனாரைப் பற்றி எந்த எந்த நூல்களில் எப்படி எப்படிச் சொல்லியிருக்கிறார்கள் என்பவற்றையெல்லாம் ஆராய்ந்து திருக்காளத்திப் புராணத்தை அச்சிடுவதற்கு ஏற்றவாறு சித்தம் செய்தார்.

1912-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் திருக்காளத்திப் புராணம் அச்சிடப் பெற்று, காளத்தியில் மகாகும்பாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றது. ஆசிரியப்பெருமான் அந்தக் கும்பாபிஷேகத்திற்குச் சென்று தரிசனம் செய்து வந்தார்.

திருக்காளத்திப் புராணம் என்பது அதற்கு முன்பு தமிழில் இல்லை. சிவப்பிரகாசர் எழுதிய சீகாளத்திப் புராணம் மாத்திரம் பலருக்குத் தெரியும். இல்லாத பல புதிய செய்திகள் திருக்காளத்திப் புராணத்தில் இருந்தன. அவற்றைக் கண்டு புலவர்கள் பாராட்டினார்கள். நல்லமுறையில் அந்தப் பதிப்பு வெளியாயிற்று. தல புராணங்களுக்கு அந்தக் காலத்தில் மிக்க மதிப்பு இருந்தது.

திருக்காளத்திப் புராணம் இறைவனருளால் நன்கு நிறைவேறியது பற்றி ஆசிரியருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. 1912-ஆம் வருஷம் செப்டம்பர்

மாதம் காளஹஸ்தி சென்று ஒரு வாரம் அங்கிருந்து சுவாமி தரிசனம் செய்து, கிரிப்பிரதட்சிணமும் செய்தார்.

### சேதுபதி மன்னர் செய்த உதவி

1912-ஆம் ஆண்டில் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் நவராத்திரி விழாவுக்கு வரவேண்டுமென்று ஆசிரியருக்கு எழுதினார். அங்கே நவராத்திரி விழா மிகச் சிறப்பாக நடைபெறும். புலவர்கள் பேரவையும் இசைப் புலவர்களின் கச்சேரிகளும் நடக்கும்.

ஆசிரியப்பெருமானும் நவராத்திரி விழாவுக்கு இராமநாதபுரம் சென்றார். பல புலவர்கள் வந்திருந்தார்கள். எல்லோரும் ஆசிரியரின் பெருமையை நன்கு உணர்ந்தவர்கள். ஆதலின் தங்களைவிடப் பெரியவராக எண்ணி மரியாதை செய்தார்கள். சேதுபதி மன்னர் ஆசிரியப்பெருமானுக்குத் தோடா அணிவித்துச் சால்வையும் வழங்கினார்.

"என்னால் உங்களுக்கு ஏதாவது ஆக வேண்டுமானால் சொல்லுங்கள். நீங்கள் செய்து வருகிற அற்புதமான தமிழ்ப் பணிக்கு ஒரு சிறு உபகாரத்தை யாவது நான் செய்ய வேண்டுமென்ற எண்ணம் எனக்கு நெடுநாளாக இருந்து வருகிறது" என்று மன்னர் சொன்னார்.

"தாங்கள் எப்படிச் செய்ய விரும்புகிறீர்களோ அப்படிச் செய்யலாம். இன்னது என்று சொல்ல எனக்குத் தெரியவில்லை" என்று ஆசிரியர் சொன்னார்.

சேதுபதி மன்னர் அதுமுதல் ஆசிரியருக்கு உடனிருந்து உபகாரம் செய்பவர்களுக்கு உதவுவதற்காக மாதம் ரூ.30 அனுப்பி வருவதாகச் சொன்னார். பல ஆண்டுகள் இந்த உதவி சேதுபதியிடமிருந்து ஆசிரியருக்குக் கிடைத்து வந்தது.

"இரப்பவர் என்பெறினும் கொள்வர்; கொடுப்பவர் தாம் அறிவர் தம் கொடையின் சீர்" என்பதை நன்கறிந்து இந்த உதவியைப் புரிந்து வந்தார்.

1915-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் சில காலம் பதிப்பு வேலை ஒன்றும் நடக்கவில்லை. ஆசிரியருக்கு உடல்நலம் சிதைவுற்றதே காரணம். ஆகையால் சேதுபதியிடமிருந்து தமக்குக் கிடைக்கும் 30 ரூபாய் உதவித்தொகையைத் தொடர்ந்து பெறுவது நியாயம் அன்று என்று ஆசிரியர் நினைத்தார். சேதுபதிக்கு இதுபற்றி எழுதினார். "என்னிடம் இப்போது யாரும் இருந்து உதவி செய்து வரவில்லை. இருந்தவர்களுக்கும் வேறு வேலை கிடைத்து விட்டதால் அவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை. எனவே, இப்போது தாங்கள் இதுவரையில் செய்த வந்த உதவியை நிறுத்திக் கொள்ளும்படி

வேண்டுகிறேன். இதைத் தவறாக சம்ஸ்தானத்தில் எண்ணக் கூடாது'' என்று கடிதம் மூலம் தெரிவித்தார்.

ஆனால் சேதுபதி அந்த எண்ணத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அதோடு தமது சம்ஸ்தான வித்துவான் ராகவையங்காருக்கு ஒரு கடிதம் எழுதச் செய்தார்.

''தாங்கள் சமீபத்தில் சென்னைக்குச் செல்லும்போது ஐயரவர்களை இது விஷயமாகக் கண்டு இப்படி அவர்கள் சொல்வது நமக்குத் திருப்தி அளிக்கவில்லை என்றும் அவர்கள் உலகத்திற்குச் செய்து வரும் நன்மைக்கு இது மிகவும் எளியதும், சொற்பமுமான சகாயந்தான் என்று நாம் எண்ணியிருக்க, அதையும் அவர்கள் ஏற்கச் சிறிது தடங்கல் செய்வது நியாயமல்ல என்றும், அவர்களே இந்தத் தொகையைச் சேர்த்து வைத்திருந்து புதிய நூற்பதிப்புத் தொடங்கும் போது உபயோகித்துக் கொள்ள வேண்டுமென்பது நம் அபிப்பிராயம் என்றும் அவர்களுக்குத் தெரிவித்து, அவர்களுடைய சம்மதத்தைப் பெற்று எழுத வேண்டும்'' என்று எழுதினார். ஆகவே, சேதுபதி அவர்களது உதவி தொடர்ந்து கிடைத்து வந்தது. பல ஆண்டுகளுக்குப் பின் இந்த உதவி நின்றுவிட்டது. அதை அறிந்து திருப்பனந்தாளில் மடாதிபதியாக இருந்த ஸ்ரீகாசிவாசி சாமிநாதத் தம்பிரான் அந்தத் தொகையை மாதந்தோறும் அனுப்பி வந்தார்.

### பாண்டித்துரையின் மறைவு

மதுரையில் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்த பாண்டித்துரைத் தேவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவர் அவ்வாறு இருப்பதை அறிந்து ஆசிரியருக்கு நண்பர்கள் செய்தி அனுப்பினார்கள்.

தமிழ் மொழியில் பாண்டித்துரைத் தேவருக்கு இருந்த சிறந்த ஊக்கமும், தமிழ்ப் புலவர்கள் நல்ல நிலையில் இருக்க வேண்டுமென்ற ஆர்வமும் அதிகம் என்பதை ஆசிரியர் நன்கு உணர்ந்திருந்தார்.

தேவர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, மதுரைத் தமிழ்ச்சங்க மானேஜராக இருந்த திரு. நாராயண ஐயங்காருக்கு அடிக்கடி கடிதம் எழுதி விசாரித்துக் கொண்டிருந்தார். பாண்டித்துரைத் தேவருக்கு நோய் தீரவில்லை. *1911*, டிசம்பர் 2-ஆம் தேதி இரவு *8-30* மணிக்கு ஆசிரியருக்கு ஒரு தந்தி கிடைத்தது. அப்போது அவர் உறங்கச் சென்றுவிட்டார். அவருடைய குமாரர் அந்தத் தந்தியைப்பிரித்துச் செய்தியை அறிந்தார். எனினும் உடனே ஆசிரியருக்கு அந்தச் செய்தியைச் சொல்லவில்லை. ''தேவருக்கு அசௌகரியம் முற்றி விட்டது'' என்று மட்டும் சொன்னார். மறுநாள் காலை 8 மணிக்குத் தான் தேவர் காலமான செய்தியை ஆசிரியரிடம் சொன்னார்.

"நேற்றே சொல்லியிருந்தால் ராத்திரி எல்லாம் எனக்குத் தூக்கம் வந்திருக்காது. இப்போதும் என் துக்கத்துக்கு அளவே இல்லை. அவரைப் போல இனி யார் இருப்பார்கள்? தமிழ்ச்சங்கம் இல்லாமல் இருந்த மதுரையில், அதை மீண்டும் தொடங்கி, நான்காவது சங்கமாக நடத்தி வந்தார். மதுரையின் பெருமை சங்கத்தினால் மீண்டும் உயர்ந்து விட்டது. அதை நினைத்து நினைத்து என் உள்ளம் உருகுகிறது" என்று சொல்லிச் சொல்லி, அன்று முழுவதும் எந்த வேலையிலும் ஈடுபடாமல், தேவரவர்களின் குணங்களைப் பற்றிப் பேசுவதிலும் நினைப்பதிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்.

தேவருக்குப் பிறகு, மதுரைத் தமிழ் சங்கத்தில் துணைத் தலைவராக இருந்த திரு டி.எஸ்.சுப்பிரமணிய ஐயர் அதன் தலைவரானார். அவர் தமிழில் நல்ல பயிற்சியுள்ளவர். தமிழ்ச் சங்கத்தின் வேலைகளை மிக்க ஊக்கத்துடன் கவனித்து வந்தார். ஆண்டு விழாக்கள் நடக்கும் போதெல்லாம் ஆசிரியருக்கு அழைப்பு வரும். அவர் சென்று கலந்து கொண்டு விழாவைச் சிறப்பிப்பார்.

### சேதுபதி தமிழ்ச்சங்கத் தலைவர் ஆனது

பாண்டித்துரைத் தேவருக்குப் பிறகு மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக இருந்த டி.எஸ்.சுப்பிரமணிய ஐயரும் காலமாகிவிட்டார். அதன் பிறகு அதற்குத் தக்க தலைவர் ஒருவர் வேண்டுமே என்ற கவலை சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு உண்டாயிற்று. இராமநாதபுரம் அரசராக இருந்த இராஜ ராஜேசுவர சேதுபதி அவர்களே தலைவராக இருந்தால் நல்லது என்று கருதினார்கள். ஆனால் அந்தச் செய்தியை அவருக்குச் சொல்லி, ஒப்புக் கொள்ளும்படியாகச் செய்வது மிகவும் கடினமான காரியம் என்று பலரும் நினைத்தார்கள். ஆசிரியப் பெருமானுக்கு இச்செய்தி எழுதினார்கள். ஆசிரியர் சேதுபதி மன்னருக்கு ஒரு கடிதம் எழுதி, "எப்படியாவது தமிழ்ச் சங்கத்தின் தலைவராகத் தாங்கள் இருந்து தமிழை வளர்க்க வேண்டும்; முற் காலத்தில் அரசர்கள் தமிழை ஓம்பிப் பாதுகாத்தார்கள். அதனால் அவர்கள்



இராஜ ராஜேசுவர சேதுபதி

புகழும் புலவர்கள் பெருமையும் நிலைத்து நிற்கின்றன'' என்று எழுதினார். ஏதேனும் ஒரு சங்கத்தின் தலைவராக இருந்தால் தம்முடைய சம்ஸ்தான வேலைகளுக்கு இடையூறாக இருக்குமென்று சேதுபதி மன்னர் தயங்கினார். ஆனாலும் ஆசிரியரிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்து அவரது விருப்பத்தை மறுக்க முடியாமல், அவருடைய வற்புறுத்தலுக்கிணங்கி அந்தப் பதவியை ஏற்றுக்கொண்டார். பல காலம் அதன் தலைவராக இருந்து விளங்கினார். திரு இராஜ ராஜேசுவர சேதுபதி அவர்களுக்குப் பிறகும் பல காலம் சேதுபதி மன்னர்களே மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் தலைவர்களாக இருந்து வந்தார்கள்.

## தமிழ்ப் பேரகராதி

சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஒரு தமிழ்ப் பேரகராதியை வெளியிட வேண்டுமென்று அக்கழகத்தினர் முயற்சி செய்தார்கள் அதற்காக ஒரு குழுவையும் நியமித்தார்கள். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பிரதிநிதியாகப் பாண்டித்துரைத் தேவர் அக்குழுவில் இருந்தார். அவர் காலமான பிறகு தக்க ஒருவரை அவரிடத்தில் நியமிக்க வேண்டுமென்று எண்ணினர். அதற்கு ஏற்றவர் ஆசிரியப்பிரானே என்ற எண்ணம் தோன்றியது. ஆகவே ஆசிரியரையே அந்தக் குழுவில் ஓர் உறுப்பினராக நியமித்தார்கள்.

தமிழ் அகராதிக் குழு 1913-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் தன் காரியாலயத்தை மதுரையில் அமைத்துக் கொண்டது. ஜே.எஸ். சாண்ட்லர் (*Rev.J.S.Chandler*) என்னும் பாதிரியார் அதற்குத் தலைவராக இருத்தார். அவர் சென்னைக்கு வரும் போதெல்லாம் தியாகராஜ விலாசத்திற்கும் வந்து, ஆசிரியரைப் பார்த்து உரையாடி, அவரது நூல் நிலையத்தைப் பார்த்து மகிழ்ந்து போவார். அகராதி சம்பந்தமாக என்ன என்ன பணிகளைச் செய்ய வேண்டுமென்று அடிக்கடி ஆசிரியரையே ஒரு தகுதியான பண்டிதரைச் சிபாரிசு செய்யச் சொன்னார். அதன்படி திரு மு.இராகவையங்கார் பெயரை ஆசிரியர் பரிந்துரை செய்து மதுரைக்கு அனுப்பினார். மு.இராகவையங்காரும் அப்பணியை 1-2-13இல் ஒப்புக்கொண்டு அகராதி வேலையைக் கவனித்து வந்தார்.

# 20. பல வேறு முயற்சிகள்

ஆசிரியப்பெருமானுடைய குமாரர் திரு.கல்யாணசுந்தர ஐயருக்கு ஐந்து பெண்கள். அவருடைய மூத்த பெண் சௌ.சரஸ்வதியின் திருமணம் 1912-ஆம் வருஷம் ஜூன் மாதம் 23-ஆம் தேதி ஆசிரியர் இல்லமாகிய தியாகராஜ விலாசத்தில் சிறப்பாக நடைபெற்றது. ஆசிரியர் சென்னைக்கு வந்த பிறகு அவர்களுடைய குடும்பத்தில் நடைபெற்ற முதல் மங்களகரமான திருமணம் அது.

பல பெரிய மனிதர்கள் வந்து திருமணம் விசாரித்துச் சென்றார்கள். அதற்குத் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் மிகப் பேருதவி செய்தார். ஆதீனத்திலிருந்து ஒரு தம்பிரான் வந்திருந்தார். தேங்காய், பழம், இலை, காய்கறிகள் முதலிய கல்யாணத்திற்கு வேண்டிய பண்டங்களை எல்லாம் திருவாவடுதுறையிலிருந்தே அனுப்பி வைத்தார்கள். பெரும் தமிழ்த் தொண்டாற்றி வருகிற ஐயர் அவர்களுக்கு எத்தனை உபகாரம் செய்தாலும் போதாது என்று பண்டார சந்நிதிகளே எண்ணி அவற்றை அனுப்பினார். தாம் பயின்ற திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து தமக்குக் கிடைக்கும் நன்மைகளை அடிக்கடி எடுத்துச்சொல்வது ஆசிரியர் வழக்கம். அவர் கூறும் நன்மைகளில் இதுவும் ஒன்றாக அமைந்தது.

### சோமசுந்தர பாரதியார் பட்ட சிரமம்

தூத்துக்குடியில் வீரபாண்டியக் கவிராயர் என்ற புலவர் ஒருவர் இருந்தார். அவரது வீட்டில் பழைய ஏட்டுச்சுவடிகள் இருப்பதாக ஆசிரியருக்குச் செய்தி தெரிந்தது. அது சம்பந்தமாக அவரது வீட்டை விசாரித்து அங்கு ஏதேனும் பழைய சுவடிகள் கிடைக்குமா எனத் தெரிந்து எழுதுமாறு தூத்துக்குடியில் வக்கீலாக இருந்த திரு சோமசுந்தர பாரதியாருக்கு ஆசிரியர் கடிதம் எழுதினார்.

அவரும் அந்தக் கவிராயர் வீட்டிற்குச் சென்று சில ஏடுகளைப் பார்த்தார். ஏடுகளைப் பார்க்கத் தனியே ஓர் ஆற்றல் வேண்டும். அவர் சிலவற்றை எடுத்துப் பார்ப்பதற்குள்ளேயே மிகவும் சிரமப்பட்டுவிட்டார்.



சோமசுந்தர பாரதியார்

அவரே தமக்கு ஏற்பட்ட தொல்லையை ஒரு கடிதத்தில் எழுதினார். "இரண்டு மணி நேரத்திற்குள் நான் பட்ட தொல்லையை நினைக்கிறபோது, தாங்கள் ஆயுள் முழுவதும் அத்தகைய உழைப்பை ஏற்றுக்கொண்டீர்களே; உங்களை எப்படிப் பாராட்டுவது?" என்று எழுதினார். அவர் அனுப்பியிருந்த ஏடு களில் சிறப்பான நூல் எதுவும் இல்லா மையினால் அது பற்றி ஆசிரியர் மேலே முயற்சி செய்யவில்லை. அவற்றில் பெரும் பாலும் கணக்குச் சுருணைகளும் முன்பே வெளியான நூல்களுமே இருந்தன.

### அகநானூற்றைப் பதிப்பிக்காமை

சங்க நூல்களைத் தமிழ் உலகத்திற்கு அறிமுகப்படுத்தி, புறநானூறு முதலியவற்றைத் திருத்தமான முறையில் ஆசிரியர் பதிப்பித்திருப்பதைப் பார்த்த அன்பர்கள் சங்கநூல் யாவற்றையும் ஆசிரியரே பதிப்பிக்க வேண்டு மென்று விரும்பினார்கள். யாழ்ப்பாணத்திலிருந்து திருத.கைலாசம்பிள்ளை என்பவர் ஆசிரியர் அகநானூற்றைப் பதிப்பிக்க வேண்டுமென்று ஒரு கடிதம் எழுதினார். அவ்வாறு பதிப்பித்தால் சென்னையில் உள்ள நாவலர் அச்சுக் கூடத்தில் அகநானூறு 10 பாரங்களுக்கு எவ்வித அச்சுக் கூலியும் வாங்காமல் அச்சிட்டுத் தருவதாக எழுதினார். என்றாலும் ஆசிரியர் அதனை வெளியிடவில்லை. பதிப்பிப்பதற்கு வேண்டிய பல ஆராய்ச்சிக் குறிப்புக்கள் எல்லாம் அவரிடம் இருந்தன. என்றாலும் வேறொருவர் அச்சிடுவதற்கு முயல்கின்றார் என்பதை அறிந்து அதை அச்சிடவில்லை. பிறர் செய்வதையே தாமும் செய்தல் கூடாது என்று அதனை அவர் பதிப்பிக்கவில்லை. அவர் பதிப்பித் திருந்தால் அந்நூல் மிகச் சிறந்த முறையில் அமைந்திருக்கும். "மற்றவர் அச்சிட்டால் என்ன? உங்களுடைய பதிப்புக்கு உள்ள மதிப்பு அவற்றிற்கு வருமா?" என்று அன்பர்கள் வற்புறுத்தியும் ஆசிரியர் இணங்கவில்லை.

### ஆசிரியப்பிரான் தைரியம்

1910-ஆம் ஆண்டு திராவிட பாஷா சங்கம் (*Dravidian Board of Studies, Madras University*) கூட்டம் சென்னையில் நடைபெற்றது. அதில் ஆசிரியரும் உறுப்பினர். ஆகையால் அவர் அக்கூட்டத்திற்குப் போயிருந்தார்.



பி.எஸ்.சிவசாமி ஐயர்

"தமிழ்ப் பண்டிதர்கள் ஏதேனும் ஒன்றைப் படித்த பின்னர் அதன் கருத்தைத் தெளிவாகப் பாகுபாடு செய்து சுருக்க மாகவும் அழகாகவும் பிரசுரிக்கவும், பிரசங்கம் செய்யவும் ஒரு தனிப் பயிற்சி அளிக்கவேண்டும்" என்கிற ஒரு தீர் மானத்தின் மீது பலர் ஆங்கிலத்தில் பேசி னார்கள். முடிவில் அத்தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு முன் அந்தக் கூட்டத் திற்குத் தலைமை வகித்த திரு பி.எஸ். சிவசாமி ஐயர், "அதெல்லாம் சரிதான். நாம் தமிழைப் பற்றிப் பேசுகிறோம். தமிழ்ப் புலவர்களைப் பற்றிப் பேசு கிறோம். புலவர்களுக்குள்ளே பெரும் புலவராக விளங்கும் ஐயர் அவர்களிடம் இது பற்றிச் சொல்லவில்லையே! அவர் களுக்கு அனுபவத்தில் பல கருத்துகள் தெரிந்திருக்கும் அவர்களுடைய அபிப்பிராயத்தையும் கேட்கலாமா?" என்று சொன்னார்.

அதன்மேல் ஆசிரியர் தம்முடைய கருத்தைத் தெரிவிக்க எழுந்தார்கள். "தமிழைப் படிக்க ஆரம்பித்தது முதற்கொண்டு, புலவர்கள் தங்கள் உயிரையே அர்ப்பணம் செய்து, தமிழ்த்தாயை வழிபாடு செய்த படித்து வருகிறார்கள். நூல்களைப் பயிலும் முறையும், பயிற்றுவிக்கும் முறையும் பழைய நூல்களில் நன்கு சொல்லப் பெற்றிருக்கின்றன. பண்டிதர்கள் பல நூல்களைப் படித் திருக்கிறார்கள். பல புலவர்களுக்குப் பல நூல்கள் பாராமல் சொல்லவரும். ஆங்கிலம் படித்தவர்கள் கட்டுரை எழுதுகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் தாமே பல நூல்களையும் படித்துச் செய்திகளைத் தொகுப்ப தில்லை; நன்கு படித்த புலவர்களிடமிருந்து சேகரித்த செய்திகளை வைத்துக்கொண்டே அவர்கள் கட்டுரை எழுதுகிறார்கள். எனக்கு இப்படிச் செய்த பலரையும் தெரியும். அவ்வாறு கட்டுரை எழுதத் தெரிந்த பலருக்கு ஆழமான இலக்கண இலக்கியப் பயிற்சி இருப்பதில்லை. புலவர்கள் கொஞ்சம் பழகினால் போதும்; கட்டுரை எழுதிவிடலாம். ஆனால் பிறரோ ஆழமான தமிழ்ப்புலமையைப் பெற எத்தனை ஆண்டுகள் படித்தாலும் சாத்தியமாகாது. எனவே, புலவர்களைக் குறைவாக எண்ணி, அவர்களது மதிப்பைக் குறைத்து விடக்கூடாது" என்று வற்புறுத்திச்

சொன்னார். ஆசிரியப்பிரான் தம் கருத்தை எடுத்துச் சொன்னவுடன், அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றாமல் விட்டு விட்டார்கள்.

அந்தக் கூட்டம் நடந்தபோது திரு வி.கிருஷ்ணசாமி ஐயர் உதக மண்டலத்தில் இருந்தார். ஒரு வாரத்திற்குப்பின் சென்னைக்குத் திரும்பினார். பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற கூட்டத்தைப் பற்றி அவர் கேள்விப்பட்டார்.

ஆசிரியர் ஒருமுறை அவரைப் பார்க்கச் சென்றபோது, "வாருங்கள்" என மகிழ்ச்சியுடன் வரவேற்றார். "சிவசாமி ஐயர் எல்லாவற்றையும் சொன்னார். தமிழ்ப் பண்டிதர்களை இப்படிக் குறைவாக மதித்துப் பேசியவர்கள் மத்தியில் நீங்கள் அப்படிச் சொல்லவில்லையென்றால் வாயடங்கி இருக்கமாட்டார்கள். உங்கள் தைரியத்தை நான் மெச்சுகிறேன். இது அல்லவோ மனுஷ்யத் தனம்?" எனக் கூறிப் புகழ்ந்தார். இந்தச் செய்தியைக் கேட்ட இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவான் திரு மு.இராகவையங்கார் அசிரியரை, "புலவர் மானம் காத்தவர்" என்று எழுதினார்.

### பல்கலைக்கழகத்தில் தமிழ் இடம் பெற்றது

பாலைக்காட்டில் பா.ஐ.சின்னசாமி பிள்ளை என்பவர் இருந்தார். அவர் தமிழன்பும் தமிழ் நூற் பயிற்சியும் உடையவர். அங்கே ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவியிருந்தார். அதற்கு அவரே தலைவர்.

பல்கலைக் கழகம் அப்போது கல்லூரிகளில் தமிழைக் கட்டாயப் பாடமாக வைக்க வேண்டுமா என்று ஆலோசித்தது. கணிதம், விஞ்ஞானம், பொருளாதாரம் முதலிய துறைகளில் மாணவர்களுக்கு அதிகப் பயிற்சி இருத்தல் அவசியம். அப்போது தான் நாடு முன்னேறும். எனவே தமிழ்ப் பாடம் கட்டாயமாக இருக்க வேண்டியது இல்லை; இவ்வகுப்புக்கு எடுத்துக்கொள்ளும் நேரத்தைப் பிற துறைகளுக்கு ஒதுக்கலாம் என ஏற்பாடாகியிருந்தது.

இதனைத் திரு சின்னசாமி பிள்ளை வன்மையாக ஆட்சேபித்து அரசாங்கத்திற்குக் கடிதம் எழுதினார். மாணவர்கள் தாய் மொழியாகிய தமிழைப் பயில்வது மிகவும் இன்றியமையாதது என்பதை எடுத்துக்காட்டினார். "சொல்லித் தரும் புலவர்கள், காலத்திற் கேற்பப் புதுமுறையில் சொல்லித் தருவது இல்லை என்று காரணம் கூறுவது சரியல்ல. புதுமுறையில் பழம்பெரும் நூல்களை எல்லாம் பதிப்பித்து வரும் ஐயர் அவர்கள் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக இருக்கிறார். அவரது படிப்பின் பரப்பும், ஆழமும் எவர் மனத்துக்கு எட்டாதவை. அவரிடம் பாடம் கேட்டால் தமிழினால் பயன் இல்லை என்று யாரும் நினைக்க

மாட்டார்கள். மற்றப் பாடங்களை எடுக்கிற ஆசிரியர்கள் கூட, ஓய்வு கிடைக்கும் போது, ஐயர் அவர்களுடைய வகுப்புக்குச் சென்று பாடம் சொல்லும் முறையைக் கவனித்து இன்புறுகிறார்கள். இதை நான் நன்கு அறிவேன். ஆகையால், தமிழ்ப் பண்டிதர்கள் எல்லோரும் மோசமானவர்கள் என்றும், விஷயம் தெரியாதவர்கள் என்றும் எண்ணி இப்படிச் செய்தல் கூடாது. ஐயர் அவர்கள் ஐரோப்பாவில் பிறந்திருப்பாரேயானால் மிக உயர்ந்த நிலையை அடைந்திருப்பார்கள்'' என்றெல்லாம் மிக விரிவாக எழுதினார்.

அதனால் தமிழுக்கும் பல்கலைக்கழகத்தில் இடம் கிடைத்தது. தமிழைத் தனியாகக் கற்றுக்கொடுக்கும் முறை மாற்றப் பெறவில்லை. மற்றப் பாடங்களுக்கு இருந்த மதிப்பு அதற்கும் ஏற்பட்டது.

### நற்றிணைப் பதிப்பு

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் என்பவர் கும்பகோணத்தில் இருந்தார். அவர் நற்றிணையை ஆராய்ந்து பதிப்பிக்கலானார். அவ்வப்போது தமக்கு ஏற்படும் ஐயங்களை ஆசிரியருக்கு எழுதி விளக்கம் தெரிந்து கொண்டார். நற்றிணையை வெளியிட வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு இருந் தாலும், நாராயணசாமி ஐயர் அதில் ஈடுபட்டிருந்ததனால், ஆசிரியர் அதைப் பதிப்பிக்க முயலவில்லை. ஆனாலும் அவருக்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்தார். நாராயணசாமி ஐயர் ஒவ்வொரு பாட்டுக்கும் பொழிப்புரை எழுதி வெளியிட்டார். அதன் முகவுரையில், ''மஹாமஹோபாத்தியாய ப்ரம்மஸ்ரீ உ.வே.சாமிநாதையரவர்கள் இரண்டு பிரதிகள் அனுப்பினார்கள். அவற்றோடு ஒப்புநோக்கிய பின் மதுரைத் தமிழ்ச் சங்கம் சென்று அங்குள்ள பிரதிகளோடு ஒப்பு நோக்கினேன்'' என்று எழுதியிருக்கிறார். பிரதியை உதவியதோடு தாம் சேகரித்து வைத்திருந்த குறிப்புக்களையும் அவருக்கு ஆசிரியப் பிரான் உதவினார்.

### மஞ்சள் நூலும், கறுப்பு நூலும்

1914-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் தாராபுரத்தில் இருந்த ஆறுமுகம் பிள்ளை என்பவர், அந்தத் தாலூக்காவில் முதலியார் பாளையம் என்னும் ஊரில் நாச்சிமுத்துப் புலவர் என்பவரிடத்திலும், கந்தசாமிக் கவிராயர் என்பவரிடத்திலும் 'வளையாபதி' என்னும் காவியம் இருப்பதாகக் கேள்விப் பட்டேன் என்று ஆசிரியருக்கு எழுதியிருந்தார். அப்படியானால் அந்தக் காவியத்தை வருவித்துப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டாயிற்று. ஆறுமுகம் பிள்ளைக்குப் பணம் அனுப்பி, அந்த ஏட்டுச் சுவடியைப் பெற்று அனுப்ப வேண்டுமென்று எழுதினார். ஆனால் அவர் அனுப்பவில்லை. இப்படி ஆசை காட்டிப் பணம் பறித்தவர் பலர்.

பல காலம் கழித்து, நான் ஆசிரியப்பிரானுடன் பழைய கோட்டைக்குப் போயிருந்தேன். அங்கிருந்த பட்டக்காரராகிய நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியாருடன் ஆசிரியர் பேசிக் கொண் டிருந்தார். "நான் பல பழைய நூல்களைப் பதிப்பித்து வருகிறேன். பல நூல்கள் கிடைக்கவில்லை. ஐம்பெருங்காப்பியங்களில் வளையாபதியும் குண்டலகேசியும் அகப்பட வில்லை" என்றார். உடனே அந்தப் பட்டக்காரர், "வளையாபதியா? அது இருக்கிறதே!" என்று சொன்னபோது ஆசிரியருக்கு உவகை உண்டாயிற்று. "அதை நான் பார்க்க முடியுமா?" என்று கேட்டார். "தாராளமாகப் பார்க்கலாம்" என்று சொல்லித் தம் இளவலைக் காருடன் ஆசிரியப்பிரானை முதலியார் பாளையத்துக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார். அந்த ஊருக்குப் போனோம் அப்போது நாச்சிமுத்துப் புலவர் காலமாகிவிட்டார். அவருடைய குமாரர் இருந்தார். ஆசிரியர் அவரது வீட்டிற்குச் சென்று, "உங்கள் தந்தையார் வைத்திருந்த ஏட்டுச்சுவடிகள் இருக்கின்றனவா? அவற்றில் வளையாபதி உண்டா?" என்று கேட்டார்.

அவர் உள்ளே இருந்து இரண்டு கட்டு ஏட்டுச்சுவடிகளைக் கொண்டு வந்து போட்டார். அவற்றில் சில மஞ்சள் நூலால் கட்டப் பெற்று இருந்தன. சிலவற்றைக் கறுப்பு நூலால் கட்டியிருந்தார்கள். "ஏன் இப்படி இரண்டு விதமான நூல்களால் கட்டியிருக்கிறார்கள்?" என்று கேட்டதற்கு, "மஞ்சள் நூலால் கட்டப் பெற்றவை எல்லாம் இசைக் கவிகள். கறுப்பு நூலால் கட்டப் பெற்றவை வசைக் கவிகள்" என்று சொன்னார். அதற்கு மேல் அவருக்கு ஒன்றும் சொல்லும் ஆற்றல் இல்லை. வளையாபதி அங்கு இருக்கிறதா என்று கேட்டபோது ஒரு சின்னச் சுவடியை எடுத்துக் கொடுத்தார் அவர். அது பழைய காப்பியமாகிய வளையாபதி அன்று. வைசிய புராணத்திலுள்ள 'வளையாபதிச் சருக்கம்' என்பதுதான் அது. கொங்குவேளாளர்களைச் சிலர் தாழ்வாகக் கூறினார்களாம். அவர்கள் பெருமையை எடுத்துக்காட்ட அந்த ஏட்டுச்சுவடியைப் புலவர் எழுதி வைத்தார் என்று சொன்னார். கடைசியில் வளையாபதி கிடைக்காமல் ஏமாற்றத்தோடு திரும்பிவர வேண்டியிருந்தது. அந்த முயற்சி மாயமான் வேட்டையாக முடிந்தது.

## 'அப்புறம் எப்படியோ?'

ஒருமுறை, 1916-ஆம் ஆண்டு மே மாதம் 6,7-ஆம் தேதிகளில் திருக் காட்டுப்பள்ளிக்கு அருகில் உள்ள இளங்காடு என்னும் சிற்றூரில் நற்றமிழ்ச் சங்க ஆண்டு விழாவுக்கு ஆசிரியப்பெருமானைத் தலைமை தாங்க அழைத் திருந்தார்கள். ஆசிரியர் அந்த அழைப்பை ஏற்று அங்கே போனவுடன்

எல்லோரும் மிகவும் அன்புடன் வரவேற்றார்கள். அங்குள்ள கள்ளர் வகுப்பினர் நல்ல தமிழ் அறிவு உடையவர்கள். வரிசையாக நின்று ஆசிரியப் பெருமானை அவர்களைக் கும்பிடுகிறேன் என்று ஒருவர் சொல்லி விழுந்து வணங்கினார். அப்படியே மற்றவர்களும் வரிசையாக விழுந்து வணங்கி னார்கள். அதைக் கண்டு ஆசிரியப்பெருமான் வியந்தார்.

அவர்களில் ஒரு வயோதிகர் நெடுஞ்சாண்கிடையாகக் கீழே விழுந்து வணங்கி எழுந்தார். "ஐயா அவர்கள் வந்ததைத் தமிழ்த் தெய்வமே இங்கே வந்துள்ளதாக நினைக்கிறோம். நாங்கள் எழுதிய விண்ணப்பத்தை ஏற்றுத் தாங்கள் இங்கே வந்தீர்களே! இப்போது வராவிட்டால் அப்புறம் எப்படியோ?" என்று சொன்னபோது எல்லோரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். வஞ்ச நெஞ்சம் இல்லாத அவரது பேச்சில் அன்பு இருந்தது. ஆனால் மற்றவர்களோ தவறாக எண்ணிக் கொண்டார்கள்.

### *ரமண மகரிஷிகளின் தரிசனம்*

1915-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 10ஆம் தேதி திருவண்ணா மலையில் ரமணாசிரமத்தில் ஆண்டு விழா நடைபெற்றது. அதற்குத் தலைமை தாங்க வேண்டுமென்று ஆசிரியருக்கு அழைப்பு அனுப்பினார்கள். அங்குச் செ ன்றால் ஸ்ரீரமணபகவானையும் தரிசித்து நலம் பெறலாம் என்ற எண்ண த்துடன் ஆசிரியர் அதற்கு ஒப்புக் கொண்டார்.

அவ்வாறே திருவண்ணாமலை சென்று ஸ்ரீரமண மகரிஷியைத் தரிசித்தார். அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கி, "நான் ஏட்டுச் சுவடி களோடும் தமிழோடுந்தான் தொடர்பு கொண்டிருக்கிறேன். அவற்றைப் பதிப்பிப்பது ஒன்றுதான் எனக்குத் தெரியும். என்றாலும் எனக்குப் போதிய மனச்சாந்தி இல்லை. கிருபை பண்ண வேண்டும்" என்று வேண்டினார்.

ஸ்ரீ ரமண பகவான், "நீங்கள் செய்வது உலகுக்கு உபகாரமான காரியம். நீங்கள் சொந்தத்திற்கு எதையும் செய்யவில்லையே! பிறருக்குப் பயன்படும் காரியங்களைச் செய்வதில் தவறில்லை. அதுவே சிறந்த யோகம். உங்களது அரிய தொண்டால் எத்தனையோ பேர் தமிழ் அறிவு பெறுவார்கள். இதுவும் ஒருவகைத் துறவுதான்" என்று சொல்லி ஆசீர்வாதம் செய்தார்.

# 21. பலருக்கு உதவியது

*பிள்ளையவர்கள் குடும்ப உபகார நிதி*

ஆசிரியப்பெருமானுடைய ஆசிரியராகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை காலமான பிறகு அவருடைய குமாரர் சிதம்பரம்பிள்ளை கப்பூர் என்னும் கிராமத்தில் கர்ணம் வேலை பார்த்து வந்தார். தமக்குக் கிடைத்த சம்பளம் போதாமல் அவர் அவதியுற்றார். பிள்ளையவர்களின் மனைவியார் காவேரியம்மையார் இருந்தபோது ஆசிரியர் அவ்வப்போது செலவுக்குப் பணம், உடை முதலிய பொருள்களை உதவி செய்து வந்தார். அப்படியே சிதம்பரம் பிள்ளைக்கும் அவ்வப்போது செய்வது உண்டு.

ஆனால் அந்தக் குடும்பத்திற்கு நிரந்தரமான பயன் அளிக்கத்தக்கதாக ஏதேனும் ஒரு தொகை வழங்க வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டாயிற்று. அதை எண்ணிச் செட்டிநாட்டிலுள்ள சபைகளில் ஆசிரியர் தலைமை தாங்கிப் பேசும்போது அதைப் பற்றி சொல்லி வந்தார். பிள்ளை யவர்களின் புலமையையும் பிற பெருமைகளையும் விரிவாக எடுத்துச் சொல்லி, அந்தப் பெருமானின் குடும்பம் வறுமையினால் துன்புறுவது தமிழ்நாட்டின் பெருமைக்கு ஏற்றதன்று என்று எடுத்துச்சொன்னார்.

பிள்ளையவர்கள் குடும்ப உபகார நிதி என்பதாக வசூலை ஆரம்பித்து வைத்து, தாமே நூறு ரூபாய் அனுப்பி வைத்தார். மதுரை மு.ரா.கந்தசாமிக் கவிராயரும், மகிபாலன்பட்டி கதிரேசச் செட்டியாரும் (பண்டிதமணி) அந்தக் குழுவிற்குச் செயலாளர்களாக இருந்து நிதி திரட்டுவதில் ஊக்கம் காட்டினார்.

பிள்ளையவர்களது குடும்ப உபகார நிதிக்கு ஆயிரத்திற்கும் மேற்பட்ட ரூபாய் சேர்ந்தது. மாயூரத்தில் ஒரு விழாவை அமைத்துப் பலரும் அறிய அந்தக் குடும்பத்திற்கு அந்த நிதியைச் சேர்க்க வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு இருந்தது. ஆனால் எந்தக் காரணத்தினாலோ அந்தக் கூட்டம் நடைபெறவில்லை. கடைசியில் திருவாவடுதுறை மடத்திலேயே அம்பலவாண தேசிகர் முன்னிலையில் அந்தத் தொகையைப் பிள்ளையவர்களுடைய குமாரராகிய சிதம்பரம் பிள்ளையிடம் சேர்த்தனர். எதிர்பாராத வகையில் தமக்குக் கிடைத்த நன்மையை எண்ண அவர் உள்ளம் பூரித்தார். ஆசிரியப் பிரான் காலில் விழுந்து வணங்கினார்.

### திருக்காளத்தியில் சஷ்டியப்த் பூர்த்தி

ஆசிரியப்பெருமான் பிறந்த ஆனந்த வருஷம் மாசி மாதம் 9-ஆம் தேதி மறுபடியும் 20-2-1915இல் வந்தது. பொதுவாகச் சஷ்டியப்த பூர்த்தியைச் சிறப்பாகச்செய்வது பலருடைய வழக்கம். ஆசிரியப்பெருமானது சஷ்டியப்த பூர்த்தியை நல்லமுறையில் நடத்த வேண்டுமென்று அன்பர்கள் விரும்பினார்கள். திருவாவடுதுறை ஆதீன கர்த்தர் வற்புறுத்தி, எந்தக் காரியத்தையும் குறைக்காமல் நல்ல முறையில் செய்ய வேண்டுமென்று சொன்னார்.

ஆசிரியப்பெருமான் அவ்வாறு செய்து கொள்வதில் விருப்பம் இல்லாதவராக இருந்தார். "எந்த விதமான படாடோபமும் வேண்டாம். காளஹஸ்தி சென்று சுவாமி தரிசனம் செய்து வருகிறேன். சிவபெருமான் திருவருள் இருந்தால் போதுமானது" என்று சொல்லித் தம் மனைவியையும் அழைத்துக்கொண்டு அந்தத் தலத்திற்குச் சென்றார். அங்குள்ள பெருமானுக்கு அபிஷேகம் செய்து, கிரிப்பிரதட்சிணம் செய்து வந்தார். தங்களுடைய அவா நிறைவேறவில்லையே, ஆசிரியப்பெருமானைப் பாராட்டுவதற்குரிய சந்தர்ப்பத்தை இழந்துவிட நேர்ந்ததே என்று பல அன்பர்கள் வருந்தினார்கள்.

ஆசிரியப்பெருமான் திருக்காளத்தி சென்றபோது அவருடைய மருமகளுக்குப் பேறுகாலம். அவர் குமாரர் கல்யாணசுந்தரையருக்கு அதுவரை ஐந்து பெண்கள் பிறந்திருந்தார்கள். எனவே இம்முறை யாவது தமக்குப் பேரன் பிறக்க வேண்டுமென்றும், பேரன் பிறந்தால் காளஹஸ்திக் கோவிலில் ஒரு மணி கட்டுவதாகவும் அசிரியர் அங்கே பிரார்த்தனை செய்து வந்தார்.

காளஹஸ்தியிலிருந்து திரும்பி வந்த சில நாட்களுக்கெல்லாம் அவருக்குப் பேரன் பிறந்தான். தம்முடைய பாட்டனார் பெயராகிய வேங்கட சுப்பிரமணியன் என்ற பெயரை வைத்தார். காளஹஸ்தி சென்று மணியும் வாங்கிக் கட்டினார். அந்தப் பேரர் நல்ல உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்றிருக்கிறார். க.சுப்பிரமணியன் என்று வழங்கும் அவர் இப்போது திருவான்மியூரில் உள்ள ஐயரவர்களின் நூலகத்தின் காப்பாளராக இருந்து வருகிறார்.

### சுவடிகளைத் தொகுக்க உதவியது

சென்னை அரசாங்கத்தாருக்குப் பழைய ஏட்டுப் பிரதிகளை எல்லாம் தொகுத்து பாதுகாக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. அதற்காக ஒரு குழுவை நியமித்தார்கள். பலவிடங்களுக்குச் சென்று ஏட்டுச்சுவடி களைப் பல பேர்களிடமிருந்து சேகரிக்கப் பலரை அனுப்பினார்கள். 1916-ஆம் ஆண்டு செப்டம்பரில் இந்த முயற்சி ஆரம்பித்தது. மாவட்டக் கலெக்டர்களுக்கும், அரசாங்க அதிகாரிகளுக்கு ஏட்டுச்சுவடிகளைச்சேகரிக்க

உதவ வேண்டுமென்று உத்தரவும் அனுப்பப்பெற்றது அந்த வேலையில் தக்க யோசனை கூற வேண்டுமென்று ஆசிரியப்பெருமானை அரசாங்கத்தார் கேட்டு எழுதியிருந்தார்கள். ஆசிரியரும் அன்போடு அந்தக் குழுவின் பணி சிறப்பாக அமைவதற்கு வேண்டிய வழிவகைகளை வகுத்துத் தந்தார். எங்கெங்கே சுவடிகள் கிடைக்கும் என்பதை அறிந்தவராதலின் அவ்விடங்களில் சென்று சுவடிகளைத் தொகுக்கச் சொன்னார். பல சுவடிகள் சேர்ந்தன. ஆயினும் பல பேர் தம்மிடமுள்ள சுவடிகளைக் கொடுக்க மனம் இல்லாமல் மறைத்து விட்டார்கள். ஏதோ புதையல் இருக்கும் இடத்தைப் பற்றிய இரகசியம் சுவடிகளில் இருப்பதாகச் சிலர் எண்ணினார்கள்!

## திருமானூர்க் கிருஷ்ணையர் மறைவு

ஆசிரியருடன் பல காலமாக இருந்து நூல்பதிப்பு வேலைகளுக்கு மிகவும் உதவியவர் திருமானூர்க் கிருஷ்ணையர் என்பவர். எந்தக் காரியத்தையும் துணிவுடன் செய்து வருவார். ஆசிரியப்பெருமானுடைய மனநிலையை அறிந்து எந்த வேலையையும் செய்வார். அவ்வப்போது தியானத்தில் அமர்ந்துவிடுவார். சிவபக்தி மிக்க அவரிடம் ஆசிரியருக்குத் தனி அன்பு ஏற்பட்டது. அவருடைய பெயரை ஆசிரியப்பெருமான் தாம் பதிப்பித்த நூல்களின் முகவுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

1912-ஆம் வருஷம் மாளய அமாவாசைத் தினத்தன்று அவர் காலமானார். அதனை அறிந்த ஆசிரியர் மிகவும் துன்புற்று, "நல்ல பொருள் ஒன்று போய் விட்டது. அத்தகைய நல்ல உள்ளம் படைத்த மற்றொருவரைப் பார்ப்பது மிகவும் அரிது" என்று சொல்லி மிகவும் வருந்தினார். திருமானூர்க் கிருஷ்ணையர் காலமானபோது அவரது பிராயம் 55.

## பாடப்புத்தகத்தில் பிழைகள்

1915-ஆம் வருஷம் மெட்ரிகுலேஷன் தேர்வுக்கு ஒரு தமிழ்ப் பாடப் புத்தகம் வெளியாயிற்று. அதைப் பதிப்பித்தபோது சரியாகக் கவனிக்க வில்லை என்ற குறைபாட்டைப் பலர் எழுப்பினார்கள். அது சம்பந்தமாகப் பாட புத்தகக் குழுவினர் சரியானபடி உணர்ந்து கொள்ள வேண்டுமென்று ஆசிரியப்பெருமானுக்கு எழுதினர். ஆசிரியர் அதிலுள்ள பிழைகளை எடுத்து எழுதியபோது அந்தக் காலத்தில் சிண்டிகேட் உறுப்பினராக இருந்த மார்க் ஹண்டர் துரை என்பவர் அவற்றை மறுத்தார். தமிழ்ப்புலவர்களுக்கு உரை நடையைப் பற்றி என்ன தெரியும் என்று அலட்சியமாக எழுதினார். ஆனாலும் ஆசிரியப்பெருமான் தக்க காரணங்களை எழுதி அந்தப் புத்தகத்திலுள்ள குறைபாடுகளை எல்லாம் எடுத்துக்காட்டினார். இரண்டு

மாதங்களுக்கு மேல் இந்தக் கடிதப் போக்குவரத்து நடந்தது. கடைசியில் ஆசிரியப்பெருமான் சொன்னதே சரி என்று முடிவாயிற்று.

### மயிலைநாதர் உரைப் பதிப்பு

நன்னூலுக்கு இப்போதுள்ள உரைகளில் மிகப் பழையது மயிலை நாதர் உரை. மாதவச் சிவஞான முனிவரது உரையைப் பலரும் அறிவார்கள். ஆனால் அவரால் மேற்கோள் காட்டப்பெறும் செய்திகள் எல்லாம் மயிலை நாதர் உரையில் உள்ளன.

முதல்முதலாக நன்னூலுக்கு உரையெழுதிய அவருடைய மதிப்பை யாவரும் உணர வேண்டுமென்று எண்ணி அந்த நூலை ஆராயத் தலைப் பட்டார். பலவிடங்களில் தேடிக் கொண்டு வந்திருந்த ஏட்டுச் சுவடிகளை வைத்துக்கொண்டு பார்த்து ஆராய்ச்சி செய்து வந்தார். பிறகு அதனை நல்ல முறையில் அச்சிட்டார்.

### மனைவியார் மறைவு

1917-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஆசிரியப்பெருமானுடைய மனைவியாருக்கு ஜுரம் உண்டாயிற்று. வரவர உடம்பு மிகவும் மெலிந்து வந்தது. அப்போது ஆசிரியர் சென்னையில் இருக்கவில்லை. மணலூர் என்ற ஊரில் பாரதத்தைப் பதிப்பித்த ம.வீ.இராமானுஜாசாரியாரின் மகள் திருமணத்திற்குப் போயிருந்தார். தம்முடைய மனைவியாருக்கு உடல் நலம் இல்லை என்பதைத் தெரிந்துகொண்டு, திருமணத்திற்கு முன்பே சென்னைக்கு வந்தார். டாக்டர் கோமன் என்னும் பெயர்பெற்ற மருத்துவரை அழைத்து வந்து பார்த்தும், குணமாவது சிரமந்தான் என்று சொல்லி விட்டார்கள். 8-5-1917 அன்று ஆசிரியப்பெருமானுடைய மனைவியார் இறைவன் திருவடியை அடைந்தார்.

### 'திராவிட வித்யா பூஷணம்'

காசியில் 'பாரத தர்ம மகா மண்டலம்' என்ற சபை ஒன்று இருந்தது. நமது பண்பாட்டைக் காப்பாற்றும் செயல் புரிபவர்களை எல்லாம் கௌரவிக்கும் செயலை அது மேற்கொண்டு வந்தது.

ஆசிரியப்பெருமான் தமிழ்த் துறையில் செய்துவரும் தொண்டை அந்தச் சபையினர் அறிந்தார்கள். இந்தியாவில் எந்த இடத்தில் நல்ல காரியம் நடந்தாலும் அதைப் பாராட்ட வேண்டுமென்பது அந்தச் சபையினரின் கொள்கை. ஆகவே ஆசிரியப்பெருமானுக்கு ஏதேனும் மதிப்புச் செய்ய வேண்டுமென்று அந்தக் குழுவினர் விரும்பினார்கள். எனவே ஆசிரியப்

பெருமானுக்குத் 'திராவிட வித்யா பூஷணம்' என்ற பட்டத்தை அளிக்க வேண்டுமென்று தீர்மானித்து, அது சம்பந்தமாகத் திருச்சியில் இருந்த வக்கீல் திரு டி.வி.சுவாமிநாத சாஸ்திரியார் என்பவருக்கு எழுதினார்கள். அவர் ஆசிரியரிடம் படித்தவர். ஆகையால் அவர் பாரத தர்ம மகாமண்டல சபை யினருக்கு, "நீங்கள் நினைத்த காரியம் மிகவும் பொருத்தமானது" என்று எழுதி அவரே அந்தப் பட்டத்தினைப் பெற்று ஆசிரியரிடம் கொண்டு வந்து அளித்தார். எதிர்பாராத வகையில் இந்தப் பட்டம் கிடைத்தது பற்றி ஆசிரியப் பெருமான், காசி விசுவநாதருடைய திருவருள் இப்படிக் கிடைத்தது என்று சொல்லி நன்றி அறிவு பாராட்டினார்.

## பரிபாடல் வெளியீடு

எட்டுத்தொகையில் ஒன்றாகிய பரிபாடலில் 70 பாடல்கள் இருந்தன என்று தெரிவருகிறது. ஆனால் அவ்வளவும் கிடைக்கவில்லை. அதற்குப் பரிமேலழகர் உரை ஒன்றுண்டு. சில ஏட்டுச் சுவடிகள் கிடைத்தன. கிடைத்த வையும் நல்ல முறையில் அமையவில்லை. அவற்றை வைத்துக் கொண்டு பார்க்கிறபோது முதல் பாட்டின் வடிவம் தெரியாமல் சிதைந்திருந்தது. என்றாலும் முதல் பாட்டை வரையறை செய்து பொருள் தெரிந்துகொண்டு ஒருவாறு அதை வெளியிட வேண்டுமென்று ஆசிரியர் துணிந்தார். மற்ற நூல்களுக்குக் கிடைத்த உதவி அதற்குக் கிடைக்கவில்லை. பரிபாடல் என்பது பழைய செய்யுள் வடிவம். அந்தச் செய்யுளில் அமைந்த நூல்கள் வேறு இல்லை. ஆகையால் அதனைச் சரிவர ஆராய்வதற்குரிய துணை நூல்கள் எதுவும் இல்லை. அதற்கு முன்பு இருந்த பரிபாடல்களோ கிடைக்க வில்லை. பிற்காலத்தில் பரிபாடல் யாரும் எழுதவில்லை. இந்த நிலையில் தான் அந்த நூலின் ஆராய்ச்சி ஆசிரியருக்கு மிகவும் தொல்லை கொடுத்தது. இறைவன் திருவருளும், விடாமுயற்சியும் சேர்ந்து அந்த நூல் வெளிவரு வதற்குத் துணையாக இருந்தன.

1918-ஆம் வருஷம் ஜூன் மாதம் முதல் தேதி அந்த நூல் வெளியாயிற்று. முன்பே ஆசிரியர் அவர்களால் பரிபாடல் வெளியிடப் பெறும் நிலையில் இருப்பதை அறிந்து, "அது எப்போது வரும்? என்று அடிக்கடி கடிதம் எழுதிக் கேட்டுக் கொண்டிருந்தவர் இலங்கையில் இருந்த பொ.குமாரசாமி முதலியார். அவர் அந்தப் புத்தகம் வெளிவந்தபோது இருக்கவில்லை. ஆனாலும் அவருடைய குமாரர் திரு.ஸ்ரீகாந்த முதலியார் அவர்களுக்குக் கடிதம் எழுதி, பரிபாடல் புத்தகத்தை அனுப்பி, அது வெளிவருவதற்கு அவருடைய தந்தையார் மிகவும் ஆர்வம் காட்டினார் என்பதையும் குறித் திருந்தார். அவரும் மிக்க நன்றியறிவுடன் அப்புத்தகத்தைத் தந்தையாரின் நினைவுடன் சேர்த்து வைத்துக்கொள்வதாக எழுதியிருந்தார்.

## வழக்கில் சாட்சி

1917-ஆம் ஆண்டில் கும்பகோணம் சப்-கோர்ட்டில் ஆதீனத் தலைவருக்கு எதிராக ஒரு வழக்கு நடந்துகொண்டிருந்தது. அப்போது அந்த வழக்கில் அவர்களுக்கு அனுகூலமாக வேண்டுமென்று அவருடைய குணங்களைப் பாராட்டி, ஓர் அறிக்கையைச் சித்தம் செய்து, தமிழ்நாட்டில் பல ஊர்களி லிருந்த பெரிய மனிதர்களிடம் கையெழுத்து வாங்கினார்கள் அதை 'அபிட விட்' டாகக் கோர்ட்டில் சேர்க்க வேண்டுமென்பது அவர்களது எண்ணம்.

ஆசிரியப்பெருமானிடத்திலும் கையெழுத்து வாங்கவேண்டுமென்று எண்ணினார்கள். பல அச்சுப் பாரங்களைத் தயார் செய்து அவற்றில் பெரிய மனிதர்கள் நூற்றுக்கணக்கானவர்களிடம் கையெழுத்து வாங்கியிருந்தார்கள். ஆசிரியருக்கு நூற்றோடு நூற்று ஒன்றாகத் தாமும் அதில் கையெழுத்துப் போடுவதைவிட, தனியே ஒன்று எழுதிச் சமர்ப்பித்தால் வலிமையுள்ளதாக இருக்கும் என்ற எண்ணம் தோன்றியது.

ஆகவே, மடாதிபதியின் பெருமையையும், அந்த மடத்தின் சிறப்பையும், பழங்காலம் முதற்கொண்டு அங்கு நடந்து வருகிற அறச்செயல்களையும், தமிழ், வடமொழி, இசை இவற்றை வளர்ந்து வருவதையும் எடுத்துக்காட்டிச் சம்பிரதாய விரோதம் இல்லாமலும், எந்தவிதமான குறைகளையும் சொல் வதற்கு இடமில்லாமலும் அவர்கள் தம் சிவத்தொண்டினை ஆற்றி வருகிறார்கள் என்பதனை எடுத்துக்காட்டினார். அதை நீதிமன்றத்திலும் சமர்ப்பித்தார்.

அப்போது நீதிபதியாக இருந்தவர் வி.வி.விசுவநாதையர் என்பவர். அவர் தீர்ப்பு அளிக்கும்போது ஆசிரியப்பெருமானுடைய கருத்துக்களுக்கு மதிப்பளித்து அதைத் தம் தீர்ப்பிலும் குறிப்பிட்டிருந்தார்.

"ஆதீனத்தார் சார்பில் அயிரக்கணக்கான அச்சிட்ட அபிட விட்டுகள் சமர்ப்பிக்கப் பெற்றன. அவற்றையெல்லாம் பார்த்து நான் கொண்ட கருத்தைவிட, மகாமகோபாத்தியாய சாமிநாதையர் கொடுத்த தகுதிப் பத்திரந்தான் நான் முடிவு எடுக்க உண்மையாகத் துணை செய்தது. அவருடைய கருத்தில் இருந்த உண்மையை உணர்ந்து கொண்டேன். ஆகவே இந்தத் தீர்ப்பை நான் எழுதினேன்" என்று குறிப்பிட்டிருந்தார்.

# 22. பெரியோர் சந்திப்பு

## திலகர் வருகை

1918-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 30-ஆம் தேதி பாலகங்காதர திலகர் சென்னைக்கு விஜயம் செய்தார். அப்போது சிலர் ஆசிரியப்பெருமானிடம் திலகரது பெருமையை எல்லாம் எடுத்துச் சொன்னார்கள். அவர் விநாயகருடைய புராணத்தைப் பாராட்டி, நாடு முழுவதும் விநாயகப் பெருமானைக் கொண்டாடும் படியாகச் செய்த பெரியவர் என்று சொன்னார்கள். ஆசிரியரும் விநாயகப் பெருமானை வழிபடுபவர். எனவே ஆசிரியருக்குத் திலகரை நேரில் சென்று காணவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. திலகருடைய தேசபக்தியின் சிறப்பைப் பிறரால் உணர்ந்து கொண்டார்.

சில அன்பர்கள் அசிரியரைத் திலகரிடம் அழைத்துச் சென்றார்கள். பண்டைத் தமிழ் நூல்களுக்கு உயிர் கொடுத்து, மீட்டும் அந்நூல்களை யெல்லாம் தமிழுலகம் காணும்படி ஆசிரியர் செய்து வரும் சேவையைத் திலகரிடம் எடுத்துச் சொன்னார்கள். அதைக் கேட்டு வியப்புற்றார். அவர் இந்த நாட்டின் மொழிகளில் வடமொழியைப் போலப் பழமையானது தமிழ் என்பதை அறிந்திருந்தார். ஆசிரியப்பெருமான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய நூல்களை வெளியிடுகிறார் என்றும், அவை இன்றும் பயனுடையனவாக இருக்கின்றன என்றும் அறிந்து வியப் படைந்தார்.

“இந்த நூல்கள் உங்களுக்கு எப்படிக் கிடைத்தன?” என்று திலகர் கேட்டார்.

“புலவர்கள் வீடுகளில் ஓலைச்சுவடிகள் இருக்கின்றன. இந்தப் பழைய நூல்கள் அவற்றில் இருந்தன. அவற்றைத் தேடிக் கண்டு பிடித்துப் பொருள் கண்டு அச்சிட்டேன்.”

“அவற்றில் உள்ள எழுத்துக்கள் தெளிவாக இருக்குமா?”

“இப்போது அச்சில் உள்ளவை போல இரா. அன்றியும் பல காலமாக வழிவழியாகப் பிரதி செய்து வந்தமையால் பல பிழைகள் மலிந்திருக்கும். அவற்றையெல்லாம் ஆராய்ந்து திருத்தமான பாடத்தைக் கண்டுபிடித்து அச்சிட வேண்டும்.”

### பாரதியார் சந்தித்தது

1918-ஆம் ஆண்டு மே மாதம் 15-ஆம் தேதி புதுச்சேரியில் சங்கர ஜயந்தி நடந்தது. அந்த விழாவுக்குத் தலைமை தாங்க வேண்டுமென்று ஆசிரியப்பெருமானை அந்த ஊரில் இருந்த கல்லூரிப் பேராசிரியர் சுவாமிநாத தீக்ஷிதர் அன்புடன் அழைத்தார். ஆசிரியர் ரயிலில் புறப்பட்டு இ.வை.அனந்த ராமையருடன் அங்கு போய்ச் சேர்ந்தார். அந்தக் காலத்தில் பாரதியார் புதுச் சேரியில் வாழ்ந்து கொண்டிருந்தார்.



பாரதியார்

ஆசிரியப்பெருமான் அந்த விழாவில் சிலப்பதிகாத்தைப் பற்றிப் பேசியதோடு, பழங்காலத்துப் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பதைப் பற்றி விரிவாகப் பேசினார். அந்தக் கூட்டத்திற்குப் பாரதியாரும் வந்திருந்தார். ஆசிரியப் பெருமானைப் பார்த்துத் தம்முடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டார். மகாமகோபாத்தியாயப் பட்டம் பெற்ற போது பாரதியார் ஆசிரியரைப் பற்றிப் பாடிய பாடல்களைப் பாராட்டி ஆசிரியரும் பாரதியாரிடம் தம்முடைய மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்தார்.

"நான் புதுமைப் புலவன். நீங்கள் பழம் புலவர்களையெல்லாம் வாழச் செய்கிறீர்கள். புலவர் பரம்பரை அழியாமல் காப்பவன் நான். நீங்கள் பழம் புலவர்களைத் தமிழ் மக்கள் மறவாமல் செய்கிறீர்கள். தமிழ்நாட்டில் புலவர் பரம்பரை என்றைக்கும் வாழும். தமிழும் இறவாமல் ஒளிபெற்று விளங்கும். உங்களுக்கு என் மனமார வாழ்த்துக் கூறுகிறேன்" என்று பாரதியார் கூறினார். இவற்றைக் கேட்டு உடனிருந்த பாலகங்காதர திலகர் வியப்படைந்து ஆசிரியரைப் பாராட்டினார்.

### தம்பிரான் சங்கடத்தை நீக்கியது

திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக இருந்த அம்பலவாண தேசிகர் மீது ஒரு சமயம் சில தம்பிரான்களுக்கு மனக்கசப்பு ஏற்பட்டது. வேறு சிலருக்கும் அவரிடம் வெறுப்பு உண்டாயிற்று. ஆதீனத்தின் மீது ஒரு பெரிய வழக்கை நீதிமன்றத்தில் தொடங்க வேண்டுமென்று பலர் முயற்சி செய்தார்கள். திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த காறுபாறு வைத்திய

நாதத் தம்பிரான் என்பவர் இத்தகை குழப்பமான நிலையில் திருவாவடு துறையில் இருக்க வேண்டாமென்று காசிக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார்.

காசியிலிருந்து திரும்பும்போது சென்னையில் இறங்கி ஆசிரியரைப் பார்ப்பதற்காகத் தியாகராஜ விலாசம் வந்தார். காசியிலிருந்து வாங்கி வந்திருந்த சில பொருள்களையும், வெண்பட்டு ஒன்றையும் ஆசிரியப் பெருமானுக்குக் கொடுத்தார். அன்று முழுவதும் ஆசிரியருடன் தம்பிரான் மிகவும் மகிழ்ச்சியாக அளவளாவினார். அன்று இரவே அவர் திருவாவடு துறைக்குத் திரும்புவதாக இருந்தது.

இரவு 9 மணிக்கு வண்டி. ஆசிரியர் தம்பிரானை வழியனுப்புவதற்கு எழும்பூர்ப் புகைவண்டி நிலையம் சென்றிருந்தார். வண்டி கிளம்புவதற்கு அரைமணி நேரமே இருக்கும். திடீரென்று ஓர் அதிகாரி வேறு சிலருடன் அவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்தார் தம்மைக் கோர்ட்டிலிருந்து வந்திருக்கும் அதிகாரி என்று சொல்லிக் கொண்டு, காறுபாறு வைத்திய நாதத் தம்பிரானிடம் ஒரு சம்மனைக் கொடுத்தார். அவர்மீது கோர்ட் ‘டிகிரி’ வாங்கி இருப்பதாகச் சொன்னார். தம்பிரான் முகம் வெளிறிவிட்டது. முதலில் ஆசிரியப்பெருமானுக்கு விஷயம் ஒன்றும் விளங்கவில்லை.

அக்காலத்தில் சென்னையிலிருந்து திருவாவடுதுறை மடத்திற்கு அவ்வப்போது பழக்கூடைகளை அனுப்பி வந்த ஒரு வியாபாரிக்குப் பெருந் தொகை மடத்திலிருந்து கொடுக்க வேண்டி இருந்தது. அது கொடுக்கப் படாமல் நின்றுவிட்டது. அந்த வியாபாரி சென்னையில் உயர்நீதி மன்றத்தில் வழக்குத்தொடுத்து ‘டிகிரி’ வாங்கி வைத்திருந்தார். காசிக்குச் சென்றிருந்த தம்பிரான் திரும்பும் சமயம் தெரிந்து அந்த டிகிரியை நிறைவேற்றத் திட்டம் போட்டிருந்தார். தம்பிரான் காசியிலிருந்து திரும்பிச் சென்னை வந்திருப்பதை அறிந்துகொண்டு அதிகாரியுடன் எழும்பூர் ஸ்டேஷனுக்கு அதை நிறைவேற்ற வந்து சேர்ந்தார். காசியிலும் இன்றித் திருவாவடுதுறையிலும் இன்றிச் சென்னையில் பலரும் கூடியுள்ள ரயில்வே ஸ்டேஷனில் இந்தச் சங்கடம் நேர்ந்ததே என்ற வருத்தம் அவருக்கு உண்டாயிற்று; மலங்க மலங்க விழித்தார்.

அப்போது ஆசிரியப்பெருமான் விஷயத்தைத் தெரிந்து கொண்டு அந்தப் பணத்தைத் தாமே தருவதாக ஒப்புக்கொண்டு தம்பிரானைக் கவலை யில்லாமல் திருவாவடுதுறைக்குச் செல்லுமாறு ஏற்பாடு செய்தார்.

ரயில் கிளம்பிச் சென்றபிறகு ஆசிரியப்பெருமான் அந்த அதிகாரியையும், பழவியாபாரியையும் வீட்டிற்கு அழைத்துச் சென்று, அவர்களுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்து ரசீது பெற்றுக்கொண்டார். ஆசிரியப்

பெருமானுக்கு அந்த வாரந்தான் உத்தமதானபுரத்திலிருந்து நெல் விற்ற பணம் வந்திருந்தது. ஆதலின் பணம் கொடுப்பதில் சிரமம் ஏதும் நேரவில்லை.

தக்க சமயத்தில் ஆசிரியப்பிரான் இந்த உதவி செய்தது பற்றித் தம்பிரானுக்கும் திருவாவடுதுறை மடாதிபதிக்கும் மிக்க உவகை உண்டா யிற்று. நான்கு நாளைக்குள் மடத்திலிருந்து ஆசிரியர் பழ வியாபாரிக்குக் கொடுத்த தொகை வந்துவிட்டது.

### காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரான்

திருவாவடுதுறை ஆதீனத்தில் அம்பலவாண தேசிகர் இருந்தபோது ஒரு சமயம் ஒரு குருபூஜைக்கு ஆசிரியர் சென்றிருந்தார் அப்போது காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரான் அங்கே வந்திருந்தார். அவர் திருப்பனந்தாள் காசி மடத்தைச் சார்ந்தவர். அப்போது அவர் நன்றாக ஒரு பொருளைப்பற்றி எடுத்துச் சொன்னார். அதைக் கேட்ட அம்பலவாண தேசிகர் அவரிடம், "உங்களுடைய பேச்சு நன்றாக இருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் உயர்ந்த பதவியை நீங்கள் பெறக்கூடும்" என்று சொன்னார். "ஆம்; இவர்கள் பேச்சும் திறமையாக இருக்கிறது. இவர்கள் சிறந்த பதவியில் இருந்தால் பல நன்மைகள் விளையும்" என்று ஆசிரியர் ஆமோதித்தார்.

திருப்பனந்தாள் காசி மடத்தில் தலைவராக இருந்த சொக்கலிங்கத் தம்பிரான் என்பவர் 1919-ஆம் ஆண்டு பரிபூரணம் அடைந்தார். அதற்குப் பிறகு அவருடைய இடத்தில் ஒரு தலைவரை நியமிக்க வேண்டியிருந்தது. முன்னே சொன்ன காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரானை நியமித்தார்கள். அம்பலவாண தேசிகர் கூறிய ஆசிமொழி பலித்தது. ஆசிரியப் பெருமானுக்கும் அதில் மிக்க உவகை உண்டாயிற்று. காசிவாசி சொக்க லிங்கத் தம்பிரான் ஆசிரியர் மணிமேகலை பதிப்பித்தபோது உடனிருந்து உதவிகளைச் செய்து வந்தவர். எனவே ஆசிரியரிடம், தம்முடைய தமிழாசிரியர் என்ற பக்தி சொக்கலிங்கத் தம்பிரானுக்கு இருந்து வந்தது. திருப்பனந்தாளுக்கு அடிக்கடி ஆசிரியரை வருவித்து உபசாரம் செய்விப்பார்.

# 23. ஓய்வு பெற்றது

## வேலையிலிருந்து ஓய்வு பெற்றது

1919-ஆம் வருஷம் மார்ச்சு மாத இறுதியில் ஆசிரியப்பெருமான் தமிழாசிரியர் வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக் கொள்ளும் நிலை வந்தது. இதனைத் தெரிந்து கொண்ட அன்பர் பலர் ஆசிரியருக்குக் கடிதம் எழுதினர். பலர் அவர் தமிழாசிரியராக இருந்ததனால் பல மாணவர்கள் தமிழை விருப்பத்துடன் படித்து வந்தார்கள் என்றும், இனி வரும் மாணவர்களுக்கு அந்தப் பேறு கிடைக்காதே என்றும் வருந்தி எழுதினார்கள். இன்னும் சிலர், வேலையிலிருந்து கொண்டே பல தமிழ்நூல்களைப் பதிப்பித்த ஆசிரியப் பெருமான், இனிமேல் தம் நேரம் முழுவதையும் பதிப்புத் துறையில் செலவிடச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது என்று தம் மகிழ்ச்சியைத் தெரிவித்து எழுதினர்.

1919-ஆம் ஆண்டு ஆசிரியப்பெருமான் ஓய்வுபெற்றுச் சென்னை மாநிலக் கல்லூரியிலிருந்து பிரிந்தார். அவ்வாறு பிரியும் நாள் அன்று அக்கல்லூரிப் பேராசிரியர்கள் அனைவரையும் சந்தித்து விடை பெற்றுக்கொண்டார். அப்போது முதல்வராக இருந்த ஆலன் துரையின் அறைக்கும் சென்றார்.

முதல்வர் ஆசிரியப்பெருமானை அன்புடன் வரவேற்று நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தார். “உங்களால் இந்தக் கல்லூரியும், இந்தக் கல்லூரியில் பயின்ற மாணவர்கள் அனைவரும் பெரிதும் பயன் அடைந்திருக்கிறார்கள். உங்களுக்கும் கல்லூரியைப் பிரிந்து செல்வது வருத்தமாகத்தான் இருக்கும். மாணாக்கர்கள் உங்களைத் தம் தந்தையைப் போலவே எண்ணி மதிப்பு வைத்து மகிழ்ந்தார்கள். இந்த நேரத்தில் என்னால் உங்களுக்குச் செய்யக் கூடிய உதவி ஏதேனும் இருந்தால் சொல்லுங்கள். அதனை மிக்க மகிழ்ச்சி யோடு நிறைவேற்றுவேன்” என்று முதல்வர் சொன்னார்.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று இவர் நினைத்தார். “இதுவரை இந்தக் கல்லூரியில் தமிழாசிரியர் பதவியில் நன்கு கற்ற புலவர்களே இருந்து வந்திருக்கிறார்கள். இந்த நாட்டில் மாநிலக் கல்லூரி சிறந்த நிலையை வகிக்கிறது. இதன் பெருமையைப் பாதுகாத்து அதிகப்படுத்தும் முறையில் பேராசிரியர்களும் இருந்து வருகிறார்கள். தமிழ்ப் பேராசிரியர் கிடைக்காவிட்டாலும், எனக்குப் பின்னும் இங்கே

வருகிற பண்டிதர் நல்ல தகுதி வாய்ந்தவராக இருந்து இந்தக் கல்லூரிக்கு இத்துறையிலும் தொடந்து நல்ல சிறப்பு இருந்து வரவேண்டும் என்பது என் ஆசை'' என்று சொன்னார்.

உடனே முதல்வர், ''அப்படியானால் நீங்களே ஒரு தக்க புலவரைச் சொல்லுங்கள். அவரையே நியமனம் செய்கிறோம்'' என்று சொன்னார்.

அப்போது மயிலாப்பூர் பி.எஸ்.உயர்நிலைப் பள்ளியில் தமிழ்ப் புலவராக இருந்தவரும், ஆசிரியப்பெருமானுக்கு ஆராய்ச்சியில் உதவி செய்தவருமாகிய இ.வை.அனந்தராமையர் என்பவரது பெயரை ஆசிரியப் பெருமான் தெரிவித்தார். உடனே தடை சொல்லாமல் அவரையே மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதராக நியமித்துவிட்டார் முதல்வர். அதுமுதல் பல காலம் அனந்தராமையர் அங்கிருந்து தொண்டாற்றினார். அவரே கலித்தொகையை ஐயரவர்கள்முறையைப் பின்பற்றி விரிவாக அச்சிட்டவர். ஒப்புமைப் பகுதிகள், பாடபேதம், அகராதி முதலிய அங்கங்களுடன் அப்பதிப்பு இருக்கிறது.



இ.வை.அனந்தராமையர்

பி.எஸ்.ஹைஸ்கூலிலிருந்து மாநிலக் கல்லூரிக்கு இ.வை.அனந்த ராமையர் வந்தவுடன் அவர் இருந்த இடத்திற்கு ஒரு தமிழ்ப் பண்டிதரை நியமிக்க வேண்டியிருந்தது. அந்த உயர்நிலைப் பள்ளியின் நிர்வாகக் குழுவில் செயலாளராக இருந்த எல்.ஏ.கோவிந்தராகவ ஐயர் தக்க பண்டிதரை அப்பதவியில் நியமிக்க வேண்டுமென்று கருதி, யாரை நியமிக்கலாம் என்று ஆசிரியப்பெருமானிடம் யோசனை கேட்டார். ஆசிரியர் தம்மிடம் பாடம் கேட்டதுடன், தம் ஆராய்ச்சிக்கு மிகவும் உதவியாக இருந்த திரு. ம.வே.துரைசாமி ஐயரை அப்பதவியில் நியமிக்கும்படி பரிந்துரை செய்தார். திரு துரைசாமி ஐயர் தமது கடைசிக் காலம் வரையில் அந்த உயர்நிலைப் பள்ளியில் தமிழ்ப் பண்டிதராக இருந்து விளங்கினார்.

இவ்வாறு தம்மோடு பழகினவர்கள், தம்மிடம் படித்த மாணவர்கள் ஆகியோருக்கு நல்ல பதவிகளை அமைத்துக் கொடுக்கும் ஆசிரியப்பிரானது பண்புக்குப் பல எடுத்துக்காட்டுக்கள் உண்டு.

## 24. மாணவர் நன்றி

### வாழ்த்து மடல்

1919-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31-ஆம் தேதி சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ் மாணவர்கள் சங்கத்தின் சார்பில் ஒரு விழா நடந்தது. ஆசிரியப்பெருமானுடைய உருவப்படத்தை அங்கே திறந்து வைத்தார்கள். அதற்கு, நீதிபதியாக இருந்த டி.வி.சேஷகிரி ஐயர் அவர்கள் தலைமை வகித்து அந்தப் படத்தைத் திறந்துவைத்தார். ஆசிரியப்பெருமானும் அங்கே சென்றிருந்தார்.

அப்போது அவருக்கு அங்கே ஒரு வாழ்த்துரை வழங்கப் பெற்றது. அந்த வாழ்த்துரையில் மாணவர்கள் தங்களுடைய உணர்ச்சியையும், ஆசிரியரால் பெற்ற நன்மையையும் எடுத்துக்காட்டியிருந்தார்கள். ஆசிரியர் பதிப்பித்த தமிழ் நூல்களைத் தமிழ் அன்னையின் ஆபரணங்களாக வருணித்து இருந்தார்கள். அதோடு ஆசிரியர் பாடம் சொல்லும்போது ஆங்கில ஆசிரியரிடம் அடங்கியிருந்ததைப்போலத் தாங்கள் அடங்கிப் பாடம் கேட்ட செய்தியைச் சொல்லியிருந்தார்கள். வேறு மொழி பயிலும் மாணவர்களும் கூட ஓய்வு இருக்கும்போது தமிழ் வகுப்புக்கு வந்த ஆசிரியர் பாடம் சொல்வதைக் கேட்டு மகிழ்ந்த அற்புதத்தை அந்த வாழ்த்து மடலில் குறித்திருந்தார்கள், 'ஏறக்குறைய 40 ஆண்டுகள் இந்தக் கல்லூரியில் தாங்கள் தமிழாசிரியராகப் பணியாற்றிய காலத்தில் தங்களிடம் பாடம் கேட்கக் கொடுத்து வைத்திருந்த இந்தத் தலைமுறை மாணவர்களுக்குக் கிடைத்த பாக்கியம் இனி யாருக்குக் கிடைக்கும்?' என்று அந்த வாழ்த்து மடல் சிறப்பாக எடுத்துக்காட்டியது.

ஆசிரியர், கல்லூரியிலிருந்து ஓய்வுபெற்ற போது, இந்து, சுதேசமித்திரன் போன்ற பத்திரிகைகள் அவரது சேவையைப் பாராட்டித் தலையங்கங்கள் எழுதின.

1919-ஆம் ஆண்டு சிலப்பதிகாரத்தின் இரண்டாம் பதிப்பிற்குரிய வேலைகள் நடந்து வந்தன. ஏதேனும் நூலை மறுமுறை பதிப்பிக்கும்போது ஆசிரியர் பின்னும் கூர்ந்து கவனம் செலுத்துவார். பதிப்புக்கள் திருத்தம் அடைந்தன. ஏற்கனவே சரியாக விளக்கம் பெறாத பல புதிய பகுதிகள் அடுத்த பதிப்புக்களில் அமைப்பதைச் சிலப்பதிகாரம் முதலிய நூல் பதிப்புக் களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

## தாகூரின் வருகை

1919-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31-ஆம் தேதியிலிருந்து ஆசிரியர் மாநிலக் கல்லூரியிலிருந்து விடுதலை பெற்றார். அடுத்த நாள் ஏப்ரல் மாதம் முதல் தேதியன்று மகாகவி ரவீந்திரநாத் தாகூர் அவர்களைச் சந்திக்கும் சந்தர்ப்பம் ஆசிரியருக்குக் கிடைத்தது. தாகூர் சிறந்த கவிஞர் என்பதும் உலகப் புகழ் பெற்றவர் என்பதும் ஆசிரியருக்குத் தெரியும்.

தாகூர் சென்னைக்கு வந்திருப்பதைக் கேள்வியுற்று அவரைப் பார்க்க வேண்டுமென்று ஆசிரியர் விரும்பினார். அப்போது திருக்கழுக்குன்றக் கோவில் தர்மகர்த்தாவாக இருந்தவர் ஆசிரியரிடம் பேசிக் கொண்டிருந்தார். தாகூரைப் போய்ப் பார்த்துவர வேண்டுமென்று ஆசிரியப்பெருமான் சொன்னவுடன், அவர் தாமும் வருவதாகச் சொன்னார். இரண்டு பேரும் சேர்ந்து மயிலாப்பூர் லஸ்ஸில் இருந்த டி.எஸ்.இராமசாமி ஐயர் அவர்களுடைய இல்லத்திற்குச் சென்றார்கள். அங்கேதான் மகாகவி ரவீந்திரநாத் தாகூர் தங்கியிருந்தார். அங்குள்ளவர்கள் ஆசிரியரை அவருக்கு அறிமுகப் படுத்தினார்கள். தாகூரின் நீண்ட தாடியும், நெடிய கோலமும் ஆசிரியரது உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. மகாகவி ஆசிரியப்பெருமான் செய்து கொண்டு வரும் வேலைகளைப் பற்றி விசாரித்தார்.

“இந்த நூல்களை எல்லாம் எப்படி நீங்கள் பதிப்பித்தீர்கள்?” என்று ரவீந்திரர் கேட்டார். “தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளுக்கு எல்லாம் சென்று, அங்கேயுள்ள பல ஓலைச்சுவடிகளை எடுத்து வந்து அவற்றை ஆராய்ந்து பதிப்பித்துக்கொண்டு வருகிறேன்” என்று சொன்னார். தமிழ்மொழியின் பழைய இலக்கியங்களை எல்லாம் ஆசிரியப்பெருமான் வெளியிட்டு வருவது இந்தியாவுக்கே தனிப் பெருமை அளிப்பதாக மகாகவி எடுத்துச்சொன்னார். “முடிந்தால் நான் உங்கள் வீட்டிற்கு வந்து பார்க்கிறேன்” என்றும் ரவீந்திரர் மகிழ்வோடு தெரிவித்தார்.

அன்று மாலையே 3 மணிக்கு அந்தக் கவிஞர் தியாகராச விலாசத்திற்கு வந்து ஆசிரியரைப் பார்த்தார். அவர் வருவது தெரிந்து ஆசிரியப்பெருமான் மாலை, பழம் முதலியவற்றை வாங்கி வைத்திருந்தார். அவர் மாடி ஏறிவந்து ஆசிரியப் பெருமானுடைய புத்தகங்கள், ஏட்டுச்சுவடிகள் ஆகிய எல்லா வற்றையும் பார்த்தார். ஆசிரியர் அவற்றை எல்லாம் பிரித்துக்காட்டினார். இத்தகைய ஏட்டுச்சுவடிகளைத் தாகூர் முன்பு கண்டது இல்லை. ஆகையால் அவற்றைக் கண்டு மிகவும் வியந்தார். “தாங்கள் புதிய கவிதைகளை இயற்றி மக்களை மகிழ்விக்கிறீர்கள். நான் பழைய புலவரின் கவிதைகளுக்கு உயிர் கொடுத்துக் காப்பாற்றி வருகிறேன். இறைவன் திருவருள் எனக்குத் துணையாக இருக்கிறது” என்றார் ஆசிரியர்.

"ஆம், இந்த நாட்டில் கவிஞர் பரம்பரை என்றும் போகாது. தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும்" என்றார் மகாகவி. "என் ஆசிரியர் ஒரு பெரிய கவிஞர். அவருடைய தயையினால்தான் நான் தமிழில் சிறந்த பயிற்சி பெற்றேன்" என்றார் ஆசிரியர். ரவீந்திரர் அங்கு வந்திருப்பது தெரிந்து அவரைக் காண வீட்டு வாசலில் பெருங்கூட்டம் கூடிவிட்டது. ரவீந்திரர் வந்திருந்த சமயம் திருக்கழுக்குன்றம் கோவில் தர்மகர்த்தர் ஆசிரியருடன் இருந்தார். இதில் ஏதோ ஒரு குறிப்பு இருப்பதாக ஆசிரியர் எண்ணினார். "எல்லாம் பின்னால் தெரியும்" என்று உடன் இருந்தவர்களிடம் சொன்னார்.

அடுத்த ஆண்டு ஏப்ரல் மாதம் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் அம்பல வாணதேசிகர்பரிபூரணம்அடைந்தார். அவருடைய இடத்திற்குத் திருக்கழுக் குன்றத்தைச் சார்ந்த தம்பிரான் ஒருவர் தாம் ஆதீனகர்த்தராக வந்தார். தாம் சொன்ன குறிப்புப் பலித்ததை எண்ணி மகிழ்ந்து ஆசிரியர் இதைப் பின்னும் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்.

ஆசிரியப்பெருமான் சென்னை மாநிலக் கல்லூரியிலிருந்து விலகிய போது மாணவர்களுக்கு இனிமேல் அவருடைய விரிவுரைகள் கிடைப்பதற் கில்லையே என்று வருந்திப் பலர் எழுதினார்கள். இன்னும் சிலர் ஆசிரியராக இருந்தபடியே நூல்களைப் பதிப்பித்து வந்த அவருக்கு இனிமேல் முழு நேரத்தையும் பதிப்பு வேலையில் ஈடுபடுத்த நல்லதொரு வாய்ப்பு ஏற்பட்டி ருப்பதாக மகிழ்ச்சி தெரிவித்து எழுதியிருந்தார்கள்.

## 'எல்லா இடங்களும் எனக்குச் சொந்தம்'

வேலையிலிருந்து விலகிய புதியதில் ஒரு நாள் ஆசிரியர் பெங்களூருக்குச் சென்றிருந்தார். ரயில்வே ஸ்டேஷனில் ஆசிரியரை வரவேற்க அவரிடம் பாடம் கேட்ட கே.ஆர். சீநிவாசையங்கார் போன்ற கனவான்கள் வந்திருந்தார்கள். சீநிவாசையங்கார் மைசூர் அரசில் பெரிய பதவி வகித்தவர்.

ஸ்டேஷனில் ஆசிரியரை வரவேற்கப் பலர் கூட்டமாக வந்திருந்ததைப் பார்த்து ஓர் அன்பர் ஆசிரியரைப் பார்த்து, "நீங்கள் ஓய்வு பெற்ற பிறகு பெங்களூரில் வசிக்கப் போகிறீர்களா? இங்கே உங்களுக்கு வேண்டி யவர்கள் அதிகமாக இருக்கிறார்கள் போலிருக்கிறதே!" என்று கேட்டார்.

ஆசிரியர் புன்னகை பூத்து, "தமிழ்நாட்டில் எல்லா இடங்களும் எனக்குச் சொந்தம், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று சொல்லியிருப்பது எனக்கு மிகவும் பொருத்தம்" என்று சொன்னார். அது எவ்வளவு உண்மையென்பது தமிழ் அன்பர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ஆசிரியர் வேலையிலிருந்து விலகிய சமயத்தில் ‘மெட்ராஸ் மெயில்’ பத்திரிகையில் 9-1-1920 ஒரு கடிதம் வந்தது. அதைக் கும்பகோணம் காலேஜில் முதல்வராக இருந்த ஜே.எம்.ஹென்ஸ்மென் எழுதியிருந்தார். அவர் இந்த நாட்டில் வேலை பார்த்துவிட்டுத் தம் ஊராகிய யாழ்ப்பாணத்துக்குச் சென்று விட்டார். அங்கிருந்துதான் மெட்ராஸ் மெயிலுக்கு அந்தக் கடிதத்தை அவர் எழுதியிருந்தார்.

“சென்னை அரசாங்கத்தார் ஐயர் அவர்களுடைய ஒப்பற்ற தமிழ்த் தொண்டை நன்கு தெரிந்து பாராட்ட வேண்டும். அவர் வேலையிலிருந்து விலகிவிட்டதால் எல்லோருக்கும் கொடுப்பது போல ஓய்வூதியம் அளிக்காமல், அவரது ஒப்பிலாத் தமிழ்த் தொண்டிற்கு ஈடாக முழுச் சம்பளத்தையே ஓய்வூதியமாகத் தர வேண்டுமென்று வற்புறுத்தி எழுதியிருந்தார். இதனால் அரசாங்கத் திற்குக் கௌரவம் ஏற்படும் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

### பயனுள்ள சாட்சியம்

1920-ஆம் ஆண்டு சிதம்பரம் கோவில் சம்பந்தமாக ஒரு வழக்கு சிதம்பரம் சப்-கோர்ட்டில் நடந்தது. அது சம்பந்தமாக ஆசிரியப்பெருமான் வந்து தங்களுக்குச் சாட்சி சொல்ல வேண்டு மென்று தீட்சிதர்கள் விரும்பினார்கள். 14-4-1920 அன்று ஆசிரியரைச் சிதம்பரத்தில் நேரில் விசாரித்தார்கள். அவர் சொன்ன சாட்சியம் தீட்சிதர்களுக்கு மிகவும் பயனுடையதாக இருந்தது, அதனால் தீட்சிதர்கள் யாவரும் ஆசிரியப்பெருமானைப் பாராட்டி உபசாரம் செய்தார்கள்.

# 25. திருவாவடுதுறை வாசம்

## *திருவாவடுதுறை சென்றது*

*15-4-1920* அன்று திருவாவடுதுறை ஆதீனகர்த்தராக இருந்த அம்பலவாண தேசிகர் பரிபூரணம் அடைந்தார். காறுபாறு வைத்தியநாதத் தம்பிரான் அவருக்குப்பின் ஆதீனத் தலைவராகப் பட்டம் பெற்றார். அப்போது ஆசிரியர் சிதம்பரத்தில் இருந்தார். அங்கிருந்து திருவாவடுதுறை சென்று புதிய ஆதீன கர்த்தருக்கு ஆசார்ய அபிஷேகம் நடந்தபோது உடன் இருந்தார். ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் என்ற திருநாமத்தை அந்தத் தம்பிரான் பெற்றார்.

அப்போது ஆதீனத்தைச் சார்ந்த தம்பிரான் ஒருவர் தமக்கே அந்தப் பதவி கிடைக்கவேண்டுமென்று கோர்ட்டில் வழக்குப் போட்டார். அதோடு சில கலவரங்கள் நடந்தன. அதனால் யாரேனும் தமக்குத் துணையாக இருக்க வேண்டுமென்று ஆதீனத் தலைவர் விரும்பினார். ஆசிரியப்பிரானைத் தம்முடன் இருந்து வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டார். 1920-ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் திருவாவடுதுறையில், ஆசிரியர் தங்கினார்; அவருக்கு வேண்டிய சௌகரியத்தைச் செய்து கொடுத்தார் ஆதீன கர்த்தர். மடத்தில் சுவடிகளும், அச்சிட்ட புத்தகங்களும் இருந்தன. அந்தக் காலத்தில் ஆசிரியர் அந்த இடத்திற்கு மாணாக்கர்கள் சிலரை அழைத்துச் சென்று உடன் இருக்கச் செய்தார். வேறு சிலருக்குப் பாடம் சொன்னார். பெருமதிப்புக்குரிய ஆசிரியர் மடத்திலே தங்கியதால் யாருடைய தொல்லையும் ஆதீனத் தலைவருக்கு உண்டாகவில்லை.

திருவாவடுதுறையில் ஆசிரியர் இருந்தபோது அந்த மடத்தின் சம்பந்தமாகத் தேவகோட்டையில் இருந்த சிலரைச் சந்தித்துப் பேச வேண்டி இருந்தது. அங்கே சென்றிருந்த சமயத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உள்ள இளைஞர் யாரேனும் தமக்கு உதவியாக இருக்கக் கூடுமா என்று விசாரித்தார். அங்கே படித்துக் கொண்டிருந்த கோதண்டராமன் என்ற இளைஞர் ஆசிரியருடன் வரச் சம்மதித்தார். அவரை ஆசிரியர் அழைத்து வந்து தம்முடன் வைத்திருந்தார். அவர் ஆசிரியருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தார். ஆசிரியர் அவருக்குப் பாடம் சொன்னதோடு, வித்துவான் பரீட்சையில் அவர் தேர்ச்சி

பெற்றவுடன் ஒரு கல்லூரி ஆசிரியராகப் பணியாற்றும் படியாகவும் செய்தார்.

1920-ஆம் ஆண்டு நவராத்திரியின்போது விஜயதசமி அன்று திருவாவடுதுறையில் இருந்த ஆசிரியர் அங்கு ஒரு பாடசாலையை ஆரம்பித்தார். 'சுப்பிரமணிய தேசிகர் கலாசாலை' என்ற பெயரில் அது நடைபெற்றது. அங்கே சில மாணவர்களுக்குத் தமிழைச் சொல்லிக் கொடுத்தார். தேவாரப் பாடசாலை; தமிழ்ப் பாடசாலை ஆகியவை அங்கே சிறப்பாக நடந்து வரலாயின. அங்கே படிக்கும் மாணவர்களுக்கு மடத்திலிருந்தே உணவு உடை அளித்து வந்தார்கள். ஆசிரியப்பெருமான் தாமே அங்கிருந்து பாடம் சொன்னமையினால் மாணவர்கள் நல்ல முறையில் கல்வி பெறச் சௌகரியமாக இருந்தது. மடத்தின் பெருமையும் உயர்ந்தது அதனைத் திருவாவடுதுறை ஆதீன மடத்தின் வரலாற்றில் சிறப்பான காலம் என்று சொல்ல வேண்டும்.

### அக்கினி பகவானே அஞ்சினான்

1920-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 26-ஆம் தேதி மதுரைத் தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் தீப்பற்றியது. பக்கத்து வீடு ஒன்றில் தீப் பிடித்து அது சங்கக் காரியாலயத்திற்கும் பரவியது. அதனால் சில மரச்சாமான்களும், தச்சுக் கருவிகளும் சேதம் அடைந்தன. நல்ல வேளையாகப் பெரும்பான்மையான புத்தகங்களும், கையெழுத்துப் பிரதிகளும் நெருப்பில் அழியவில்லை. அவற்றையெல்லாம் மிகவும் முயற்சி செய்து காப்பாற்றிவிட்டார்கள். அதுபற்றி மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவராக இருந்த சேதுபதி மன்னர் ஆசிரியப் பெருமானுக்கு எழுதினார்; "இறைவன் திருவருளால் தமிழ் காப்பாற்றப் பட்டது. மீனாட்சியம்மை தலைமை தாங்கும் தலத்தில் தமிழுக்கு அழிவு வருமா? மற்றச் சாமான்கள் எரிந்து போனாலும் தமிழ்ச் சுவடிகளைத் தீண்டுவதற்கு அக்கினி பகவானே அஞ்சினான் போலும்!" என்றும், "இனி இவ்வாறு நேராமல் தக்க பாதுகாப்புடன் இருக்க வேண்டும்" என்றும் எழுதினார்.

### திருப்புகழ்ப் பதிப்புக்கு உதவி செய்தது

தமிழ்நாட்டில் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் அங்கங்கே சில பேர்களால் பாடப்பெற்று வந்தன. அவற்றையெல்லாம் தொகுத்துப் புத்தகமாக யாரும் வெளியிடவில்லை. அந்தக் காலத்தில் அரசினர் பதிவுப் பகுதியில் உயர் அதிகாரியாக இருந்த வ.த.சுப்பிரமணியபிள்ளை என்பவர் திருப்புகழ்ப் பாடல்கள் எல்லாவற்றையும் தொகுத்து வெளியிட வேண்டுமென்று நினைத்தார். தாம் உத்தியோக விஷயமாக எந்த இடத்திற்குப் போனாலும் அங்குள்ளவர்களை அழைத்து, அவர்களுக்குத் தெரிந்த திருப்புகழ்ப்

பாடல்களைச் சொல்லச் சொல்லி எழுதி வந்தார் இப்படி மிகவும் சிரமப்பட்டு அவற்றை எல்லாம் தொகுத்த பிறகு சந்தக் குறிப்புக்களோடு இரண்டு பாகங்களாக வெளியிட்டார். அவ்வாறு வெளியிடும் போது அடிக்கடி ஆசிரியப் பெருமானிடம் வந்து தாம் செய்யும் தொண்டைப் பற்றிச் சொல்வார். ஆசிரியப் பெருமான் அவருக்கு வேண்டிய ஊக்கத்தை அளித்ததோடு, பாடல்களில் ஏற்படும் ஐயங்களை நீக்கிப் பொருளையும் விளக்கினார். அந்நூலுக்கு ஒரு சிறப்புப்பாயிரம் வேண்டுமென்று கேட்டார். 31-10-1920-இல் இரு சிறப்புப் பாயிரத்தையும் எழுதி அனுப்பினார்.

## புதிய பதிப்புக்கள்

1921-ஆம் ஆண்டு மாசி மாதம் மகாமகப் பெருவிழா, கும்பகோணத்தில் சிறப்பாக நடந்தது. அப்போது அங்கே திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் எழுந் தருளிருந்தார். வித்வத் சபை நடந்தது. ஆசிரியரை முன்னிட்டு ஆதீனகர்த்தர் அந்தச் சபையை நடத்தினார். ஆசிரியரே அந்தச் சபையை முன்நின்று நடத்தி வைத்தார். அந்தச் சபைக்கு வந்தவர்கள் ஆசிரியரை வணங்கி வாழ்த் தினார்கள்.

ஆசிரியப்பெருமான் திருவாவடுதுறையில் வசித்து வந்த காலத்தில் சென்னையில் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றின் 2-ஆவது பதிப்பு அச்சிடும் வேலைகள் நிறைவேறின. அந்தப் பதிப்புக்களில் பல புதிய பகுதிகளைச் சேர்த்தார்.

பத்துப்பாட்டின் 2-ஆவது பதிப்புப் பல புதிய பகுதிகளுடன் 1921-ஆம் ஆண்டு வெளியாயிற்று. முதல் பதிப்பு வெளியான பிறகு 30 வருஷங்களுக்குப் பிறகே இந்தப் பதிப்பு வெளிவந்தது புதிய பதிப்புப் பதிப்பிக்கும்போதெல்லாம் ஆசிரியப்பெருமான் பல புதிய செய்திகளைச் சேர்க்கும் வழக்கப்படியே பத்துப்பாட்டிலும் அமைந்தது.

## கிலத் பெறுதல்

1922-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13-ஆம் தேதி வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு விஜயம் செய்தார். அப்போது தமிழிலும் வடமொழியிலும் சிறந்து விளங்கும் புலவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டுமென்று அரசினர் நினைத்தனர். ஆசிரியப்பெருமானுக்கும் ஒரு கிலத் கிடைத்தது. அதை வாங்கும்போது நீண்ட மேலங்கியும் தலைப்பாகையும் அணிந்துகொள்ள வேண்டுமென்று அறிவித்திருந்ததால் ஆசிரியப்பெருமான் அவ்வாறே அணிந்து கொண்டு சென்று அந்த மரியாதையைப் பெற்றார். ஆசிரியர் பெற்ற சிறப்புத் தமிழ்த்தாய்க்கே செய்த சிறப்பாகும் என்று பலரும் பாராட்டினர்.

வேல்ஸ் இளவரசரைச் சந்திக்கும் பொருட்டுச் சென்னைக்கு வந்த ஆசிரியப்பெருமான் சில நாட்கள் இங்கேயே தங்கியிருந்து விட்டுத் திருவா வடுதுறை சென்றார்.

### திருவாவடுதுறை சென்று திரும்புதல்

அப்போது ஆதீனத் தலைவராக இருந்த சுப்பிரமணிய தேசிகருடைய உடல் நிலை மிகவும் கவலைக்கிடமாயிற்று. அவர் நோய் வாய்ப்பட்டு 1922-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 5-ஆந்தேதி பரி பூரணம் அடைந்தார்.

அதன் பிறகு ஸ்ரீவைத்தியலிங்க தேசிகர் ஆதீனத் தலைவராக அபிஷேகம் பெற்று ஆதீன ஞானாசிரியரானார். அவரே தமக்குப் பின் வரவேண்டுமென்று முன்னால் இருந்த ஆதீனத் தலைவர் எழுதி வைத்திருந்த உயிலில் ஆசிரியப் பெருமானும் ஒரு சாட்சியாகக் கையொப்பமிட்டிருந்தார்.

சுப்பிரமணிய தேசிகர் பதவி வகித்த காலம் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் இல்லை. அவர் காலத்திலேயே மடத்தின் தலைமை பற்றிய வழக்குகள் நடந்தன. உள்ளூறப் புகைந்து கொண்டிருந்த சில பேர்கள் அடிக்கடி தொல்லைகள் கொடுத்து வந்தார்கள். ஆசிரியப்பெருமான் தம்முடன் இருந்தால் நல்லது என்று சுப்பிரமணிய தேசிகர் கேட்டுக் கொண்டார். அதனால் ஆசிரியப்பெருமான் திருவாவடுதுறையில் தங்கியிருந்தார். எனினும் அவர் அங்கே இருந்த போது அங்கிருந்த சூழ்நிலைகளைப் பார்த்து ஆசிரியப்பெருமான் சென்னைக்கே திரும்பிவிடலாம் என்று பல முறைகள் நினைத்ததும் உண்டு. எனினும் ஆதீனத்தலைவருடைய வற்புறுத்தல் காரணமாக ஆசிரியர் அங்கிருந்து விலக முடியவில்லை. திருவாவடு துறையில் தங்கி யிருப்பதனால் தம்முடைய தமிழ் ஆராய்ச்சிப் பணிகள் தடைப்படுவதைப் பெரிதும் உணர்ந்த ஆசிரியப் பெருமான், தக்கவாறு புது ஆதீனத்தலைவரிடம் சொல்லிக் கொண்டு சென்னைக்கே திரும்பினார்.

### பாம்பன் சுவாமிகள்

சென்னையில் குமரகுருதாச சுவாமிகள் இருந்து வந்தார். அவரைப் பாம்பன் சுவாமிகள் என்பார்கள். அவர் முருகனிடம் இடையறாத அன்பு உடையவர். ஆசிரியப்பெருமானிடம் அவருக்கு நல்ல மதிப்பு இருந்தது.

சென்னை இராயப்பேட்டையில் ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்த ஜன சபை என்ற சபை ஒன்று உண்டு. அதன் 17-ஆம் ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. அதற்கு ஆசிரியப்பெருமான் தலைமை வகிக்க வேண்டு மென்று கேட்டிருந்தார்கள். ஆசிரியப்பெருமானும் தலைமை தாங்கி


ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்

நடத்தினார். ஒருநாள் வைபவத்திற்கு ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளும்தலைமைதாங்கினார்அப்போது ஆசிரியருடன் அவர் வெகுநேரம் கலந்து உரையாடினார். ஆசிரியர் தமிழுக்கு ஆற்றிய தொண்டை மிகவும் பாராட்டினார். அவர் பல நூல்களை இயற்றியிருக்கிறார் அவருடைய சமாதி திருவான்மியூரில் இருக்கிறது இந்தச் சமாதிக் கோயிலுக்கு வடபால் டாக்டர் ஐயரவர்கள்நூல்நிலையம்அமைந்துள்ளது.

சீவகசிந்தாமணியின் 3-ஆம் பதிப்பு வேலை தொடங்கப் பெற்று நடந்து வந்தது. அப்போது உடன் இருந்து உதவி செய்து வந்தவர்கள் ஏதோ காரணத்தினால் விலகிவிட்டார்கள். அதனால் தனியாகவே ஆசிரியர் அந்தப் பதிப்புப் பணிகளை நிறைவேற்ற வேண்டியிருந்தது. அதில் புதிய பகுதிகளை மிகுதியாக அமைத்திருக்கிறார். 1922-ஆம் ஆண்டு அந்தப் பதிப்பு நிறைவேறியது. "கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன்" என்றும், 'அஸஹாய சூரன்' என்றும் இராம பிரானைச் சொல்வார்கள். ஆசிரியப்பிரானும் யாருடைய துணையும் இன்றிச் சீவகசிந்தாமணியின் மூன்றாம் பதிப்பை வெளியிட்டு மகிழ்ந்தார்.

## மூச்சுள்ளவரை

தஞ்சாவூரில் சீநிவாச பிள்ளை என்னும் வழக்கறிஞர் ஒருவர் இருந்தார். அவர் நல்ல தமிழ்ப்புலமை உடையவர். "தமிழ் வரலாறு" என்கிற வரலாற்று நூலை எழுதியிருக்கிறார். அவர் 22-4-1923-இல் ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

அதில் இதுவரை ஆசிரியப்பெருமான் செய்திருக்கும் தமிழ்ப் பணியைப் பாராட்டிவிட்டு, "இன்றுவரை தமிழுக்காகத் தாங்கள் பாடுபட்டது போதுமே; இனி அந்தச் சிரமமான வேலையை அடியோடு நீக்கிவிட்டு, ஈசுவர பக்தியை அபிவிருத்தி செய்து கொண்டு முன்னோர்களுக்கும் திருப்தியளிக்கச் செய்யலாமே" என்று எழுதியிருந்தார். ஆசிரியப்பெருமான் மிக்க வருத்தத்துடன் இந்த வேலைகளைக் கவனிக்கிறார் என்ற இரக்கம் அவருக்கு இருந்தது. ஆனால் ஆசிரியப்பெருமானுக்குத் தமிழ்ப் பணியே மூச்சாக இருந்தது. அதை நிறுத்திவிட்டால் அவர் வாழ்வும் நின்றுவிடும் என்பதை அந்தப் பெரியவர் உணரவில்லை.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன்"

என்பதாகத் தமிழ்விடு தூதுக்காரர் குறிப்பிட்டது போல், தமிழ் ஆராய்ச்சியையே தம் வாழ்வின் லட்சியமாகக் கொண்டவர் ஆசிரியப் பெருமான்.

எனவே சீநிவாச பிள்ளைக்கு ஆசிரியப்பெருமான், "என் வாழ்நாள் முடியும்வரை, என் உடலில் சிறிதேனும் பலம் உள்ள வரை, நான் தமிழாராய்ச்சி ஒன்றில்தான் ஈடுபட முடியும். என்னை மூச்சு விடாதே என்று ஒருவர் சொன்னாலும் அப்படியே செய்ய முயல்வேன். ஆனால் தமிழ்ப்பணியை நிறுத்திவிடு என்றால் அது என்னால் முடியாத காரியம். நீங்கள் நல்ல நோக்கத்துடன் தான் எனக்கு எழுதினீர்கள். எனக்குச் சிரமமாக இருக்குமேயென்று நீங்கள் எண்ணுகிறீர்கள். எனக்கு அதுவே இன்பம். நான் மேற்கொண்ட தமிழ் ஆராய்ச்சிப் பணியே எனக்கு மிக உயர்ந்த மோட்ச சாதனம்" என்று பதில் எழுதி அனுப்பினார்.

# 26. பெருங்கதை

## பெருங்கதைப் பதிப்பு

கொங்குவேளிர் இயற்றிய பெருங்கதை மிகச் சிறந்த காப்பியமாகும். ஆனால் அதற்கு ஒரு சுவடியே கிடைத்தது. ஆதியும், அந்தமும் இல்லாத பிரதி அது. அதில் இல்லாத பகுதிகள் வேறு ஏதேனும் சுவடியில் கிடைக்குமோ என்று ஆசிரியர் பல காலம் தேடி வந்தார். ஒன்றும் கிடைக்கவில்லை. ஆதியந்தம் இல்லாத கடவுளைப் போல அது இருந்தது.

இலக்கணக் கொத்து என்னும் நூலின் உரையில் அதன் ஆசிரியராகிய சாமிநாத தேசிகர் ஓரிடத்தில், 'மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம். அன்றியும் அழகிய திருச்சிற்றம் பலமுடையார் அவர் வாக்கிற்கு அலந்து இருந்து அருமைத்திருக்கையால் எழுதினர். அப்பெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேள் மாக்கதை முதலியவற்றோடு சேர்த்து அச்செய்யுட்களோடு ஒன்றாக்குவர்!' என்று எழுதியிருக்கிறார். அதைப் படித்தபோது ஆசிரியர் 'கொங்குவேள் மாக்கதை' என்பது இராமாயணக்கதை முதலியவற்றைப் போலவே அதுவும் கொங்குவேள் என்னும் ஒருவனுடைய கதையாக இருத்தல் கூடும் என்று எண்ணினார். திருநெல்வேலியில் இருந்த கவிராஜ நெல்லையப்பப்பிள்ளை, கவிராஜ ஈசுவர மூர்த்திபிள்ளை ஆகியவர்கள் வீட்டில் இருந்த ஏட்டுப்பிரதிகளைப் பார்த்துக்கொண்டு வந்தபோது, கொங்குவேள் மாக்கதை என்று ஒரு சீட்டில் மேலே எழுதியிருந்த பழஞ் சுவடியைக் கண்டார். அதைப் பார்த்தவுடன் இலக்கணக்கொத்து ஆசிரியர் எழுதியிருந்த 'கொங்குவேள் மாக்கதை' என்பது நினைவுக்கு வந்தது அதை வாங்கி வைத்துக்கொண்டார். அதில் முதலில் 80 ஏடுகள் காணப் படவில்லை. 319-ஆம் ஏட்டிற்கு மேலே உள்ள ஏடுகள் இல்லை சாமிநாத தேசிகர் வெறுத்துக் கூறியது நினைவுக்கு வந்தது. 'அவர் வைதது இந்நாலுக்கு வாழ்த்தாக முடிந்தது. பெரியோர்களால் செய்யப்படும் அவமதிப்பும் கௌரவமுடையதாகும் என்பது திண்ணம்' என்று ஆசிரியர் கருதினார். பெருங்கதை முகவுரையில் அதைக் காணலாம்.

சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் அடியார்க்கு நல்லார், 'முந்து நூல்களில் காப்பியம் என்னும் வடமொழிப் பெயர் இன்றேனும்', 'கூத்தியர் இருக்கையும் சுற்றியதாகக், காப்பிய வாசனை கலந்தவை சொல்லி'

என இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச் சங்கத்துத் தொல்காப்பியர் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும் வெள்ளூர்க் காப்பியனாரும் சிறுபாண்டரங்கனாரும் மதுரையாசிரியர் மாறனாரும் துவரைக்கோமானும் கீரந்தையாரும் என்று இத்தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற் பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும், 'கருதுவதங் கொன்றுண்டோ காப்பியக் கவிகள் காம, எரியெழு விகற்பித்திட்டார்' எனச் சிந்தாமணியுள்ளும், 'நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்' என மணிமேகலையுள்ளும், பிறவற்றுள்ளும் கூறினமையாலும், சொற்றொடர்நிலை, பொருட்டொடர் நிலை என்ற தொடர்நிலைச் செய்யுட்கும் காப்பியம் என்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தென உணர்க' என்று ஓரிடத்தில் எழுதியுள்ளார்.அப்பகுதியில் அவர் காட்டியுள்ள, 'கூத்தியர் இருக்கையும்...சொல்லி' என்னும் மேற்கோள் அப்புத்தகத்தில் இருப்பதைக் கண்டார். அதிலிருந்து அந்த நூல் உதயணன் கதை என்று தெரிய வந்தது. அந்த உரையில் காட்டப்பட்டுள்ள மேற் கோள்களும், பெருங்கதையென்றும் கதையென்றும் வந்தவற்றில் பலவும் அப்புத்தகத்தில் இருக்கக் கண்டு அந்த நூலுக்கு அப்பெயர்கள் எல்லாம் உரியன என்று தெரியவந்தது. அப்பால் அதைப் படித்துப் பார்த்தார் ஆசிரியர்.

பிறகு திருநெல்வேலியிலுள்ள வண்ணார்பேட்டையில் வாழ்ந்த திருப்பாற்கடல் நாதகவிராயரவர்களுடைய வீட்டில் இருந்த ஏட்டுச்சுவடி களைத் தேடிப் பார்த்தபோது, பெருங்கதைப் பிரதி ஒன்று கிடைத்தது. அது எல்லாவகையிலும் முன் பெற்ற பிரதியைப் போலவே இருந்தது.

பிறகு பல இடங்களில் முயன்று தேடிப் பார்த்தும் வேறு பிரதி கிடைக்கவில்லை.

சிலப்பதிகாரம், மணிமேகலைப் பதிப்புக்களில் அந்நூலிலிருந்து சில பகுதிகளை ஒப்புமையாகக் காட்டியிருந்தார் ஆசிரியர். அதைக் கண்ட பலர் பெருங்கதையில் பல கதைகள் இருக்கக் கூடுமென்று கருதிச் சில கதைகளை எழுதியனுப்ப வேண்டுமென்று எழுதினர். அவற்றைப் புது நடையில் எழுதிப் பாடப் புத்தகங்களாக வைத்து நலம் பெறலாமென்பது அவர்களுடைய நோக்கம். 'அவர்களுக்கு விடை எழுதுவதிலும் சந்தித்த போதெல்லாம் சமாதானம்' கூறுவதிலும் எனக்கு உண்டான துன்பமும் காலப் போக்கும் இதில் எழுதி அடங்குவன அல்ல' என்று ஆசிரியப்பிரானே எழுதியுள்ளார்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் நான்காம் ஆண்டு விழா நடந்தது. அதில் அவைத் தலைமை தாங்கிய ராவ்பகதூர் ம.வி.கனகசபைப் பிள்ளை

தாம் அந்த ஆண்டு ஏதேனும் புதிய விஷயம் ஒன்றைப் பேச எண்ணினார். பெருங்கதை என்னும் பொருள் பற்றிப் பேச நினைந்து, 'பெருங்கதைப் பிரதி ஒன்றை அனுப்பினால் வேண்டியவற்றைப் பார்த்து எழுதிக் கொண்டு திருப்பி அனுப்பி விடுகிறேன்' என்று ஆசிரியருக்கு எழுதினார். அவ்வாறே ஆசிரியர் ஒரு கடிதப் பிரதியை அவருக்கு அனுப்பினார். அவர் தமிழ்ச் சங்கத்தில் அதைப் பற்றி விரிவுரை ஆற்றினார். கேட்டவர்கள் வியப்பில் ஆழ்ந்தனர்.

மதுரையிலிருந்து கனகசபைப் பிள்ளை வந்த பிறகு பெருங்கதைப் பிரதியை ஆசிரியர் கேட்டபோது அவர் தாம் வேறொரு பிரதிசெய்து கொண்டு கொடுத்து விடுவதாகச் சொன்னார். அப்படியே அவர் பிரதி செய்து கொண்டு வருகையில் திடீரென்று காலமாகி விட்டார். ஆசிரியர் அவர் வீடு சென்று துக்கம் விசாரித்து விட்டு, தாம் அனுப்பிய பெருங்கதைப் பிரதியைக் கொடுக்கும்படி கேட்டார். எங்கே தேடியும் அது கிடைக்கவில்லை. அதில் செய்திருந்த குறிப்புகள் பயன்படாமற் போயின.

பெருங்கதைப் பிரதிகள் வெவ்வேறிடங்களில் இருப்பதாகப் பலர் சொன்ன செய்திகளைக் கேட்டு அங்கெல்லாம் சென்று தேடியும் ஒன்றும் கிடைக்கவில்லை. 'இப்படியே இன்னும் இந்நூலின் சம்பந்தமாக நிகழ்ந்த செய்திகளை எடுத்து எழுதுவ தென்றால் அதுவே ஒரு பெருங்கதையாகும்' என்று ஆசிரியர் எழுதியிருக்கிறார். ஒரே பிரதியை வைத்துக்கொண்டு ஆராய்ந்ததில் பல தொல்லைகள் உண்டாயின.

"பெருங்கதை எங்கேஉன்தன் பேதையறி வெங்கே,
ஒருங்கதை ஆராய்ந் துதவ - அருங்கல்வி
வல்லையயோ என்றால் மறுமொழிகூ றற்கொன்றும்
இல்லையயே! என்செய்கேன் யான்"

என்று வருந்தினார். ஆசிரியப்பிரான் பெருங்கதையைப் பதிப்பித்திராவிட்டால் அந்த நூலும் இழந்த தமிழ்ச் செல்வங்களோடு மறைந்து போயிருக்கும். வழக்கமான அடிக்குறிப்புக்களோடும் விரிந்த முகவுரையோடும் பெருங் கதையை 1924-ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

பெருங்கதையை வெளியிடுவதற்கு வடமொழியில் உள்ள 'பிரகத்சம்கிதா' என்ற காப்பியத்தைத் தக்கவர்களைக் கொண்டு, அதிலுள்ள கருத்துக்களைச் சேகரித்து அதை ஆராய்கிறபோது, அது அபூர்த்தியாக இருக்கும்போது எப்படி அதைப் பதிப்பித்து முடிப்பது என்ற கவலை அதிகமாகவே உண்டாயிற்று. முழுவதுமாக இல்லா விட்டாலும் குறைவில்லை என்று அச்சிட முனைகிற போது தான் முன்பு சொன்ன பல இன்னல்களும், சங்கடங்களும் உண்டாயின.

ஒரு நூலைப் பதிப்பிக்கும்போது அதை ஆராய்வதிலும் பொருள் காண்பதிலும் உண்டான தொல்லைகளோடு மற்றவர்களால் நேர்ந்த இன்னல்கள் பல. எல்லாவற்றையும் வென்று நூல்களை வெளியிட்டதனால் தமிழ்நாடு பாக்கியம் செய்ததாயிற்று.

பெருங்கதைப் பதிப்பு *18-2-1924*-இல் வெளியாயிற்று. இந்தப் பதிப்பு வேலை ஆசிரியப்பெருமானுக்குப் பலவகையான சங்கடங்களைக் கொடுத்ததனால் அது நிறைவேறியவுடன், "செய்வினை முடித்த செம்மல் உள்ளம்" என்றபடி மிக்க இன்பம் உண்டாயிற்று. அதன் பிறகு சில தலங்களுக்குச் சென்று சிவதரிசனம் செய்துகொண்டு வந்தார்.

பெருங்கதைப் பதிப்பு வேலை ஐந்தாண்டுக் காலம் நடந்தது இவ்வளவு நீண்ட காலம் எந்தப் புத்தகத்திற்கும் ஆசிரியப்பிரான் செலவழித்தது இல்லை. இடையிடையே பல தடைகள் உண்டானது தான் இந்தக் கால தாமதத்துக்குக் காரணம். இந்தப் பெருங்கதைப் பதிப்பைத் தம் ஆசிரியருக்கு உரிமையாக்கி ஒரு பாடலை அமைத்தார்.

"உரமலி திரிசி ராமலை யுதித்த வொருமணி ஆவடு துறையாம்
புரமலி மடத்தில் இயற்றமிழ்க் குரவு புனைமணி பலதமிழ் நூல்செய்
வரமலி புகழ்மீ னாட்சிசுந் தரநா வலர்மணிக் கென்குரு மணிக்குத்
திரமலி சுவைசால் பெருங்கதைப் பதிப்பைத் திகழ்வுற வுரிமையாக் குவனே"

## 27. சிதம்பர வாழ்க்கை

### தமிழ்க் கல்லூரித் தலைவர் ஆனது

1924-ஆம் ஆண்டு சிதம்பரத்தில் ராஜா அண்ணாமலை செட்டியார் ஒரு தமிழ்க் கல்லூரியையும், ஒரு வடமொழிக் கல்லூரியையும் தொடங்க எண்ணினார். மீனாட்சி தமிழ்க் கல்லூரி, மீனாட்சி வடமொழிக் கல்லூரி, மீனாட்சி கலைக்கல்லூரி என்று மூன்று கல்லூரிகளைத் தொடங்கினார். தமிழ்க் கல்லூரிக்குத் தக்க ஒருவரை முதல்வராக நியமிக்க வேண்டுமென்று எண்ணியபோது ஆசிரியப்பெருமான் நினைவே அவருக்கு வந்தது. இது சம்பந்தமாகச் சிலரை ஆசிரியப்பெருமானிடம் அனுப்பி ஆசிரியரை எப்படியாவது அந்தப் பதவியை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லச் சொன்னார். ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று ஆர்.எஸ்.ஐயர் என்பவரையும் அழைத்துக் கொண்டு ராஜா அண்ணாமலை செட்டியார் அவர்களே தியாகராஜ விலாசத்திற்கு வந்தார். நடராசப் பெருமானைத் தினந்தோறும் சென்று வழிபட இதனால் வாய்ப்புக் கிடைக்கிறதே என்கிற நினைவினால் அப்பொறுப்பை ஏற்றுக்கொள்வதாக ஆசிரியப்பெருமானும் அவர்களது வற்புறுத்தலுக்கு இணங்கினார். சிதம்பரத்திலுள்ள தீட்சிதர்களோ, ஆசிரியப்பெருமான் அங்கே வருவது அறிந்து அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்.

1924-ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆசிரியப்பெருமான் சிதம்பரத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். தெற்கு ரத வீதியில் ஓரிடத்தில் அவர் தங்குவதற்குரிய வசதிகளைச்செய்து கொடுத்திருந்தார்கள். மீனாட்சிதமிழ்க்கல்லூரி, ஆசிரியர் தங்கியிருந்து இல்லத்திலேயே ஆரம்பமாகியது. முன் குறிப்பிட்டுள்ள கோதண்டராமையர் என்கிற மாணவர் அவருக்கு உதவியாக இருந்தார். சமையலுக்கு ஒருவரை நியமித்துக் கொண்டார். அப்போது மீனாட்சி கலைக் கல்லூரி முதல்வராக வரலாற்று வித்தகராகிய நீலகண்ட சாஸ்திரியார் இருந்தார். அவரும் ஆசிரியப்பெருமானுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து தந்தார். ஆசிரியப்பெருமானுக்குஅடுத்தபடிதிரு.பொன்னோதுவார்என்பவர்தமிழ்க் கல்லூரி ஆசிரியர் ஆனார்.

### ஓரியண்டல் மகாநாடு

1924-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 22-ஆம் தேதி முதல் 24-ஆம் தேதி வரையில் 3-ஆவது ஓரியண்டல் மகாநாடு சென்னையில் செனெட்

மண்டபத்தில் நடைபெற்றது. அலகாபாத் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் டாக்டர் கங்காநாத் ஜா தலைமை வகித்தார். சிதம்பரத்திலிருந்து ஆசிரியப்பெருமானை அந்த மகாநாட்டிற்கு வரவேண்டுமென்று தலைவர்கள் அழைத்தார்கள். அப்படியே ஆசிரியப்பெருமான் சென்னைக்கு வந்து ஒரு வாரம் தங்கி மகாநாட்டில் கலந்துகொண்டு சில பயனுள்ள யோசனை களைத் தெரிவித்தார். மகாநாடு நிறைவேறிய பிறகு சிதம்பரம் சென்றார்.

### திருவிடைவாயில் திருப்பதிகம்

ஆசிரியப்பெருமானிடம் கல்லூரியில் படித்தவர் டி.ஜி.ஆராவமுத ஐயங்கார் என்பவர். அவர் சில காலம் ஒரு கல்லூரியில் ஆங்கில ஆசிரியராக இருந்தார். பின்னர் வக்கீல் தொழில் செய்தார். அவருக்குக் கல்வெட்டுப் பரிசோதனையில் நல்ல பயிற்சி உண்டு,

கொரடாச்சேரிக்கு அடுத்த திருவிடைவாயில் சிவபெருமான் ஆலயத்தில் ஒரு கல்வெட்டில் தேவாரப் பதிகம் ஒன்று இருந்ததை அவர் கண்டு பிடித்தார். அந்தத் தேவாரம் வழக்கத்தில் இருந்த பதிப்பில் காணப் பெறவில்லை. அவர் அந்தப் பதிகத்தைப் பிரதி எடுத்துக்கொண்டு வந்து ஆசிரியப்பெருமானிடம் காட்டினார். அவர் அதைத் திருத்திக் கொடுக்க, பின்பு அதனை வெளியிட்டார். அதுவரைக்கும் தெரியாதிருந்த அந்தப் பதிகம் பிறகு எல்லோரும் படித்துப் பாராயணம் செய்யும்படியாக அமைந்தது. நம்பியாண்டார் நம்பி தேவாரப் பதிகங்களை வரையறை செய்து திருமுறை களாக வகுத்தபோது கிடைக்காத அந்தப் பதிகம் கிடைத்ததை அறிந்த அன்பர்கள் மகிழ்ந்தனர். மறைந்துபோன பல தேவாரப் பதிகங்களில் சிலவேனும் இவ்வாறு கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று ஆசிரியரும் பிறரும் எண்ணினார்கள்.

### பொற்கிழியும் பட்டமும் பெற்றது

1925-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 8-ஆம் தேதி அன்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 24-வது ஆண்டு விழா நடந்தது. அதற்கு ஸர் சி.பி.இராமசாமி ஐயர் தலைமை தாங்கினார். ஒரு வாரத்திற்கு முன்பே ஆசிரியப்பெருமான் அதில் கலந்துகொள்ளும் பொருட்டு மதுரையை அடைந்தார்.

ஆசிரியப்பெருமான் செய்துவரும் தமிழ்த் தொண்டுக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்று மதுரையில் வக்கீலாக இருந்த டி.ஸி. சீநிவாசையங்கார் எண்ணினார். மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவராகவும் அவர் அப்போது இருந்தார். அந்த விழாவில் சீநிவாசையங்கார் தாம் பலரிடம் தொகுத்து ஈட்டிய பொற்கிழியை ஆசிரியப்பெருமானுக்கு வழங்கினார்.

தமக்கு நலம் செய்தவர்களை யெல்லாம் மறவாமல் நன்றி பாராட்டும் இயல்புடையவர் ஆசிரியர் அப்போது பொற்கிழி வழங்கினவர்கள் பெயர் களை எல்லாம் தாம் பதிப்பித்த நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்பில் ஆசிரியப்பெருமான் சேர்த் திருக்கிறார். அந்தப் பதிப்பு 1925-ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. அதன் முகவுரையில் "8-6-1925இல் பொற் கிழி அளித்து உதவிய மகோபகாரி களின் பெயர்கள்" என்ற தலைப்பில் உதவி செய்தவர்களின் பெயர்கள் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன.



சி.பி.இராமசாமி ஐயர்

அவ்விழாவில் காஞ்சிகாமகோடி பீடத்து ஸ்ரீமத் சங்கராசார்ய சுவாமிகள் ஆசிரியருக்கு இரட்டைச் சால்வையும், தோடாவும் அனுப்பிக் கௌர வித்தார்கள். மேலும் ஆசிரியப்பெருமானுக்கு, "தாக்ஷிணாத்ய கலாநிதி" என்னும் பட்டத்தையும் அளிக்க ஏற்பாடு செய்தார்கள். பெருந்தவ முனிவராகிய அப்பெருமான் அருளிய அந்தப் பட்டத்தைப் பொன்னேபோற் போற்றித் தம் பதிப்பில் தம் பெயருடன் சேர்த்து வெளியிட்டார்.

## தக்கயாகப் பரணி

சிதம்பரத்தில் ஆசிரியர் இருந்த காலத்தில் கல்லூரியில் பாடம் சொல்லுகிற நேரம் போக மற்ற நேரங்களில் புத்தகப் பதிப்பு வேலைகளிலும், நூலாராய்ச்சி யிலும் இடைவிடாது கவனம் செலுத்தி வந்தார். குறிப்பாகத் தக்கயாகப் பரணியைப் பதிப்பிக்க வேண்டுமென்று அதை ஆராய்ச்சி செய்து வந்தார். ஒட்டக்கூத்தர் இயற்றிய அந்த நூலைக் காட்டிலும் அதன் உரை சிறப்பாக அமைந்திருத்தமையினால், அந்த உரையின் பதிப்பு வெளிவந்தால் தமிழ் மக்களுக்கு மிகவும் நலமாக இருக்குமென்று எண்ணினார். அதற்கு வேண்டிய குறிப்புக்களைத் தொகுத்திருந்தார்.

அப்போது ஒரு புலவர் ஆசிரியரிடம் வந்து தாம் தக்கயாகப்பரணியைப் பதிப்பிக்க விரும்புவதாகவும், ஆசிரியரிடம் இருக்கும் பிரதியையும், குறிப்புக் களையும் கொடுத்துதவ வேண்டுமென்றும் வற்புறுத்தினார்.

பல காலமாகத் தாம் ஆராய்ந்து வந்த அந்த நூலைத் தாமே வெளியிட வேண்டுமென்று ஆசிரியப்பெருமான் எண்ணியிருந்தார். பல முறை அந்தப் புலவர் வந்து வற்புறுத்தவே, ஒரு நாள் அவரிடம், "நானே இறைவன்



॥ श्रीः ॥

महतस्तमसः पारे पुरुषं ह्यतितेजसम् ।
यं ज्ञात्वा मृत्युमत्येति तस्मै ज्ञेयात्मने नमः ॥

[illegible] ।

श्रीयुक्त [illegible]

[illegible] ।

विद्यते यावदत्र परमपवित्रे भारते वर्षे संसारसागरपारिक्रमहदशेषशान्ति-मुख्यनिदानस्य परमात्मसाक्षात्कारस्यपनिर्व्वाणसोपानस्य [illegible]-कारणस्य शिष्टानुष्ठितवर्णाश्रमाचारस्य सम्प्रति तत्त्वानुशीलनकर्तव्योपेक्षा-[illegible]दिशेषप्रच्छन्नज्ञानस्य सनातनधर्म्मस्य पुनः सम्यगभ्युदयाय सद्विद्याप्र-चाराय सार्व्वधर्म्मस्य पुनः प्रतिष्ठापनाय आर्य्यजातेः सर्व्वविधायाः श्रियः समभि-वर्द्धनाय च नरपतिगणपरिपोषिता विद्वद्वृन्दनिषेविता निखिलसम्प्रदायानुमोदि-तानन्तर्भावितदेशान्तर्देशा निखिलधर्म्मसमितिप्रतिनिधिः श्रीभारतधर्म्मम[illegible]-लाभिधाना श्रीमती महती समितिः ।

एषा खलु समितिरियं केवलं विद्वांसो धर्म्मभावनिरता भाषाभ्युदयपटवो वर्त्तन्ते तान्सर्व्वानेव समुत्साहयितुमतियत्नशीलेति भवत [illegible] नैपुण्येन गौरवमावहमाना गुणग्राहिणी धर्म्मसभेयं भवन्तं गुणानुरूपं [illegible] इत्युपाध्यलङ्कारेणालङ्कृत्य परमपरितोषमातनुते कामयते च सर्व्वशक्तिमतो भग-वतश्चरणारविन्देषु भवत आध्यात्मिकोन्नतिश्रेयादिति ।

[illegible]
श्रीभारतधर्म्ममहामण्डलप्रधानाध्यक्षः ।
[illegible]
[illegible]
प्रधानाध्यक्षः ।

[illegible]
[illegible]
श्रीभारतधर्म्ममहामण्डलस्य ।

தாக்ஷிணாத்ய கலாநிதி சான்றிதழ்

திருவருளால் அதை விரைவில் வெளியிடலாம் என்று இருக்கிறேன். என் ஆயுட்காலத்தில் அது முடியாது போகுமாயின் இந்தக் கையெழுத்துப் பிரதியையும், நான் தொகுத்து வைத்திருக்கும் ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் தங்களிடமே கொடுக்கும்படி ஏற்பாடு செய்கிறேன்" என்று சொன்னார். "அப்படி ஒன்றும் நேரவேண்டாம். தாங்களே அதைப் பதிப்பியுங்கள்" என்று சொல்லிப் போய்விட்டார் அவர். தமிழ் நூல்களை ஆசிரியப்பிரான் பதிப்பித்ததனால் புகழும் பொருளும் பெற்றாரென்று எண்ணிப் பலர் சில தமிழ் நூல்களைப் பதிப்பிக்க முயன்றார்கள். அப்படி முயன்றபோது, அது எவ்வளவு சிரமமான காரியமென்று உணர்ந்து கொண்டு முயற்சியைக் கைவிட்டுவிட்டார்கள்.

## புலவர்களுக்குப் பட்டம் வழங்கியது

1925-ஆம் ஆண்டு புதுக்கோட்டையில் இருந்த சன்மார்க்க சபையின் 16-ஆவது ஆண்டு விழா மூன்று நாட்கள் சேர்ந்தாற்போல நடந்தது. ஆசிரியப் பெருமான் அவ்விழாவுக்குத் தலைமை தாங்கினார். இந்த விழாவில்தான் இராமநாதபுரம் சம்ஸ்தானத் தமிழ்ப் புலவர் ரா.ராகவையங்கார் அவர்களுக்கு "மகாவித்துவான்" என்னும் பட்டமும், மகிபாலன்பட்டி கதிரேசன் செட்டியார் அவர்களுக்குப் "பண்டிதமணி" என்ற பட்டமும் அளிக்கப்பெற்றன அவர்கள் ஆசிரியப்பெருமான் அவர்களது திருக் கரத்தினால் அந்தப் பட்டங்களைப் பெற்றதற்கு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தனர். தக்கவர்களுக்கு ஏற்ற வகையில் சிறப்புச் செய்ய வேண்டு மென்றும் அவர்கள் புகழை உலகம் அறியச் செய்ய வேண்டுமென்றும் கூறி வாழ்த்தினார் ஆசிரியர்.



மு.கதிரேசன் செட்டியார்

## கவர்னர் கோஷன் வருகை

1926-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சென்னைக் கவர்னர் கோஷன் துரை சிதம்பரத்திற்கு விஜயம் செய்தார். அப்போது மீனாட்சி காலேஜைச் சார்ந்த ஒரு புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அப்போது அவரை வரவேற்பதற்கு ஒரு பாடல் வேண்டுமென்று உள்ளூர்க்காரர்கள் விரும்பி னார்கள். சர்க்கரைப் புலவரிடம் சொல்லி ஒரு பாடலை எழுதச் சொன்னார்கள். அவர் தமிழ் மரபுப்படி கவர்னருடைய மனைவியைப் பாராட்டியிருந்தார். அதில் அந்தப் பெருமாட்டியின் நகிலைச் சிறப்பித்துப் பாடியிருந்தார். இந்தக் காலத்திற்கு அத்தகைய வருணனை ஏற்றதன்று என்று சொல்லி ஆசிரியப்பெருமானே ஓர் அகவற்பா இயற்றி வரவேற்புப் பத்திரத்தை எழுதி வசித்துவந்தார்.

## பாடற் கடிதங்கள்

7-1-1927 அன்று பெரும்பண்ணையூர் ஏ.எம்.பெரியசாமி முத்தைய உடையார் என்பவர், 'தமிழ்த் தெய்வத்திற்கு அர்ப்பணம்' என்று ஒரு தொகையை ஆசிரியப்பெருமானுக்கு அனுப்பி வைத்து, ஒரு வெண்பாவையும் எழுதி அனுப்பினார்.

" அன்னையினும் மிக்கதிக அன்புள்ள அத்தாலே
நின்னைவந்து தோத்தரிக்க நேடினேன் - அன்னதற்கு
மாற்றங்கள் மிக்குண்டு; மானிடர்கள் செய்கையல்ல;
சாற்றினே னுண்மையைத் தான்,

அதற்கு விடையாக ஆசிரியப்பெருமான்,

"கரும்பன்றி யமுதமும்நேர் தமிழ்நயத்தை
அறிந்துவந்து காத்தோம் பற்கண்
பெரும்பன்றி யூர்ப்பெரிய சாமிமகி
பாலனைநேர் பெற்றி யோர்யார்?
சுரும்பன்றி மலர்த்தேனின் சுவையறியும்
பொருளுளதோ? துனைந்தன் னான்சேர்
விரும்பன்றி யொருசிறிதுங் கவலையடை
யேல்நெஞ்சே விளம்பி னேனே."

"தக்கமுக மலர்ச்சியுடன் உபசரிப்பார்;
மிகப்புகழ்வார்; சாமீ என்பார்;
அக்கநிகர்தமிழ்க்குழைப்பார் உனைப்போல
இலையென்ன அறைவா ரன்றி
இக்கலியிற் பெரும்பன்றி யூர்ப்பெரிய
சாமிமுகில் என்ன நாளும்
மிக்கபொருள் அளித்தொன்றும் வேண்டாமல்
தமிழ்புரப்பார் விளம்பில் யாரே?"

என்று இரண்டு பாடல்களை எழுதி அனுப்பினார்.

ஆசிரியப்பெருமான் இப்படிப் பலருக்கும் பல சமயம் செய்யுளாகவே கடிதங்களை எழுதியனுப்புவார்.

1927-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2-ஆம் தேதி மீனாட்சி தமிழ்க் கல்லூரியில் சேது சம்ஸ்தான வித்வான் ரா.ராகவையங்கார், 'கம்பர் கூறும் பெண்பாலியல்பு' என்னும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு ஆற்றினார். அவ்விழாவிற்கு ஆசிரியப்பெருமான் தலைமை தாங்கினார். பெண்ணைச் சிறுமையாக எண்ணுவோர் உள்ள இந்தக் காலத்தில் இந்தச் சொற்பொழிவைக் கேட்டிருந்தால் தம் எண்ணத்தை மாற்றிக் கொள்வார்கள் என்று அவரைப் பாராட்டினார்.

# 28. சிதம்பரத்தை விட்டு நீங்குதல்

சில நாட்களாகவே ஆசிரியருக்கு உடல்நலம் சரியாக இல்லாமையினால் சிதம்பரத்தைவிட்டுப் போக வேண்டுமென்று எண்ணி இருந்தார். எனவே ரா.ராகவையங்கார் வந்தபோது அவரையே மீனாட்சி கல்லூரி முதல்வராக வைத்துவிட்டுத் தாம் விலகிக் கொள்ளலாம் என்ற எண்ணம் வலிமை யுடையதாயிற்று. ராகவையங்காரிடம் அந்தக் கருத்தைச் சொன்னபோது அவர் அதற்கு இணங்கவில்லை. மதுரையிலிருந்து சிதம்பரத்திற்கு வந்திருந்து வசித்தல் சாத்தியமில்லை என்று தெரித்துவிட்டார். மதுரையில் இருந்தே தமிழ்ப் பணியாற்ற அவர் விரும்பினார்.

அதற்குப் பிறகு பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்களுக்கு ஆசிரியப்பெருமான் எழுதி, சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கல்லூரி முதல்வராக இருந்து பணியாற்ற வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அவர் அப்போது தான் தம் ஊரில் ஒரு வீடு கட்டிக் கொண்டிருந்தார். அதை முடிக்காமல் வருவதற்கில்லை என்று அவரும் மறுத்துவிட்டார்.

ஆசிரியப்பெருமானுக்கு வயிற்றில் வலி உண்டாயிற்று. உணவு சரியாகச் சீரணம் ஆகவில்லை. அதனால் சிதம்பரத்தை விட்டுச் சென்னைக்குப் போக வேண்டுமென்ற எண்ணம் தோன்றியது தாம் மீனாட்சி கல்லூரி முதல்வர் பதவியிலிருந்து விலக விரும்புவதை அண்ணாமலை செட்டியாருக்குத் தெரிவித்தார். அப்போது அவர், "உங்களுக்கு விருப்பம் உள்ள யாரையாவது நியமனம் செய்துவிட்டு நீங்கள் விலகிக் கொள்ளலாம்" என்று சொன்னார்.

தம்முடன் பல காலமாகப் பழகியவரும், தமக்கு அடுத்த படியாக மீனாட்சி கல்லூரியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த வருமான திரு பொன்னோதுவார் அவர்களையே முதல்வராக நியமனம் செய்யலாம் என்று ஆசிரியப்பெருமான் தெரிவித்தார். அந்தக் கருத்தை ஏற்றுக்கொண்டு அவரையே சிதம்பரம் மீனாட்சி தமிழ்க்கல்லூரி முதல்வராக நியமித்தார்கள். ஆசிரியர் அவரிடம் தம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, சென்னை வந்து சேர்ந்தார்.

## இழந்தவற்றை மீட்டுத் தந்தது

யாழ்ப்பாணத்தில் சாமிநாத பண்டிதர் என்ற ஒருவர் இருந்தார். அவர் திருமுறைகளை நல்ல முறையில் அச்சிட்டிருந்தார். சில இடங்களில்

பாடபேதங்களையும் கொடுத்திருந்தார். சிலருக்கு அது பிடிக்கவில்லை. என்றாலும் ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து உள்ளது உள்ளபடியே பதிப்பித் திருந்தார்.

அவர் சிதம்பரத்திற்கு வரும்போதெல்லாம் ஆசிரியப்பெருமானைச் சந்தித்துப் பேசிவிட்டுப் போவது வழக்கம். அப்படி அவர் ஒரு சமயம் வந்தபோது தம்முடைய பண்டங்களை எல்லாம் ரயிலில் இழந்துவிட்டார். புத்தகங்களும், வேறு சில பண்டங்களும் பல காலமாகச் சேர்த்து வைத்தவை ஆதலின், அவற்றை இழந்ததனால் அவருக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று. ஆசிரியரைச் சந்தித்தபோது அவர் முகம் வாட்டமுற்றிருந்தது. "ஏன் ஒரு விதமாக இருக்கிறீர்கள்?" என்று ஆசிரியர் கேட்க, அவர் தாம் பண்டங்களை இழந்ததைச் சொன்னார்.

ஆசிரியப்பெருமான் உடனே ரயில்வே ஸ்டேஷன் சென்று ஸ்டேஷன் மாஸ்டரிடம் புகார் ஒன்றைக் கொடுக்கச் செய்தார். தக்கபடி விசாரணை செய்யக் கேட்டுக் கொண்டு இழந்த பொருளை மீட்டுத் தர வேண்டுமென்று வற்புறுத்தினார். ஆசிரியரைக் கண்டவுடன் அவருக்கு அவர்கள் காட்டிய மரியாதையையும், தக்க விசாரணை செய்ய உடனடியாக அங்கங்கே செய்தி அனுப்பி வைத்ததையும் கண்டு சாமிநாத பண்டிதர் வியந்தார். இரண்டொரு நாள்களில் அவர் இழந்த பொருள்கள் எல்லாம் கிடைத்து விட்டன. அவர் மிக மிக மகிழ்ந்து, "கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பதை உங்களிடந்தான் கண்டேன்" என்று பாராட்டினார்.

### நான் சிதம்பரத்தில் ஆசிரியரைத் தரிசித்தது

பள்ளிப் படிப்பு முடிந்தபிறகு நான் வேதாந்த நூல்களைப் படித்து வந்தேன். அதனால் துறவை மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. அக்காலத்தில் சேந்தமங்கலத்தில் ஸ்ரீசுயம்பிரகாசப் பிரம்மேந்திர சரஸ்வதி என்னும் அவதூத சுவாமிகள் தத்தகிரி என்ற குன்றில் எழுந்தருளியிருந்தார். அவருடைய சீடர்களில் ஒருவராகிய சங்கரானந்தர் என்பவர் எங்கள் ஊருக்கு வந்திருந்தார். எந்தத் துறவி வந்தாலும் அவரைப் பார்த்துப் பழகும் இயல்பு என்னிடம் இருந்தது. சங்கரானந்தர் வந்திருந்தபோது என்னுடைய விருப்பத்தைச் சொன்னேன். அவர் அப்படியே செய்யலாம் என்றார்.

சேந்தமங்கலம் செல்ல வேண்டும் என்ற என் கருத்தை என் தாய் தந்தையரிடம் சொன்னபோது, அவர்கள் அதற்கு உடன்படவில்லை. என்றாலும் எனக்குச் சேந்தமங்கலம் போய்ச் சுவாமிகளிடம் துறவு பெறவேண்டும் என்ற விருப்பம் நீங்கவில்லை. ஆகவே ஒரு நாள் யாரிடமும் சொல்லாமல்

ஊரிலிருந்து புறப்பட்டு விட்டேன். சேந்தமங்கலத்துக்கு நாமக்கல் வழியாகச் செல்ல வேண்டும். மோகனூரிலிருந்து சேந்தமங்கலம் 20 மைல் தூரம் இருக்கும். கால் நடையாகவே நடந்து ஒரு நாள் சேந்தமங்கலம் சென்று தத்தகிரியை அடைந்தேன். சுவாமிகளை வணங்கி, "எனக்குச் சந்நியாசம் தர வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டேன். அப்போது எனக்குத் தம்பி பிறக்கவில்லை. என்னுடைய 20-ஆவது பிராயத்தில் தான் பிறந்தான்.

என்னுடைய விண்ணப்பத்தைக் கேட்ட சுவாமிகள், நான் என் குடும்பத்திற்கு ஒரு மகன் என்று அறிந்து, "ஏகபுத்திர விஷயம் இது உனக்குத் துறவு அளிக்க இயலாது" என்று சொல்லிவிட்டார். "இங்கே ஏதேனும் பணி செய்து கொண்டிருக்கிறேன்" என்றேன். அதற்கும் அவர் உடன்படவில்லை. "எனக்கு வேறு என்ன வழி?" என்று கேட்டேன். "உபாசனை செய்" என்றார். அதுவே குரு உபதேசமாகக் கொண்டு அதுமுதல் முருகப்பெருமானை வழிபடத் தொடங்கினேன். மோகனூருக்கு மீண்டும் வந்துவிட்டேன். ஆயினும் சேந்தமங்கலத்துக்குப் போகும் எண்ணம் மட்டும் என் உள்ளத்தில் ஊன்றியிருந்து.

சில காலம் கழித்து மோகனூரில் உள்ள காந்தமலை என்னும் குன்றில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான் சந்நிதியில் "அன்பு" என்பது பற்றிப் பேசினேன். அதுதான் என்னுடைய முதற் சொற்பொழிவு.

அதைக் கேட்கும் கூட்டத்தில் சேந்தமங்கலத்திலிருந்து வந்திருந்த கிச்சு உடையார் என்பவர் இருந்தார். என் பேச்சு முடிந்தவுடன் என்னை அணுகி, "சேந்தமங்கலத்துக்கு வந்து சில பிள்ளைகளுக்கு ஆங்கிலமும் தமிழும் கற்பிக்க முடியுமா? உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களெல்லாம் செய்து தருகிறோம்" என்றார். சேந்தமங்கலத்துக்குச் செல்லும் வாய்ப்புக் கிடைத்தது பற்றி மிக மகிழ்ந்தேன். முருகன்தான் இப்படி ஒரு வழி காட்டிகிறான் என்று நம்பினேன். ஆகவே கிச்சு உடையார் கூறியதற்கு ஒப்புக்கொண்டேன். ஒரு வேலையை மேற்கொண்டு செல்வதை அறிந்து என் தாய் தந்தையர் மறுப்புக் கூறவில்லை.

ஒரு நாள் நான் சேந்தமங்கலம் போய்ச் சேர்ந்தேன். அந்த ஊர் மிட்டாதார் ஐராவத உடையார் என்பவர் மிக்க செல்வாக்கு உடையவர். மல்லிகைச் செடிகள் சூழ்ந்த நந்தவனத்துக்கு நடுவில் தெய்வீக ஆசிரமம் என்பதை அமைத்திருந்தார். யாரேனும் துறவியோ பெரியவரோ வந்தால் அங்கே தக்குவார்கள். அங்கே ஒரு புத்தக சாலையும் இருந்தது. நான் அப்போது பிரமசாரி. அங்கே நான் தங்கியிருந்தேன்.

சேந்தமங்கலத்துக்குச் சென்று சில பிள்ளைகளுக்கு ஆங்கிலமும் தமிழும் சொல்லிக் கொடுத்து வந்தேன். திருப்புகழ், கந்தர் அலங்காரம் ஆகியவற்றைப் பற்றிச் சொற்பொழிவுகள் செய்து வந்தேன். அடிக்கடி தத்தகிரி சென்று அவதூத சுவாமிகளைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

நான் சேந்தமங்கலம் வந்தபோது அங்கே நிஜானந்த சரஸ்வதி என்கிற துறவி ஆசிரமத்தில் தங்கியிருந்தார். அவரைக் காசி சுவாமிகள் என்றும் அழைப்பர். காசியில் சில காலம் இருந்தவர். அந்த ஆசிரமத்தில் அவருடன் பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

நான் தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்றதில்லை. பள்ளிக் கூடத்தில் பாடமாக இருந்த சில கம்பராமாயணச் செய்யுட்களையும் பிறவற்றையும் கூர்ந்து படித்திருந்தேன். அவற்றைப் பற்றிப் பேசுவேன். தமிழார்வம் மிகுதியாக இருந்தது. நான் அப்போது வெண்பா முதலிய செய்யுட்களை இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தேன். என்னிடம் காசி சுவாமிகள் மிக்க அன்பு கொண்டி ருந்தார். அவருக்கு அசிரியப்பெருமானை நன்றாகத் தெரியும். தம்மிடம் பாடம் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பிள்ளை சிதம்பரம் சென்று ஆசிரியரிடம் பாடம் கேட்டு முன்னுக்கு வந்த செய்தியைச் சொன்னார். "நீங்களும் அவரிடம் சென்றால் அவர்கள் உங்களை அன்புடன் ஏற்றுக்கொள்வார்கள். உங்களுடைய தமிழ் அறிவும் பெருகும்" என்று என்னிடம் சொன்னார். அவர் சொன்ன கருத்து என் உள்ளத்தில் ஊன்றி முளைத்து வளர்ந்தது. முருகப்பெருமான் திருவருள் இருந்தால் ஆசிரியப் பெருமானிடம் செல்லலாம் என்ற அவா எனக்கு உண்டாயிற்று.

சேந்தமங்கலம் மிட்டாதார் ஐராவத உடையார் என்பால் மிகவும் அன்பு உடையவர். அவர் பெரும்பாலும் என்னுடன் இருந்து என்னுடைய நன்மையைக் குறித்தே பேசுவார். நான் நன்றாகச் சொற்பொழிவு ஆற்றுவதையும், செய்யுள் இயற்றுவதையும் கண்டு மிகவும் வியப்பு அடைவார். நான் மேலும் பல தமிழ் நூல்களைக் கற்றுப் பெரும்புலவராக வரவேண்டுமென்ற ஆசை அவருக்கு உண்டாயிற்று. என்பால் தாயன்பு உடையவராகிய அவர், காசி சுவாமிகள் நான் ஆசிரியர் அவர்களிடம் போகலாம் என்று சொன்னவுடன் அப்படியே செய்வதற்கு வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ள ஒப்புக்கொண்டார்.

# 29. நான் ஐயரவர்களைத் தரிசித்தது

1927-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் தைப்பூசம் வந்தது. ஐராவத உடையாரும், வேறு சிலரும் வடலூர்த் தைப்பூச விழாவுக்காக ஒரு காரில் புறப்பட்டோம். வடலூர் சென்று இராமலிங்க சுவாமிகள் நிறுவிய சபையைத் தரிசித்தவிட்டு, சிதம்பரம் சென்று ஆசிரியர் அவர்களைப் பார்க்கலாம் என்பது எங்கள் உத்தேசம்.

நான் சேந்தமங்கலம் செல்வதற்குமுன் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் ஒரு சமயம் ஒரு விழாவிற்குச் சேந்தமங்கலம் வந்திருந்தார்கள். அவரைப் பற்றித் தெரிந்தது முதல் எனக்கு அந்தச் சுவாமிகளிடம் பாடம் கேட்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று; என்றாலும் ஆசிரியப்பெருமானைப் பற்றிக் கேட்ட பிறகு ஆசிரியரிடமே போக வேண்டுமென்ற ஆசை மீதூர்ந்திருந்தது.

நாங்கள் எல்லோரும் வடலூர் சென்று தைப்பூசத்தைத் தரிசித்துக் கொண்டு அப்படியே சிதம்பரம் சென்றோம். அப்போது ஆசிரியர் சிதம்பரம் மீனாட்சி தமிழ் கல்லூரியில் இருந்தார். சிதம்பரத்தில் ஆசிரியரிடம் தமிழ் பயிலும் நடேச முதலியார், ஆறுமுக முதலியார் ஆகிய இருவரையும் எங்களுடன் வந்த கிச்சு உடையாருக்குத் தெரியும். எனவே நாங்கள் அவர்களுடன் ஆசிரியப் பெருமான் தங்கியிருக்கும் இல்லத்தை அறிந்துகொண்டு அங்கே சென்றோம்.



கி.வா.ஜகந்நாதன்

அந்த வீட்டுத் திண்ணையில் நாகப்ப செட்டியார் என்பவர் அமர்ந்திருந்தார். நான் ஆசிரியர் அவர்களைப் பார்த்தது இல்லை. ஆகையால் அவரையே ஆசிரியப் பெருமான் என்று நினைத்து மிக்க

பணிவுடன் நெருங்கினேன். "ஆசிரியப்பெருமான் உள்ளே இருக்கிறார்கள்" என்று அவர் சொல்லவே, நாங்கள் உள்ளே போனோம்.

காரில் நாங்கள் ஐந்தாறு பேர்களாகப் போனதால், "எங்கே இவ்வளவு பேர்களும் வந்திருக்கிறீர்கள்?" என்று விசாரித்தார்கள். அப்போது நான் சட்டை போடுவதில்லை. கழுத்தில் பெரிய ருத்திராட்ச மாலை அணிந்து கொண்டிருப்பேன். சட்டையில்லாமல் கழுத்தில் ருத்திராட்சத்துடன், நெற்றி நிறைய விபூதி பூசிக்கொண்டிருந்த என் தோற்றத்தைப் பார்த்தவுடன் ஆசிரியப் பெருமானுக்கு என்பால் ஒருவகை அன்பு ஏற்பட்டிருக்க வேண்டும். "இவர் நன்றாகக் கவிதை பாடுவார். தமிழில் நன்றாகப் பேசுவார். உங்களிடம் பாடம் கேட்கவேண்டுமென்று விரும்புகிறார். அதற்காகத்தான் இவரை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறோம்" என்று என்னுடன் வந்தவர்கள் சொன்னார்கள்.

அப்போது ஆசிரியப்பிரான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். பாடம் கேட்க வேண்டுமென்று பலரும் அவரிடம் வருவது உண்டு என்றும், சில காலம் படித்துவிட்டுப் போய் விடுவார்கள் என்று அப்படிச் செய்வது சரியல்ல; தொடர்ந்து இருந்து பாடம் கேட்கிறவர்களிடந்தான் தமக்கு அன்பு உண்டாகும் என்றும் தெரிவித்தார். "அதுபோல இன்றி நான் எப்போதும் தங்களுடன் இருந்து பாடம் கேட்க விரும்புகிறேன்" என்று விண்ணப்பித்துக் கொண்டேன்.

"நான் இப்போது இந்தக் கல்லூரியிலிருந்து விலகிச் சென்னைக்கு போகப் போகிறேன். உனக்கு இந்தக் கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்கு விருப்பமா? அல்லது என்னிடம் இருந்து பாடம் கேட்பதற்கு விருப்பமா? என்று ஆசிரியப்பெருமான் என்னைக் கேட்டார்.

"தங்களிடம் இருந்து பாடம் கேட்பதற்கே விருப்பம்" என்று தெரிவித்தேன். உடனே ஏதாவது ஒரு பாடலைச் சொல்லும்படி சொன்னார். நான் கம்பராமாயணத்திலிருந்து ஒரு பாடலைச் சொல்லி, அதன் பொருளையும் பொதுவாக விளக்கினேன். அந்தப் பாடல் கூனியின் கூற்று.

"ஆடவர் நகையுற ஆண்மை மாசுறத்<br>
தாடகை எனும்பெயர்த் தைய லாள்படக்<br>
கோடிய வரிசிலை இராமன் கோமுடி<br>
சூடுவன் நாளைவாழ் விதெனச் சொல்லினாள்"

என்பது அந்தப் பாடல். "இதில் ஏதாவது நயம் சொல்ல முடியுமா? என்று ஆசிரியர் கேட்டார்.

"ஆடவர் என்பதை ஆள் தவர் என்று பிரித்து ஆடவர் நகையுற என்பதற்கு, பொறிகளை அடக்கி ஆண்ட தவசிகள் மகிழ்ச்சிகொள்ள என்ற பொருள் இதனுள் அடங்கியிருக்கிறது" என்று சொன்னேன். "ஆண்மை மாசு உறுஅத் தாடகை எனும் பெயர்த் தையலாள் எனச்சேர்த்து ஆண்மக்களுடைய வீரம் குறைபடுவதற்குக் காரணமான அந்தத் தாடகையைக் கொன்றான் என்றும் கொள்ளலாம். பிறரைப் பற்றிக் கோள் சொல்கிறவர்கள் அகப்பட்டுக் கொண்டால், 'நான் இந்தப் பொருளில் அல்லவா சொன்னேன்' என்று சொல்வது வழக்கம். அப்படி இதில் ஓர் பொருளை உள் வைத்துச் சொன்னாள்" என்றேன். அன்றியும் கோடிய வரிசிலை இராமன் என்பதைக் கோடிய இராமன், வரிசிலை இராமன் என்று பிரித்துக் கூட்டி இராமனை இகழ்ந்ததாகவும் கொள்ளலாம் என்றேன். அதைக் கேட்டு ஆசிரியர் மிகவும் உவகை அடைந்தார். "அட்சர லட்சம் கொடுக்கலாம்" என்று சொன்னார். அது என்னை ஊக்கப்படுத்துவதற்காகச் சொன்ன வார்த்தை.

"தாடகையெனும் பெயர்த் தையலாள் என்பதிலே தையலாள் என்பது இளம்பெண் என்னும் பொருளுடையது. ஓர் இளம் பெண்ணைக் கொலை செய்தான் என்ற பொருளைத் தையல் என்பது குறிக்கும். வைத்தீசுவரன் கோவிலில் உள்ள பாலாம்பிகையைத் தையல்நாயகி என்று சொல்வதனால் தையல் என்றால் இளம்பெண் என்பதை உணர்ந்து கொள்ளலாம்" என்று ஆசிரியர் சொன்னார்.

பேசும்போதே எவ்வளவு நுட்பமான கருத்தைத் தெரிவிக்கிறார் என்று எனக்கு வியப்பு உண்டாயிற்று. அப்போதே பாடம் கேட்கத் தொடங்கி விட்டது போன்ற உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. தாம் சென்னைக்குப் போன பிறகு சென்னைக்கு வந்தால் தம்முடன் இருந்து படிக்கலாம் என்று ஆசிரியப்பெருமான் கருணை உள்ளம் புரிந்தார். என்றாலும் சென்னையில் நம் செலவுக்கு என்ன பண்ணுவது என்ற எண்ணம் எனக்கு இருந்தது. நாங்கள் சேந்தமங்கலம் திரும்பினோம். ஊருக்கு வந்தவுடன், சென்னை வந்து அவரிடம் தமிழ் படிக்க வேண்டுமென்ற என் விருப்பத்தை ஒரு பாடற் கடிதத்தினால் ஆசிரியருக்குத் தெரிவித்தேன்.

சேந்தமங்கலம் பஞ்சாயத்து யூனியனில் நான் ஓர் எழுத்தராக இருந்தேன். அப்போது எனக்கு 20 ரூபாய் சம்பளம். சில பேர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்ததனால் எனக்கு வேண்டிய உணவுப் பண்டங் களை எல்லாம் அவர்கள் அளித்தார்கள். எனவே எனக்குக் கிடைத்த சம்பளத்தைச் சேமித்து வைத்தேன். நூறு ரூபாய் மொத்தமாகச் சேர்ந்தது. அதன்பிறகு அங்கிருந்து புறப்பட்டுச் சென்னைக்கு வரலாம் என்ற எண்ணம் தோன்றியது.

# 30. சென்னை திரும்பல்

சிதம்பரத்தில் இருந்த ஆசிரியப்பெருமான் எல்லோருடனும் விடை பெற்றுக் கொண்டு 11-3-1927 இல் சென்னைக்குத் திரும்பினார். அப்போது சிதம்பரத்தில் நண்பர்கள் எல்லோரும் அவருடைய பிரிவுக்கு வருந்தி, இனிமேல் அவருடைய சல்லாபம் அதிகமாகக் கிடைக்காதே என்று கண்ணீர் விட்டார்கள். பெரிய கூட்டம் கூடி, விடையனுப்பு விழா நடத்தினார்கள். சென்னைக்குத் திரும்பிய பிறகு நூல்களை ஓய்வாக ஆயலாம் என்ற எண்ணம் ஆசிரியப்பொருமானுக்கு இருந்தது. வயிற்றுவலி இருந்ததனால் சென்னையில் நோய்க்கு வேண்டிய மருந்துகளை உட்கொண்டு வந்தார்.

### பல்கலைக்கழகச் சொற்பொழிவுகள்

அப்போது சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. பல்கலைக் கழகத்தினர் பத்து நாள்கள் பேச வேண்டுமென்று எழுதி யிருந்தனர். சங்ககால வாழ்க்கை பற்றியும், அக்காலத் தமிழ் இலக்கியம் பற்றியும், பிற்காலத் தமிழ் இலக்கியங்கள் பற்றியும் பேசலாம் என்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டாயிற்று. இந்தச் சொற்பொழிவுகளை ஆசிரியப் பெருமான் செய்யவேண்டு மென்று, அக்காலத்தில் சிண்டிகேட் உறுப்பினராக இருந்த திரு கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் மிகவும் ஆர்வத்துடன் இருந்தார். அவருடைய வற்புறுத்தலின் மேல் ஆசிரியர் இந்தச் சொற்பொழிவுகளை ஆற்றுவதற்கு இசைந்தார். அப்படியே 10 நாள்கள் அந்தச் சொற்பொழிவுகள் நடந்தன.

1927-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 1, 10, 12, 16, 18 தேதிகளிலும், டிசம்பர் மாதம் 6, 9, 12, 14, 17 தேதிகளிலும் அந்தச் சொற்பொழிவுகள் சென்னைச் செனட் மண்டபத்தில் நடைபெற்றன. சென்னையிலுள்ள பலரும், வெளியூரிலிருந்து சிலரும் வந்து அந்தச் சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புற்றனர். அந்தப் பத்துச் சொற்பொழிவுகளுக்கும் சன்மானமாகப் பல்கலைக்கழகத்தார் ரூ.500 கொடுத்தார்கள். அதுவரைக்கும் சிம்னி விளக்கைக் கொண்டே தமிழ்ப்பணி செய்து கொண்டிருந்த ஆசிரியர் அந்தப் பணத்தைக் கொண்டு தம்முடைய தியாகராச விலாசத்திற்கு மின்சார விளக்குப் போடச் செய்தார். கார்த்திகையன்று அது கிடைத்தது. அதை நல்ல சகுனமாக எண்ணித் தம்முடைய தமிழ் வாழ்க்கைக்கே விளக்கம் கிடைத்ததைப் போன்ற ஆனந்தத்தை அடைந்தார்.

## 31. நான் ஆசிரியரிடம் சேர்ந்தது

1927-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் இறுதியில் அகில இந்தியக் காங்கிரஸ் மாநாடு டாக்டர் அன்சாரியின் தலைமையில் சென்னையில் நடந்தது. அந்த மாநாட்டிற்குச் சேந்தமங்கலத்திலிருந்து வந்த ஐராவத உடையார் தம் நண்பர்களுடன் என்னையும் சென்னைக்கு அழைத்து வந்தார். நாங்கள் தியாகராஜ விலாசத்திற்குச் சென்றோம். நான் சிதம்பரத்திற்கு ஆசிரியரைப் பார்க்கச் சென்றபோது கையுறையாக எதுவும் கொண்டு போகவில்லை. மற்றவர்களுக்கும் அந்த எண்ணம் தோன்றவில்லை. ஆசிரியப்பெருமான் அவர்களுடன் சென்னையில் தங்கிப் பாடம் கேட்பதற்காக வந்த சமயத்திலும் ஒன்றும் கொண்டு போகவில்லை.

ஆசிரியப்பெருமானைக் காண வருகிறவர்கள் எல்லோரும் கையில் மலர், பழம் முதலிய பண்டங்களைக் கொண்டு வந்து கொடுப்பார்கள். பிற்காலத்தில் எனக்கு இதைப் பற்றி வருத்தம் இருந்தது. ஆனாலும், 'என்னையே அர்ப்பணம் செய்துகொண்ட பிறகு பழம் முதலியவை எதற்கு?' என்று ஒரு வகையாகச் சமாதானம் செய்து கொண்டேன்.

என்னைச் சென்னையில் விட்டுவிட்டு ஐராவத உடையார் ஊருக்குச் சென்றுவிட்டார். எனக்கு மாதம் மாதம் 20 ரூபாய் அனுப்பி வந்தார். அந்த 20 ரூபாயில் சிக்கனமாக வாழ்ந்து கொண்டு ஆசிரியப்பெருமானிடம் பாடம் கேட்கத் தொடங்கினேன். காலைச் சிற்றுண்டி, பகல் இரவு உணவு இவற்றை மாத்திரம் உண்டு வந்தேன். அந்தக் காலத்தில் மாதத்திற்கு ஒன்பது ரூபாயில் உணவுச் சாலைகளில் உணவளித்தார்கள். பிற்பகல் சிற்றுண்டியை நான் உண்பதில்லை.

### நான் பாடம் கேட்டது

உடல் நலம் இல்லாமையினால் எந்தப் பதிப்பு வேலையையும் ஆசிரியர் அப்போது செய்து வரவில்லை. அதனால் நாள்தோறும் 300, 400 பாடல்கள் பாடம் கேட்பேன். முதலில் திருவிளையாடற் புராணத்தைக் கேட்டேன். பிறகு பல வகையான பிரபந்தங்களைப் பாடம் கேட்டேன். முன்பே சில நூல்களை நான் படித்திருந்தாலும் எனக்கு இருந்த தமிழ் ஆர்வத்தின் மிகுதியால் எல்லாவற்றையுமே படித்தேன். செய்யுள் செய்யும் பழக்கம்

இருந்ததனால் செய்யுளைப் படிப்பதில் பொருளறிந்து படிக்கும் பயிற்சி இருந்தது. அதனால் நான் பாடம் கேட்கும்போது ஆசிரியப்பெருமானுக்கு என்னிடத்தில் மிகவும் கருணை உண்டாயிற்று. அந்தச் சமயத்தில் ஆசிரியப் பெருமான் தக்கயாகப்பரணியை உரையுடன் வெளியிட வேண்டுமென்ற முயற்சியில் ஈடுபட்டிருந்தார். உடல் நலிவினால் அதில் அதிகமாக ஈடுபட முடியவில்லை.

அப்போது குறுந்தொகையைப் பதிப்பிக்க வேண்டுமென்ற எண்ணமும் அவருக்கு இருந்தது. அக்காலத்தில் குறுந்தொகையைக் கையெழுத்துப் பிரதியாக எழுதிவைத்திருந்தார். அதைப் பாடம் கேட்கும்போது நான் காகிதப் பிரதியிலிருந்தே கேட்டேன். அகத்திணை சம்பந்தமான அந்த நூலைப் பற்றி நான் அதிகமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. "ஒரு கோவையைப் பாடம் கேட்டால் இவையெல்லாம் நன்றாக விளங்கும்" என்று எண்ணி எனக்கு ஆசிரியர் தஞ்சைவாணன் கோவையைப் பாடம் சொன்னார். அதற்குப் பிறகு அகப்பொருள் முழுவதும் நன்றாக விளங்கியது.

ஆசிரியர் சிதம்பரத்தில் இருந்தபோது, மீனாட்சி தமிழ்க் கல்லூரியில் படித்துக்கொண்டு ஆசிரியருடனிருந்து எல்லா வகையிலும் பணிபுரிந்து வந்த கோதண்டராமன் என்பவர் 1927-ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் விடுமுறைக் காலத்தில் சென்னைக்கு வந்தார். நான் அவரைச் சிதம்பரத்தில் பார்த்திருந்தேன். அவரைக் கண்டவுடன் அவரோடு பழகவேண்டுமென்று ஒரு பாட்டு எழுதி அவருக்குக் காட்டினேன்.

"மீதண் டராமன்னும் மாகங்கை திங்கள்
விலுவத் தொடும்கொன்றை மேவும் சிரக்கை
வேதண்ட ராம்அன்பொ டேபோற்றில் இன்பம்
விளைக்கும் பரன்தாளை உன்னும் குணத்தான்
ஈதண்டர் ஆமன்றல் இன்தீஞ் சுவைப்பால்
என்னும்சொல் அன்பிற் குழைத்துப் பகர்வோன்
கோதண்ட ராமன் சலாபம் விழைந்தேன்
குலாவித் தமிழ்நூல் குறிக்கொள்வ தற்கே"

என்ற பாடலே அது. அவருக்கு செய்யுள் இயற்ற வராது. ஆகவே அந்தப் பாட்டைக் கண்டவுடன் அவர் பிரமித்துப் போனார். அவரோடு பழகி ஆசிரியரின் இயல்பைத் தெரிந்துகொண்டேன். பாடம் கேட்பதில் ஆர்வம் உடையவராக உள்ள மாணாக்கராக இருந்தால் ஆசிரியப்பெருமானிடம் நிறையக் கொள்ளை கொள்ளலாம் என்ற செய்தியை அப்போது தெரிந்து கொண்டேன்.

எனக்கும் தமிழ்ப் பசி அதிகமாக இருந்ததனால் ஆசிரியப்பெருமானுக்கு ஒய்வு இருந்த பொழுதெல்லாம் பல நூல்களைப் பாடம் கேட்டேன். பாடம் கேட்கும்போது பல அரிய செய்திகளை அவர் சொல்வார். தம் ஆசிரியப் பிரானாகிய பிள்ளையவர்களைப் பற்றிச் சொல்லுவார். அப்போது அவருக்குப் பேருவகை உண்டாகும். எனக்கு அதைக் கேட்கக் கேட்க வியப்பு உண்டாயிற்று. பல புராண நூல்களைத் தாமே எழுதிய பெரும்கவிஞராகிய பிள்ளையவர்கள்சங்கநூல்களைப்பற்றித் தெரிந்திருக்கவில்லை. அது அந்தக் காலத்தின் இயல்பு. ஆசிரியர் பிள்ளையவர்களைப் போன்றே அதிகமான புலமை உடையவர். தமிழ்நாட்டிற்குச் சங்க நூல்களையே வழங்கினவர். ஆறு ஆண்டுக் காலமே பிள்ளையவர்களிடம் இருந்து பாடம் கேட்டவர் என்றாலும் இந்த முதிர்ந்த வயதில் தமிழ்ப் புலமையில் முதல்வராக இருக்கும் அந்தப் பெருமான், தம்முடைய ஆசிரியரான பிள்ளையவர்களை நினைக்கும் போதெல்லாம் உருகுவது கண்டு எனக்கு மிக மிக வியப்பாக இருந்தது. அவருடைய குரு பக்திக்கு எல்லையே இல்லை ஞானாசிரியரிடம் கூட மாணாக்கர்கள் அவ்வளவு மதிப்பும் பக்தியும் வைத்திருப்பார்களா என்பது சந்தேகம். இவ்வளவுக்கும் ஆசார விரோதமில்லாமல் பழகினவர்கள் அவர்கள். ஆசிரியப்பெருமானோ அந்தணர்; பிள்ளையவர்களோ வேளாளர். ஆனால் அவர்களது உறவுக்கு முன்னாலே இந்த வேற்றுமைகள் எல்லாம் மறைந்துவிட்டன. அப்போது அப்பர் சுவாமிகளும், அப்பூதியடிகளாரும் அன்பு பூண்டிருந்த எண்ணம் எனக்குத் தோன்றியது.

அந்தாதிகள், கோவைகள், உலாக்கள், பிள்ளைத்தமிழ்கள், புராணங்கள் முதலியவற்றை ஆசிரியப்பெருமான் எனக்குப் பாடம் சொல்லி வந்தார்.

அக்காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தில் ஞானாசிரியராக இருந்த ஸ்ரீ வைத்தியலிங்க தேசிகர் அவர்கள் மாயூரநாதர் கோவில் கும்பாபி ஷேகத்தை நடத்தப் பெருமுயற்சி செய்து வந்தார். அந்தக் கும்பாபிஷேகப் பத்திரிகையைச் சிறப்பாக எழுத வேண்டுமென்று ஆசிரியப்பெருமானுக்கு எழுதினார். ஆசிரியப்பெருமான் என்னை மடத்திற்கு அனுப்பித் தேசிகருடைய கருத்துக்களைத் தெரிந்து கொண்டு வரும்படி செய்தார். அப்படியே நான் மடத்திற்குச் சென்றபோது ஆசிரியருடைய உடல்நலத்தைப் பற்றித் தேசிகர் மிகவும் விசாரித்தார். ஆசிரியப்பெருமானிடம் மடாதிபதி எவ்வளவு மதிப்பும், மரியாதையும் வைத்திருந்தார் என்பதும், தெள்ளு தமிழினிடத்தில் அவருக்கு இருந்த ஆர்வத்தையும் நான் தெரிந்து கொண்டேன்.

நான் விரைவில் செய்யுள் பாடும் ஆற்றலைப் பெற்றிருப்பதைத் தம்மிடம் வருவோரிடத்தில் எல்லாம் அசிரியர் சொல்வார். அவர்களுக்கு முன்னாலேயே பாடல்களைப் பாடிக் காட்டும்படியும் சொல்வார்.



டி.கே. சிதம்பரநாத முதலியார்

அப்போது டி.கே.சிதம்பரநாத முதலியார் அடிக்கடி ஆசிரியப்பெருமானை வந்து பார்ப்பார். 1928 ஏப்ரல் மாதம் திருநெல்வேலியில் கம்பர் விழா நடைபெற்றது திருநெல்வேலித் தமிழ் இலக்கியச் சங்கத்தார், முக்கியமாக, சிதம்பரநாத முதலியார், ஆசிரியப் பெருமானை விழாவுக்குத் தலைமை தாங்கி நடத்திக் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தி எழுதினார். அதன்படி ஆசிரியப்பெருமான் சென்றார். நானும் அவருடன் சென்றிருந்தேன் விழா மிகச் சிறப்பாக நடந்தது. நான் சில வாழ்த்துப் பாடல்கள் பாடினேன் எல்லோரிடமும் ஆசிரியர் என்னை அறிமுகப்படுத்தி எனக்கு ஊக்கம் ஊட்டினார். என்னுடைய அன்னையார்கூட என்பால் அத்துணை அன்பை வெளிப்படுத்தியதில்லை. அப்போது என் மனம் உருகும். என் அன்னையாருக்குத் தன் புதல்வன் என்ற பாசந்தான் இருந்தது. ஆசிரியப்பிரானுக்கு என் தமிழ்ப் பசியும் அதனால் நூல்களை விரைவில் கற்பதும் தெரியும். சில சமயங்களில் ஆசிரியர் அவர்களது அன்பு அளவுக்கு மிஞ்சியது என்றுகூட நான் எண்ணியதுண்டு. திருநெல்வேலியிருந்து திருச்செந்தூருக்குப் போய் முருகப்பெருமானைத் தரிசனம் செய்து கொண்டு வந்தோம்.

நான்அதுவரைக்கும்திருச்செந்தூரைப்பார்த்ததில்லை. செந்திலாண்டவனைப் பற்றிச் சில பாடல்களைப் பாடும்படி ஆசிரியர் கட்டளையிட்டார். அப்படியே நான் பாடினேன். அவற்றையெல்லாம் மற்றவர்களுக்கும் சொல்லிக் காட்டும்படி ஆசிரியப்பெருமான் சொல்வது வழக்கம். அவை வருமாறு.

"சுற்றும் பிறவிப் பிணிஅறியாய் நீ; அதனை
முற்றும் உணர்ந்தவரில் முன்னவன்யான் - சிற்றுயிர்கொள்
செந்தூர் வனமுதலாய்ச் சென்மித் ததுபோதும்;
செந்தூர் முருகஅருள் செய்"

"காலமெலாம் கைப்பொருளில் கண்ணாய்க் கழித்துவிட்டால்
காலன்கைப் பாசத்திற் கட்டுண்டு - மேல்இவர்போது
அங்கந்த மாதனத்தால் ஆம்பயன்என்? போற்றிடுக
அங்கந்த மாதனத்தா னை."

"அஞ்சும் மலர்மாலை அலரா தவன்கடம்பு
விஞ்சுமலர் மாலைபெற்று மேவுவாய் - நெஞ்சமே
செந்நினக ரன்போல் செழுஞ்சுடர் வீசும்கதிர்வேற்
செந்தில்நக ரன்பால்நீ சென்று"

1928-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 6-ஆம் தேதி திருப்பனந்தாளில் நடைபெற்ற குமரகுருபரர் திருநாளுக்கு ஆசிரியப்பெருமான் சென்றார். நானும் உடன் சென்றேன். விழா முடிந்தபின் நான் நேரே சென்னைக்கு வந்து விட்டேன். ஆசிரியர் மாயூரம் வந்து திருவாவடுதுறை மடாதிபதியைச் சந்தித்துச் சல்லாபித்துவிட்டு, அப்படியே பெரும்பண்ணையூர் உடையாரைச் சந்திக்கத் திருவாரூர் சென்றார். அவர் ஊரில் இருக்கவில்லை. ஆகையால் திரும்பி மாயூரத்திற்கு வந்து ரயிலேறிச் சென்னை வந்து சேர்ந்தார்.

### ராஜராஜேசுவர சேதுபதி மறைவு

1928-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் ராஜராஜேசுவர சேதுபதி காலமாகி விட்டார். தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் ஆதரித்து வந்தவர் அவர். தமிழ் நூல்கள் பல வெளிவர வேண்டுமென்பதில் ஆர்வம் உடையவர். அந்த மன்னரிடத்தில் ஆசிரியப்பெருமானுக்கு மிக்க மதிப்பு இருந்தது. அவர் காலமானதைக் கேட்டு ஆசிரியர் துடிதுடித்துப் போனார். உடனே அவருடைய உணர்ச்சி பத்துப் பாடல்களாக வெளியாயிற்று. அவற்றில் சில வருமாறு.

"காகமெலாம் குயிலாகக் காண்கலியில் நீவிண்ணம்
போகல்புரிந் தனை; அடுத்தோர் புன்கணுறல் அறிந்திலையே!
பாகமொரு பெண்ணுடைய பரம்பொருளை நினைந்துருகும்
ஏகமுறு மனமுடைய இராசரா சேந்திரனே.

விருப்பமகன் றவர்களுமே விரும்புற நீ வீற்றிருந்திட்
டுருப்பமறத் தமிழ்விருந்தை ஊட்டிடுதல் மறப்புறுமோ?
திருப்புகழா தியவற்றைத் திப்பியநல் இசையுடன்சொற்
றிருப்புளமும் குழைவிக்கும் இராசரா சேந்திரனே.

பால்வேண்டும், பழம்வேண்டும், பணம்வேண்டும், பலஉடுப்பு
மேல்வேண்டும், கோல்வேண்டும், விரைசகடம் மிகவேண்டும்,
ஆல்வேண்டும் எனலன்றி அரசேநின் போல்தமிழ்த்தொன்
னூல்வேண்டும் எனஅன்பின் நுவல்பவரைக் கண்டிலமே."

### காசிவாசி சாமிநாதத் தம்பிரான்

அக்காலத்தில் திருப்பனந்தாளில் காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரான் காசிமடத்தின் தலைவராக இருந்தார். ஆசிரியப்பெருமானிடம் பாடம்

கேட்டு அவருடைய நூற்பதிப்பில் உதவிசெய்தும் வந்த அவர் ஆசிரியப் பெருமானைத் தெய்வமாகவே கொண்டாடினார் அவர் தம்முடைய காலத்திலேயே தமக்குப்பின் சாமிநாதத் தம்பிரான் என்பவரைத் தம் பிற்றோன்றலாக அபிடேகம் செய்து வைத்தார்.

இளவரசு சாமிநாதத் தம்பிரான் பெரும்புலவர். கொட்டையூர் சிவக் கொழுந்து தேசிகர் பரம்பரையில் வந்தவர். மிக்க மதியூகி. அவர் ஒருமுறை சென்னைக்கு வந்து சேத்துப்பட்டில் தங்கியிருந்தார். அப்போது அடிக்கடி ஆசிரியப்பெருமான் அவரைப் போய்ப் பார்த்து வருவார். அப்போது நானும் உடன் செல்வேன். கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகருடைய பாடல்களைப் பற்றித் தம்பிரான் பேசும் போதெல்லாம் ஆசிரியப்பெருமான் அந்தப் பாடல்களின் நயத்தை எடுத்துச் சொல்வார். "அந்த நூல் தங்கள் கையால் வெளி வந்தால் எனக்கும், தமிழ் உலகத்திற்கும் மிகவும் பயன் ஏற்படும்" என்று சாமிநாதத் தம்பிரான் சொன்னார். "இறைவன் திருவருள் இருந்தால் அப்படியே செய்யலாம்" என்று ஆசிரியர் ஒப்புக்கொண்டார்.

சில ஆண்டுகளுக்குப்பின் அந்த நூல் வெளியாயிற்று.

## 32. தமிழ்விடு தூது ஆராய்ச்சி

**2-9-1928**இல் மாயூரநாதர் கோவில் மகாகும்பாபிஷேகம் நடந்தது. அதற்குப் பல சிவாசாரியார்கள் வந்திருந்தார்கள். ஆசிரியப் பெருமான் எந்தத் துறையில் யார் வல்லவராக இருந்தாலும் அவரிடமிருந்து செய்திகளைத் தெரிந்துப் பயன்படுத்திக் கொள்வது வழக்கம். எல்லாவற்றையும் ஒருவர் தெரிந்துகொண்டிருக்க முடியாது. ஓர் இளைஞன் ஏதேனும் ஒரு பொருளைச் சொன்னால் அதையும் கேட்டுக் குறித்துக் கொள்வார்.

"காக்கை வாயினும் சொற்கொள்வரால்"

என்று அடிக்கடி அவர் சொல்வது வழக்கம்.

மாயூரத்தில் சிவாசாரியர்கள் கூடியிருந்தார்கள், 'தமிழ்விடு தூது' என்ற நூலை அப்போது ஆசிரியர் ஆராய்ந்து கொண்டிருந்தார். அதில் பல திருவிளக்குகளைப் பற்றிய செய்திகள் வருகின்றன. அந்தச் செய்திகளை அந்தச் சிவாசாரியர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு, அதன் பிறகு அந்த நூலை மிகச்சிறப்பாக வெளியிட்டார்.

தமிழ்விடு தூதில் ஆசிரியப்பெருமான் ஈடுபாடு கொண்டதற்கு முக்கியமான காரணம் அதிலுள்ள ஒரு கண்ணி. அதை ஆராய்கிற போது பல சமயங்களில் அவர் உணர்ச்சி வசப்படுவார்.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்த மென்றாலும் வேண்டேன்"

என்ற கண்ணியில் அவர் உள்ளம் சிக்கிக்கொண்டது. திருப்பித் திருப்பி அதைச் சொல்லிக்கொண்டே இருப்பார். பிறகு 2 அடி சேர்த்து,

"இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்; - திருந்த
உதிப்பித்த பன்னூல் ஒளிர அடியேன்
பதிப்பிக்க வேகடைக்கண் பார்"

என்று தம் கருத்தை ஒரு வெண்பாவாக வெளியிட்டார். அது தக்கயாகப் பரணி முகவுரையில் இருக்கிறது.

மேலும் தமிழ்விடு தூதில்,

"கற்பார் பொருள்காணார் காசுபணங் காணிலுனை
விற்பா ரவர்பால்நீ மேவாதே"

என்ற கண்ணி வருகிறது. அதைப் படிக்கும்போது ஆசிரியர் கண்ணீர் விட்டார். "நாளெல்லாம் புத்தகங்களைப் பதிப்பித்துக் கொண்டே இருக்கலாம். எல்லாருக்கும் விலையின்றி வழங்கலாம். ஆனால் காகிதம் வாங்குவதற்கும், அச்சுக் கூலிக்கும் காசு இல்லாமல் எப்படிப் புத்தகங்களைப் பதிப்பிக்க முடியும்? எனக்கு மாத்திரம் தக்க வசதியிருந்தால் நூல்களை எல்லாம் அழகாகப் பதிப்பித்து எல்லோருக்கும் விலையின்றிக் கிடைக்கும்படி செய்வேன். இறைவன் அந்நிலையில் என்னை வைக்கவில்லையே!" என்று வருந்தினார். புத்தகங்களை விற்பனை செய்வதில் அவர் எவ்வளவு மனச் சோர்வு உடையவராக இருந்தார் என்பதை இந்த நிலை காட்டிற்று.

## தமிழிசை பற்றிய பேருரை

சென்னை இந்தியக் கிறிஸ்துவர் இளைஞர் சங்கத்தில் (ஒய்.எம்.சி.ஏ) இசையைப் பற்றி ஒரு சொற்பொழிவு ஆற்ற வேண்டுமென்று அக்காலத்தில் சென்னையில் இருந்த ரெவரெண்ட் பாப்ளி துரையும், பேராசிரியர் சாம்ப மூர்த்தியும் ஆசிரியரைக் கேட்டுக்கொண்டார்கள். தமிழ் இசையைப் பற்றி விரிவான முறையில் அடுத்தடுத்துச் செய்திகள் கோவையாக, சுவையாக அமைய ஒரு சொற்பொழிவு ஆற்றினார். அந்தச் சொற்பொழிவைக் கேட்ட யாவரும் வியந்தார்கள். அந்தச் சொற்பொழிவை அப்படியே எழுதிச் சுதேச மித்திரன் பத்திரிகையில் ஆசிரியப்பெருமான் வெளிவரச் செய்தார். அதைக் கண்டு, 'தமிழ் இசை பெற்ற அஸ்திவாரம் இது' என்று பலர் எழுதினார்கள். செந்தமிழ்ப் பத்திரிகை அதை வெளியிட்டுப் பாராட்டியது. ஆசிரியர் இசைவாணர் பரம்பரையில் தோன்றியவர் என்பதை முன்பே சொல்லி யிருக்கிறேன்.

## பூரண தரிசனம்

சென்னையை அடுத்துள்ள திருவான்மியூர் என்ற தலம் பாடல்பெற்றது. அந்தக் காலத்தில் இப்போது போல அவ்வளவு கூட்டம் அங்கே இருக்க வில்லை. ஆசிரியப்பெருமான் ஓய்வு இருக்கும் போதெல்லாம் அங்கே சென்று தங்குவார். குறுந்தொகை ஆராய்ச்சியெல்லாம் பெரும்போலும் அந்த ஊரில் தான் நடந்தது. அங்கேயுள்ள மருந்தீசுவரர் சந்நிதானத்தில் உட்கார்ந்து ஜபம் செய்வது அவரது வழக்கம். கோவில் பிரசாதம் என்றால் ஆசிரியருக்கு மிகவும் விருப்பம். அது தூயதாக இருக்கும் என்பதும், இறைவன் பிரசாதம் என்பதுந்தான் காரணம். வெறும் சம்பாச் சாதத்தை மிகவும் சுவைத்து உண்பார். தேங்காய்த் துவையலைத் தொட்டுக்கொண்டு

உண்பது அவரது வழக்கம். அந்தக் காலத்தில் பல இடங்களில் செல்வர்கள் மிகச் சிறந்த விருந்தை அவருக்கு அளிப்பார்கள். அவற்றையும் நன்றாகச் சுவைத்து உண்பார். நல்ல விருந்தைச் சுவைத்து உண்பதுபோலச் சங்க இலக்கியங்களை நன்றாக அறிந்து நயம் கண்டு வெளிப்படுத்திய அவர், சின்னஞ்சிறிய பிரபந்தங்களையும் வெறும் மிளகு பொடியும், உப்பும் சேர்த்த சம்பாச் சாதத்தைச் சுவைத்து உண்பதுபோல, சுவைத்து ஆராய்ந்து வெளியிட்டார். சாப்பாட்டுத் திறத்திலும், பாட்டுத்திறத்திலும் எதையும் புறக்கணிக்காமல் தெய்வப் பிரசாதமாக, தூயதாக இருக்கிறதா என்பதனை மட்டும் கண்டு சுவைக்கும் இயல்பை அவரிடம் கண்டேன்.

இளமை மிடுக்கோடு இருந்த எனக்கு, 'சங்க நூல்களை நன்கு ஆராய்ந்து, பதிப்பித்துச் சுவைத்த இவர்களுக்குப் புராணங்களையும், பிரபந்தங்களையும் எவ்வாறு சுவைத்து ஆராய்ந்து பதிப்பிக்க முடிகிறது?' என்று தோன்றும். பிறகுதான் எனக்கு உண்மை விளங்கிற்று. உணவிலே ஊறுகாயும் வேண்டும்; காய்கறிகளும் வேண்டும்; குழம்பும் ரசமும் வேண்டும்; அன்னமும் வேண்டும். ஒவ்வொன்றுக்கும் ஓரளவு உண்டு. கொஞ்சம் ஊறுகாய் இல்லையென்றால் பல வகையான இனிப்புப் பண்டங்களைச் சுவைக்க முடியாது. அதுபோல அவர் தமிழ்ப் பாடல்களையும் சுவைத்தார்.

தண்டமிழ்த் தாயின் முகம் பேரழகுடன் இருக்கும். அவளது திருவடியும் அழகாக இருக்கும். திருவடியிலுள்ள நகமும் அழகாக இருக்கும். முகத்தை அனுபவிக்கிற நிலை வேறு; நகத்தை அனுப விக்கிற நிலை வேறு. இரண்டிடத்திலும் ஆர்வம் உண்டாவதற்குக் காரணம் இரண்டும் தமிழ்த் தாயின் உறுப்புகள் என்ற எண்ணந்தான். முகத்தில் காட்டும் அன்பும், நகத்தில் காட்டும் அன்பும் பொதுவாக இருந்தாலும் அவற்றில் வேறுபாடு உண்டு. ஆசிரியப்பெருமான் நூல்களை ஆராய்ந்து அநுபவிக்கும் வகையிலும் இந்த வேறுபாட்டை நான் நன்றாக உணர்ந்து கொண்டேன். தமிழ்த் தாயின் பூரணதரிசனத்தைக் கண்டவர் அவர்.

இங்கே ஒரு நிகழ்ச்சி எனக்கு நினைவு வருகிறது. கல்லூரியில் பேராசிரியராக இருந்த ஒருவர் ஆசிரியப்பிரானிடம் வந்து பாடம் கேட்க விரும்பினார். பாடம் சொல்வதில் ஆசிரியருக்கு விருப்பம். "நன்றாகக் கேட்கலாம்" என்றார். "முதலில் திருவரங்கத் தந்தாதியைப் பாடம் சொல்கிறேன்" என்று கூறினார். அதைக் கேட்டுச் சென்ற பேராசிரியர் பிறகு பாடம் கேட்க வரவே இல்லை. "ஐயரவர்களிடம் சிறு நூல்களைப் பாடம் கேட்பதா? சங்க நூல்களை அல்லவா கேட்கவேண்டும்? அவற்றைக் கேட்டால் 'நான் ஐயரவர்களிடம் சங்க நூல்களைப் பாடம் கேட்டவன்' என்று சொல்லிக் கொள்ளலாமே!" என்று அவர் நினைத்தார்.

## விக்கிரமசிங்கபுரத்தில்

9-4-1929-இல் திருவிடைமருதூரில் உள்ள மகாலிங்கசுவாமி திருக்கோயிலில் கும்பாபிஷேகம் நடந்தது. அதற்கு ஆசிரியர் சென்றிருந்தார். நானும் உடன் சென்றேன், கும்பாபிஷேகத்தைத் தரிசித்துவிட்டு, திருநெல்வேலி சென்று அங்கிருந்து விக்கிரம சிங்கபுரம் போய்ச் சிவஞான சுவாமிகள் குரு பூஜையில் ஆசிரியப்பெருமான் தலைமை தாங்கினார். விக்கிரமசிங்கபுரத்தில் சிவஞான சுவாமிகள் அவதரித்தார் அவருடைய குருபூஜை ஒவ்வோர் ஆண்டும் அங்கே நடைபெற்றது. நாங்கள் அவ்வூரில் உள்ள திருவாவடுதுறை மடத்தில் தங்கியிருந்தோம்.

ஒரு நாள் காலையில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது ஒரு கடிதம் வந்தது. சென்னையிலிருந்து அவருடைய குமாரர் கல்யாணசுந்தரமையர் அதை எழுதியிருந்தார். அந்தக் கடிதத்தை நீண்ட வெண்மைத் தாடியோடு கூடிய முதிய அந்தணர் ஒருவர் கொண்டு வந்து கொடுத்தார். தம்மைவிட முதியவர் யாராக இருந்தாலும் அவரைச் சாஷ்டாங்மாகக் கீழே விழுந்து வணக்கம் செய்வது ஆசிரியர் வழக்கம். தம்முடைய இளமைக் காலத்தில் தமக்குத் தமிழ் கற்பித்த அரியிலூர்ச் சடகோபையங்கார் மனைவியை அவருடைய முதிய பிராயத்தில் ஆசிரியப்பிரான் தரையில் படிந்து வணங்கியதை நான் கண்டிருக்கிறேன். அன்றும் அவ்வாறே அந்த முதியவருக்கு வணக்கம் செய்துவிட்டு அந்தக் கடிதத்தை அவரிடமிருந்து வாங்கிக் கொண்டார். கடிதத்தை அவர் பிரித்துப் பார்த்தபோது அவர் முகத்தில் ஏற்பட்ட மலர்ச்சியைக் கண்டேன். ஆசிரியப்பெருமானுக்குத் திருப்தியளிக்கும் செய்தியாக இருக்கும் அது என்பதைத் தெரிந்துகொண்டேன்.

தம்முடைய மாணாக்கர்களுக்கு நல்லநிலை உண்டாக வேண்டுமென்று எண்ணுகின்றவர் ஆசிரியர். அவர்களைச் சிறந்த நிலையில் இருக்கும் படியாகச் செய்ய வேண்டுமென்பது அவரது பெருங்கருணை. அந்தக் கடிதத்தில் அப்படி ஒரு செய்தி இருந்தது.

சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரியைச் சேர்ந்த உயர்நிலைப் பள்ளிக்கு ஒருதமிழ்ப்பண்டிதர்வேண்டியிருந்தது. அதுசம்பந்தமாகஅங்கேதலைமைத் தமிழாசிரியராக இருந்த சற்குணர் ஆசிரியப்பெருமானைச் சந்தித்து, தக்க இருவரைப் பரிந்துரை செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொள்ளத் தியாகராச விலாசத்திற்கு வந்திருக்கிறார். அவர் வந்திருந்தபோது ஆசிரியரிடம் பாடம் கேட்ட வி.மு.சுப்பிரமணிய ஐயர் வித்துவான் பரீட்சை எழுதிவிட்டு அங்கே வந்திருந்தார். அவர் சிறந்த அறிவு உடையவர் என்றும், கிறிஸ்துவக் கல்லூரியின் உயர்நிலைப் பள்ளிக்கு ஏற்றவர் என்றும் கல்யாணசுந்தரமையர்

சொல்லியிருக்கிறார். திரு சற்குணர் அவரையே நியமித்துக்கொள்ளச் சம்மதித்துச் சென்றிருக்கிறார்.

இந்தச் செய்திதான் கடிதம் மூலமாக விக்கிரமசிங்கபுரத்தில் இருந்த ஆசிரியருக்குக் கிடைத்தது. அந்தக் கடிதத்தைக் கொடுத்த பெரியவரை வணங்கி அவரிடமிருந்த கடிதத்தைப் பெற்றுக் கொண்டதனால் தமக்கு உண்டான நன்மை இது என அவர் சொன்னபோது அவருக்குண்டான உவகைக்கு அளவில்லை. தம் மாணாக்கருக்கு நலம் உண்டானதை அவர் தமக்குக் கிடைத்த நன்மையாகவே எண்ணினார்.

### திருமயிலைத் திரிபந்தாதி

திருமயிலைத் திரிப்பந்தாதி என்னும் பிரபந்தம் மிகவும் அழகான நூல். ராமையர் என்பவர் இயற்றியது. மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதல்முதலாகத் திருவாவடுதுறையில் வசித்தபோது அந்தப் பிரபந்தத்தை ஆசிரியருக்குப் பாடம் சொன்னார். அதுமுதல் ஆசிரியப்பெருமானுக்கு அந்த அந்தாதியில் ஓர் அபிமானம் இருந்தது. அதற்கு குறிப்புரை எழுதி அதனை 1888-ஆம் ஆண்டில் பதிப்பித்தார்.

கச்சியப்ப முனிவர் விநாயக புராணம், காஞ்சிப் புராணத்தில் ஒரு பகுதி முதலியவற்றை இயற்றியவர். அவரைப் பற்றி ஆசிரியர் ஒன்று சொல்வது உண்டு. அவருடைய ஆசிரியர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை கச்சியப்ப முனிவரிடம் மிகவும் பக்தி கொண்டவர் "இறைவன் என் முன்னால் தோன்றி, 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டால், 'கச்சியப்ப முனிவரை ஒரே ஒரு முறையாவது தரிசனம் பண்ண வேண்டும்' என்று கேட்பேன்" என்று பிள்ளையவர்கள் சொல்வாராம். அம்முனிவர் கச்சி ஆனந்த ருத்திரேசர் மீது பல பிரபந்தங்களை இயற்றியிருக்கிறார். அவற்றில் 'வண்டுவிடு தூது' என்ற நூலை ஆசிரியர் பதிப்பித்தார்.

### கம்பராமாயணமும் தேவாரமும்

வெள்ளக்கால் வெ.ப.சுப்பிரமணிய முதலியார் கம்பராமாயணத்தில் ஆழமான பயிற்சி உடையவர். அதிலுள்ள சுவையான பாடல்களைத் தொகுத்துக் 'கம்பராமாயணஇன்கவித்திரட்டு' என்று பெயரிட்டு வெளியிட்டிருக்கிறார். ஆசிரியப்பெருமானுடைய திருக்கரத்தால் கம்பராமாயணம் வெளிவந்தால் தமிழ்நாட்டுக்குப் பெரும்பேறு கிடைத்ததாக இருக்கும் என்று அடிக்கடி சொல்லி வந்தார். ஆசிரியப்பெருமான் அவ்வப்போது கம்பராமாயணத்தைப் படிக்கும்படி சொல்லிக் குறிப்புக்களை எழுதி வைத்திருந்தார். எனக்குப்

பாடம் சொல்லும்போது பல குறிப்புக்களை எழுதும்படி செய்வார். ஆனால் இறைவன் திருவருள் ஆசிரியப்பெருமான் கம்பராமாயணத்தைப் பதிப்பிக்க வாய்ப்பு அளிக்கவில்லை.

தேவாரத்தையும் தலக் குறிப்புக்கள், இலக்கியக் குறிப்புக்கள், சித்தாந்தக் குறிப்புக்கள் ஆகியவற்றோடு விரிவாக அச்சிட வேண்டுமென்ற ஆர்வம் ஆசிரியப்பெருமானுக்கு இருந்தது. கம்பராமாயணப் பதிப்பையும், தேவாரப் பதிப்பையும் அவர் திருக்கரத்தால் அளித்திருந்தால் தமிழ் நாட்டிற்குப் பெரும்பாக்கியம் கிடைத்திருக்கும். ஆனால் அந்தப் பேறு கிடைக்காமற் போயிற்று.

### ஆயிரம் ரூபாய்ப் பரிசு

திருப்பனந்தாள் மடத்தின் இளவரசாக இருந்த சாமிநாதத் தம்பிரான் நல்ல புலமை உடையவர். எல்லா வகையிலும் மிகச் சிறந்த ஆற்றல் பெற்றவர். வறுமையிலும், கடன் சுமையிலும் ஆழ்ந்து கிடந்த திருப்பனந்தாள் மடத்தைத் தமது முயற்சியினால் மிகச் சிறந்த நிலைக்குக் கொண்டு வந்தார். பல தமிழ் நூல்களை வெளியிடுவதற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்குப் பெருநிதி வழங்கி ஏற்பாடு செய்தார். லட்ச ரூபாய் என்பது என் நினைவு. சென்னைப் பல்கலைக்கழகத்தார் ஆண்டுதோறும் நடத்தும் தமிழ் வித்துவான் பரீட்சையில் முதலில் தேறும் மாணவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசு கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்தார்.

1929-ஆம் ஆண்டு வித்துவான் பரீட்சையில் முதல்வராக ஆசிரியப் பெருமானுடைய மாணாக்கர் வி.மு.சுப்பிரமணிய ஐயர் தேர்ச்சி பெற்றார். அவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசு வழங்குவது எனத் தீர்மானித்தார்கள். முதல்முதலாக ஆரம்பிக்கப்பெறும் அந்தப் பரிசு வழங்கும் வைபவத்தைச் சிறப்பாக நடத்த வேண்டும்மென்று ஆசிரியப்பெருமானைக் கேட்டுக் கொண்டார். திருப்பனந்தாள் சின்னத் தம்பிரான். அவர் விருப்பப்படியே அந்த விழாவைக் கும்பகோணம் போர்ட்டர் டவுன் ஹாலில் நடத்துவதாக ஏற்பாடாயிற்று. அழைப்பிதழ் ஆசிரியப்பெருமான் பெயரிலேயே எல்லோருக்கும் அனுப்பி வைக்கப்பெற்றது. 1929-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15-ஆம் தேதி அந்தப் பரிசளிப்பு விழா நடைபெற்றது. அப்போது அதைச் சிறப்பித்து நான் சில பாடல்கள் பாடினேன்.

"தருமிக்குப் பொழில்சிறக்கும் திருப்பனசைச்
சொக்கலிங்கத் தவரா சன்சீர்த்
தருமிக்குப் பொற்கிழியை அளித்ததுபோல்
இந்நாளில் தமிழ்வல் லோர்க்குத்

தரும்இக்கு வலயத்தில் ஆயிரம்பொன்
எனக்கேட்டார் தரணி மாந்தர்
தரும்இக்கு மொழிப்புல வோர்தாமும்மிகக்
களித்தனர்தண் தமிழ்ச்சீர் ஓர்ந்தே.

திண்டிறல் ஈசன் வாழும் திருப்பனந் தாளில் இன்று
தொண்டர்கள் போற்ற நிற்கும் சொக்கலிங் கப்பேர் வள்ளல்
பண்தரு புலவோர் கட்குப் பரிசில்கள் வழங்கி நன்கு
தண்டமிழ் காக்க வந்தான், தவத்தினைக் காக்க வந்தான்''

என்பன அவற்றில் இரண்டு பாடல்கள்.

அதுமுதல் பத்தாண்டுகள் வரைக்கும் ஒவ்வோர் ஆண்டும் வித்துவான் பரீட்சையில் முதல்வராகத் தேர்ச் பெறுபவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசளிக்கும் விழாவை ஆசிரியப்பெருமானைக் கொண்டே திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் நடத்தி வந்தார். அதன்பிறகு அதற்குரிய மூலதனத்தைச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் கொடுத்து, ஆண்டுதோறும் அந்தப் பரிசுத் தொகையை அளித்து வரும்படி ஏற்பாடு செய்தார்.

தனித் தமிழ் வித்துவான் பரீட்சையில் முதல்வராகத் தேறுகிறவர் களுக்குத் திருப்பனந்தாள் மடத்திலிருந்து ஆயிரம் ரூபாய் கொடுத்து வந்தது பற்றிச் சில கருத்து வேறுபாடுகள் எழுந்தன. இந்த ஆயிரம் ரூபாயை இரண்டு மூன்று பகுதியாகப் பிரித்து முதல் பரிசு, இரண்டாம் பரிசு, மூன்றாம் பரிசு என்று கொடுக்கலாம் என்று பல பெரிய மனிதர்கள் திருப்பனந்தாள் மடாதி பதியிடம் சொன்னார்கள். ஆசிரியப்பெருமானிடம் அந்தக் கருத்தைக் காசிமடத்து அதிபர் தெரிவித்தார். ஆசிரியர் அதை ஏற்கவில்லை. ''ஏழை வித்துவானுக்கு மொத்தமாக ஆயிரம் ரூபாய் கிடைப்பது என்பது அருமை. பரிசு பெற்றவர் தம் வாழ்நாள் முழுவதும் காசிமடத்தை வாழ்த்திக் கொண்டிருப்பார். வேண்டு மானால் இரண்டாம், மூன்றாம் பரிசுக்குத் தனி நிதி வைக்கலாமே தவிர முதல் பரிசு ஆயிரம் என்பதைப் பிரிக்கத் தேவை யில்லை. இறைவனே ஞானசம்பந்தருக்கு ஆயிரம் கொடுத்ததாகத்தான் ஆவடுதுறைத் தேவாரத்தில் வருகிறது. 'ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறையி னாரே' என்பது அது. ஆகவே முழுமையாக ஆயிரம் ரூபாய் வழங்குவதே சிறந்தது'' என்று ஆசிரியப்பெருமான் சொன்னார். அவர் கருத்தையே திருப்பனந்தாள் காசி மடாதிபதி ஏற்றுக் கொண்டார்.

### பாரி காதை

இராமநாதபுரம் மன்னர் இராஜ இராஜேசுவர சேதுபதி மறைந்த பிறகு அவருடைய மைந்தர் சண்முகநாத சேதுபதி பட்டத்திற்கு வந்தார் 1929

ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி அந்தப் பட்டாபிஷேகம் நடந்தது. அதற்கு ஆசிரியப்பெருமான் போயிருந்தார். பெருங்கூட்டம் கூடியிருந்தது. பட்டாபிஷேகம் செய்யப்பெற்ற மன்னரை அவருடைய சிறியதந்தையார் வணங்கும் போது எனக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது. அரச பதவிக்கு மதிப்புக் கொடுத்துச் சிறியவர், பெரியவர் என்ற வேறுபாடு இல்லாமல் வணங்குவது வழக்கம். சேது சம்ஸ்தான மகாவித்துவான் இராகவையங்கார் வீட்டில் ஆசிரியப்பெருமான் அப்போது தங்கியிருந்தார்.

இராகவையங்கார் பாரி காதை என்ற அருமையான நூலை இயற்றியிருக்கிறார். வெண்பாக்களாலானது அந்த நூல். அதை ஆசிரியப்பெருமான் முழுவதும் கேட்க வேண்டுமென்பது அவரது விருப்பம். சேதுபதி மன்னர் பட்டாபிஷேகத்திற்குப் போயிருந்தபோது அங்கே இரண்டு மூன்று நாள் தங்க வேண்டியிருந்தமையினால் அந்தச் சமயத்தை அந்த நூலைக் கேட்பதில் பயன்படுத்திக் கொண்டார்.

இராகவையங்கார் அமர்ந்திருக்க, அவர் அருகில் ஆசிரியப்பெருமான் அமர்ந்திருந்தார். நான் பாரி காதையை வாசித்துக் கொண்டு வந்தேன். அதில் சங்க நூற் கருத்துக்கள் அமைந்திருப்பதை அங்கங்கே எடுத்துக்காட்டி நான் படித்தபோது இராகவையங்காருக்கு மிகவும் மகிழ்ச்சி. நூல் முழுவதையும் ஆசிரியப்பெருமான் கேட்டதில் அவர் அளவற்ற இன்பத்தை அடைந்தார். அவ்விடத்தில் ஆசிரியப்பெருமான் சிலபாடல்களைப் பாடினார். அவை வருமாறு:-

"பாரி அளித்த மகளிர்தமைப் பரிந்தே ஔவைப் பெயர்பெரியார்
காரி அளித்த மைந்தருக்குக் கலியா ணம்செய் காதையெனும்
வேரி அளித்த விருந்துண்டேன்; விறல்சேர் நாக நாதமன்னன்
வாரி அளித்த மணியனையான் மகுடாபி டேக வளர்தினத்தே.

தொன்னூற் புலவர் கருத்தெல்லாம் துலங்க நின்வா யிற்புலவன்
பன்னூல் பயின்ற இராகவமால் பாடும் பாரி காதையெனும்
இந்நூல் நயத்தில் என்உள்ளம் ஈடுபட்டே கிடந்ததம்மா!
நன்னூல் நயந்தேர் தென்முகவை நாக நாத நரபதியே.

சீரை அளித்த ரகுநாத சேதுபதிமால் அமுதக விக்கு
ஊரை அளித்தான் ஒருகோவைக் குலகம் புகழும் இரா கவனாம்
பேரை அளித்த கவிஞனுக்கென் பேற்றை அளிப்பா யோஅறியேன்;
நாரை அளித்த கொடைநாக நாதன் என்னும் நரேந்திரனே.

திருமலி பறம்பிற் பாரியாம் வள்ளல்
சீரெலாம் விரித்தொரு காதை
உருமலி சங்க நூல்பல உணர்ந்தே
உரைத்தனன், சேதுகா வலர்தம்

குருமலி அவையப் புலவனா விளங்கிக்
குலவுசீர் இராகவப் பனவன்
மருமலி தமிழின் நயமெலாம் ஒருங்கே
மலிந்திடக் கவிஞர்இன் புறவே.

புலவர்கள் பலர்முன் அதைஅரங் கேற்றப்
புரிவித்துப் பொற்கிழி அளித்தான்;
நிலவுறு செட்டி நாட்டினுக் கரசன்
நிறைதிரு மதிகுணம் உடையோன்
கலவுறு கலைக்குக் கோயில்என் றுரைபல்
கலைக்கழ கத்தினை நிறுவி
உலகுள தனையும் தன்புகழ் நாட்டி
உயர்அண்ணா மலைப்பெயர் மணியே.''

அதன்பின்பு அந்த நூல் வெளியாயிற்று. அப்போது ராகவை யங்கார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி வந்தார். அந்த நூலின் அரங்கேற்றத்தின்போது அண்ணாமலை செட்டியார் ராகவையங்காருக்கு ஒரு பொற்கிழி அளித்தார். அதைத்தான் பாடல் குறிக்கிறது.

## இராமேசுவர விஜயம்

மகுடாபிடேகத்தின் பிறகு இராமேசுவரம் போகலாம் என்ற எண்ணம் ஆசிரியருக்கு உண்டாயிற்று. அவ்வாறே இராமேசுவரம் சென்றோம் அப்போது இராமேசுவரம் கோவிலைச் சேர்ந்த எல்லோரும் ஆசிரியப்பெருமானுக்கு மதிப்புத் தந்து சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். பின்பு அங்கிருந்து தனுஷ்கோடி சென்றோம். நான் அதற்குமுன் தனுஷ்கோடி சென்றதில்லை. அங்கே சிறந்த வடமொழிப் புலவர் ஒருவர் இருந்தார் அவரோடு உரையாடி இன்புற்றார். பழைய காலத்து வித்துவான்களின் ஆழமான படிப்பை அவரிடம் கண்டேன்.

## 33. தக்கயாகப்பரணிப் பதிப்பு

தக்கயாகப் பரணி வேலை நடந்துகொண்டு வந்தது. அதை அச்சுக்குக் கொடுத்து, ஆசிரியர் அச்சுப் பிரதியைத் திருத்தம் செய்து கொண்டிருந்தார். ஒட்டக்கூத்தர் பாடிய அந்த நூலைக்காட்டிலும், அதன் உரை மிகச் சிறப்பாக இருந்தது. பல வகையான, நுட்பான செய்திகள் அந்த உரையில் இருந்தன. அவற்றைத் தெளிவுபடுத்துவதற்குச் சில வடமொழிப் புலவர்களின் உதவியை ஆசிரியர் நாடிப் பெற்றார். அவர்களிடமிருந்து தெரிந்துகொண்ட செய்திகளை எல்லாம் பயன்படுத்திக்கொண்டார். அந்தப் பரணி நூல் சிறியதாக இருந்தாலும் உரை, ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் மிகச் சிறப்பாக அமைந்தது. அந்த நூலின் உரையாசிரியர் பெருமையைப் பாராட்டி அவர் இன்னார் என்று தெரியவில்லையே என்று வருந்தினார். அந்த வருத்தம் ஒரு பாடலாக வெளிவந்தது.

> "பாரும் விசும்பும் புகழ்தக்க யாகப் பரணியின்பால்
> ஆரும் சுவைபல ஆரும் தெளிய அணிஉரைசெய்
> சீரும் சிறப்பும் உடையோய், இருமொழிச் செல்வநின்றன்
> பேரும் தெரிந்திலன்; என்செய்கு வேன்இந்தப் பேதையனே!"

1929-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மதுரைத் தமிழ்ச்சங்க ஆண்டு விழா நடந்தது. அப்போது கவர்னராக இருந்த மெஜோரி பாங்ஸ் (*Majory Banks*) தலைமையில்அந்த விழாநடைபெறவேண்டுமென்றுசங்கத்தின்காரியதரிசி டி.ஸி.சீநிவாச ஐயங்கார் விரும்பினார். அப்படியே ஏற்பாடும் செய்தார். தமிழ்ச் சங்க ஆண்டு விழாக்களில் பிரமுகர் யாராவது ஒருவர் முதல்நாள் தலைமை தாங்குவார். இரண்டாவது நாள் அறிஞர்கள் கூட்டம் நடக்கும். அதற்கு ஆசிரியப்பெருமான் தலைமை தாங்குவது வழக்கம் என்பதை முன்பே தெரிவித்திருக்கிறேன். பல ஆராய்ச்சி உரைகளைப் புலவர் பெருமக்கள் நிகழ்த்தினார்கள். ஆசிரியப்பிரான் தலைமையில் அவற்றை நிகழ்த்துவதைத் தமக்கு அமைந்த பெருஞ் சிறப்பாக அவர்கள் கருதினார்கள்.

அந்த ஆண்டு மதுரைத் தமிழ்ச்சங்க விழாவிற்குத் தலைமை தாங்க வந்த கவர்னர் மெஜோரி பாங்ஸுக்கு ஒரு வரவேற்பு வாசித்தளிக்க டி.ஸி.சீநிவாசையங்கார் விரும்பினார். ஆசிரியப்பிரான் அந்த வரவேற்பைச் சந்தப்பாக்களால் அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று எனக்குக்கட்டளை

யிட்டார். அப்படியே நான் அதைச் செய்தேன். தமிழ்ச்சங்க ஆண்டு விழாவிலும் நானே அந்த வரவேற்புப் பத்திரத்தைப் படித்தேன். சந்தத்தில் அமைந்திருந்ததனால் யாவரும் கேட்டு மகிழ்ந்தார்கள்.

ஞானசம்பந்தப்பெருமான் சமணர்களைக் கழுவிலேற்றினார் என்று சில நூல்களில் இருக்கிறது. ஆனால் திருஆலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் அவர்களே கழுவேறினார்கள் என்ற செய்தி இருக்கிறது. தக்கயாகப் பரணியிலும் ஓரிடத்தில் இது சம்பந்தமாக ஒரு கருத்து இருக்கிறது. ஞான சம்பந்தப்பெருமான் தோல்வியுற்ற சமணர் களைப் பார்த்து, "நீங்கள் எல்லோரும் சைவ சமயத்தில் சேருங்கள் என்று அருளினார். சிலர் சேர்ந்தார்கள். ஆனால் பலர், "வாதத் தில் நாங்கள் தோற்றாலும் எங்களுடைய சபதத்தில் தோல்வியடைய மாட்டோம்" என்று அவர்களே கழுவேறினார்கள் ஞான சம்பந்தர் அவர்களைக் கழுவேற்றினார் என்று இல்லாமல், அவர்களே கழுவேறி னார்கள் என்று அதில் இருந்தது. இந்தக் கருத்தையொட்டி, அந்த விழாவில் என்னைப் பேசுமாறு ஆசிரியர் கட்டளையிட்டார்.



ப.சுப்பராயன்

அப்படியே அந்த ஆண்டு தமிழ்ச் சங்க விழாவில் இந்தக் கருத்தை வைத்து நான் ஒரு சொற்பொழிவு ஆற்றினேன். தக்கயாகப்பரணியில் உள்ள செய்திகளை எடுத்து விரிவாகச் சொன்னேன். ஆசிரியப்பெருமானுக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று தம்மைச் சேர்ந்தவர்கள் நல்ல நிலைமையில் இருக்க வேண்டும் என்பதிலும், புகழ்பெற வேண்டும் என்பதிலும் அவர்களுக்கு மிக்க கருணை உண்டு என்பதை முன்பே தெரிவித்திருக்கிறேன். ஆகையால் சந்தர்ப்பம் வாய்த்தபோதெல்லாம் ஏதேனும் சிறந்த காரியங்களைச் செய்யச் சொல்லி, பலரும் அதனைப் பாராட்டும்படி செய்வார். அத்தகைய அநுபவங் களை நான் பலகாலம் அநுபவித்திருக்கிறேன்.

1929-ஆம் ஆண்டு திரு எஸ்.சுப்பராயன் தலைமையில் சென்னையில் மந்திரிசபை அமைந்தது. சுப்பராயன் ஆசிரியரிடம் கல்லூரியில் படித்தவர். அவர் ஒருநாள் தியாகராச விலாசத்திற்கு வந்து தம்மாலான உதவியை ஆசிரியப்பெருமானுக்குச் செய்யலாம் என்று சொன்னார். ஏதாவது தக்க வகையில் உதவி கிடைத்தால் தமிழ் நூல்கள் பலவற்றை வெளியிட அநு கூலமாக இருக்கும் என்ற காரணத்தினால் தாம் பதிப்பித்த பல புத்தகங்களை

ஆசிரியப்பெருமான் அவரிடம் தந்தார். அதன்பிறகு சென்னையில் கோட்டைக்குச் சென்று முதல் மந்திரியாக இருந்த சுப்பராயனைப் பார்த்தார். அவர் மிகவும் இனிமையாகப் பேசினார். ஆனால் அதற்குப் பின்பு எந்தவித அனுகூலமும் ஏற்படவில்லை. இப்படிப் பல பேர்களுடைய இனிமையான வார்த்தைகளைக் கேட்டுப் பல சமயங்களில் ஆசிரியப்பெருமான் ஏமாந்த துண்டு.

### பிள்ளையவர்கள் சரித்திரம் எழுத முயன்றது

ஆசிரியப்பெருமானுடையஆசிரியராகியமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களுடைய வரலாற்றை விரிவாக எழுதவேண்டுமென்ற எண்ணம் பல காலமாக ஆசிரியப்பெருமானுக்கு இருந்து வந்தது. அதனால் அதற்குரிய குறிப்புக்களைக் குறித்துக்கொண்டு வந்தார். பிள்ளையவர்களிடம் தாம் பாடம் கேட்க வந்த காலத்திற்கு முன்புள்ள பகுதிகளை எல்லாம் பலரிடம் கேட்டுக் குறித்துத் தொகுத்திருந்தார். அவற்றையெல்லாம் தொகுத்து ஒரு பாகமாகவும், தாம் அவரிடம் சேர்ந்து பாடம் கேட்டுப் பயன்பெற்ற காலத்தை மற்றொரு பாகமாகவும் எழுதவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு இருந்தது. அவ்வாறே பல குறிப்புக்களைத் தொகுத்து வந்தார். இதனை அறிந்து டி.ஸி.சீநிவாசையங்கார் அப்படிச் செய்வது மிகவும் நல்லதென்று கூறி ஊக்கம் அளித்தார்.

## 34. மாணாக்கராகவும் இருக்கத் தெரிந்தவர்

*பெங்களூர் ராமதாசர்*

தக்கயாகப்பரணி வேலை நடந்துகொண்டிருந்த சமயம் பெங்களூருக்கு ஆசிரியர் ஒருமுறை போக வேண்டியிருந்தது. மைசூர்ப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் பிரிவுக் குழுவில் ஆசிரியரும் உறுப்பினராக இருந்தார். அந்தக் கூட்டத் திற்குப் பெங்களூர் சென்றிருந்தார். அங்கே ஆசிரியப்பெருமானுக்கு வேண்டிய சுப்பிரமணிய சர்மா என்பவர் வீட்டில் தங்கியிருந்தார். அவர் நல்ல தமிழறிவும், பக்தியும், மதியும் உடையவர். ஸ்ரீவித்யா உபாசகர். அவருடைய குருநாதர் பெங்களூரில் இருந்த ராமதாசர் என்பவர். தக்கயாகப்பரணியில் அம்பிகை சம்பந்தமான பல செய்திகள் வருகின்றன. எனவே ராமதாசரைச் சந்தித்துப் பேசினால் அம்பிகையைப் பற்றிய பல செய்திகளுக்கு நல்ல விளக்கம் கிடைக்ககூடும் என்று எண்ணினார் ஆசிரியர். அதனால் பெங்களூர் போன போது தக்கயாகப்பரணிக் கையெழுத்துப்பிரதியைக் கையில் எடுத்துக்கொண்டு சென்றார். நானும் உடன் சென்றேன்.

ஒருநாள் சுப்பிரமணிய சர்மாவையும் அழைத்துக்கொண்டு ராமதாசரைப் பார்க்கச் சென்றிருந்தோம். அவர் தமிழில் கொச்சையாகப் பேசினார். பெரும் பாலும் கன்னடத்திலேயே பேசினார். சுப்பிரமணிய சர்மா உடனிருந்து மொழி பெயர்ப்பாளராக உதவி செய்தார். தக்கயாகப்பரணியில் அம்பிகையைப் பற்றி வரும் இடங்களை ஒவ்வொன்றாகச் சொல்லி ஆசிரியர் அவரிடம் விளக்கம் கேட்டார். ஆனால் அவரோ விஷயத்துக்குத் தொடர்பில்லாமல் தமக்குத் தெரிந்தவற்றை எல்லாம் சொல்லத் தொடங்கினார். அவற்றைக் கேட்ட எனக்கு எரிச்சலாக இருந்தது. சிறந்த பெரும் புலவராகிய ஆசிரியப்பெருமான் ஏதோ சில விஷயங்களே தெரிந்த அவர் முன்னாலே மாணாக்கரைப் போல இருந்து, அவர்கள் சொல்கிற எல்லாவற்றையும் குறித்துக்கொள்ளச் சொல்கிறாரே என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அப்போது ராமதாசர் ஏதோ ஒன்று சொன்னார். நான் "அது, அப்படி இல்லையே!" என்று குறுக்கே சொல்லிவிட்டேன். ஆசிரியப்பெருமான் சற்றுச் சினம் தோன்ற, "நீ என்னுடன் தானே இருக்கிறாய்? சொல்வதை எல்லாம் குறித்துக்கொள். ஏதாவது சொல்ல வேண்டுமென்றால் பிறகு என்னிடம் சொல். கேட்டுக்கொள்கிறேன்" என்று சொன்னார். அவ்வாறு என்னைக் கடிந்துகொண்டது அந்த ஒரே முறைதான்.

பிறகு நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு வந்தோம். ஆசிரியர் என்னைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார். "ராமதாசரிடமிருந்து ஏதாவது புதுச்செய்தி கிடைக்குமா என்று போனேன். அவர் தமக்குத் தெரிந்தவைகளையேதான் சொன்னார் என்றாலும் அவற்றை யெல்லாம் நாம் குறித்துக் கொண்டால், அவருக்கு நாம் அவரிடம் மதிப்பு வைத்திருக்கிறோம் என்ற எண்ணம் தோன்றும், உற்சாகத்தினால் பலவற்றைச் சொல்வார். அவை எல்லாம் நமக்குப் பயன்படாவிட்டாலும், அவற்றில் நமக்குப் பயன்படக் கூடிய ஒன்றிரண்டு செய்திகள் இருந்தால் போதுமே! கல உமியைத் தின்றால்தான் ஓர் அவல் கிடைக்கும் என்றாலும், அந்த ஓர் அவலுக்காகக் கல உமியையும் தின்ன வேண்டிய அவசியம் நேரத்தான் நேர்கிறது. அதனால்தான் நான் அந்த நேரம் உன்னிடம் சற்றுக் கோபமாகப் பேசிவிட்டேன்" என்றார்.

"அறியாமையினால் அந்த நேரம் நான் ஏதோ சொல்லிவிட்டேன். மன்னிக்க வேண்டும்" என்று நான் கேட்டுக்கொண்டேன். எத்தனை பேர் ஓர் அவலுக்காகக் கல உமியை அருவருப்பு இல்லாமல் தின்னும் இயல்புடை யவர்களாக இருப்பார்கள் என்று நினைத்துக் கொண்டேன். ஆசிரியருடைய பொறுமையைக் கண்டு எனக்குப் பெருவியப்பு உண்டாயிற்று.

தக்கயாகப்பரணி உரையின் பிரதி ஒன்றே ஒன்றுதான் இருந்தது. ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். தக்கயாகப் பரணியை ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருந்தோம். உரையாசிரியர் பெயர் இன்னதென்று தெரிய வில்லை. அவர் வடமொழி, தென் மொழி ஆகிய இரண்டிலும் நல்ல புலமை உடையவராக இருக்க வேண்டுமென்பது அவரது உரையினால் நன்கு தெரிந்துகொள்ள முடிந்தது. தக்கயாகப்பரணிக்கு வேறு சுவடி எதுவும் கிடைக்கவில்லையே என்ற வருத்தம் ஆசிரியப்பெருமானுக்கு இருந்தது. அன்று இரவு ஏதோ ஒரு சுவடியை நான் எடுக்கும்போது அதன் அடியில் தக்கயாகப்பரணியின் மூலம் ஒன்று இருந்தது. ஏதோ புதையல் கிடைத்த மாதிரி ஆசிரியப்பெருமானுக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று. அதற்குப் பிறகு நெடுநேரம் வரைக்கும் அந்தச் சுவடியை அவர் ஆராய்ந்து அதிலுள்ளவற்றையெல்லாம் குறித்துக் கொள்ளச் சொன்னார்.

தக்கயாகப்பரணியின் முதல் பதிப்பு 1930-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் வெளியாயிற்று. பல அன்பர்கள் அதைக் கண்டு வியந்தார்கள். ஒரு சிறிய பிரபந்தத்திற்கு இத்தனை வகையான ஆராய்ச்சி அமைந்ததைக் கண்டு தமிழ்ப் பெரும்புலவர்கள் இது நல்ல பயனுடைய வேலை என்று பாராட்டினார்கள்.

# 35. பிள்ளையவர்கள் சரித்திரத்தின் இறுதி

## கீழே விழுந்தது

1930-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஒரு நாள் தியாகராச விலாசத்தில் மாடியில் படுத்திருந்த ஆசிரியர் விடியற்காலையில் எழுந்திருந்து கீழே இறங்கி வந்தார். மாடிப்படியின் அடியில் ஒரு கதவு உண்டு. அந்தக் கதவை அவர் திறந்தபோது தவறிக் கீழே விழுந்துவிட்டார். காலில் நன்றாக அடி பட்டுவிட்டது. அந்தப் பகுதி நன்றாக வீங்கிவிட்டது. பல காலமாகக் குடும்பத்துடன் பழகி வந்த டாக்டர் வைத்தியம் செய்தார். சீக்கிரத்தில் குணமாகவில்லை. கால் வீக்கமும், வலியும் அதிகமாக இருந்தன.

ஆசிரியர் காலில் வீக்கம் உண்டாகிப் படுத்த படுக்கையாக இருக்கிறார் என அறிந்து பல பெரியவர்கள் வந்து பார்த்தார்கள். பலர் அந்தச் செய்தி அறிந்து கடிதம் எழுதினார்கள். திருப்பனந்தாள் காசி மடத்து அதிபர் வாரத்திற்கு ஒருமுறை காசி விசுவநாதருக்கு அருச்சனை செய்த பிரசாதத்தை அனுப்பும்படி செய்திருந்தார். தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்த சங்கங்களும், வேறு பலரும் ஆசிரியர் படுத்த படுக்கையாக இருப்பது தெரிந்து அங்கங்கேயுள்ள கோவில்களில் அருச்சனை செய்து பிரசாதங்களை அனுப்பினார்கள்.

ஒருநாள் வேறு என்ன செய்யலாம் என்று யோசிக்கும்போது, "டாக்டர் ரங்காச்சாரியாரைக் கூப்பிடலாம்" என்று சொன்னார்கள்.

ரங்காச்சாரியார் ஆசிரியப்பெருமானிடம் மிகவும் அன்புடையவர். அவர் ஒருநாள் வந்தார். வந்து வீட்டிலேயே சஸ்திர சிகிச்சை செய்தார் மிகவும் வேகமாக அந்தச் சிகிச்சை நடக்கும்போது நான் அருகில் இருந்து பார்த்தேன். இன்ன இடத்தில் இன்னதுதான் இருக்கும் என்கிற வரையறை யோடு அவர் கை செயல்பட்ட விதம் மிகவும் வியப்பாக இருந்தது. இரவும் பகலும் உறக்கம் இல்லாமல் ஆசிரியர் வருந்தினார். நான் அவரிடமே இருந்து வந்தேன். காலில் ரணம் ஆறிக்கொண்டு வந்தது.

ஆசிரியர் படுத்த படுக்கையாக இருந்தபோது அதிகமாக எதையும் படிக்கக்கூடாது என்று டாக்டர் சொன்னார். ஆனாலும் ஆசிரியருக்குத் தமிழ்ப்பாடல் காதில் விழாவிட்டால் மூச்சே நின்றுவிடும். அவர் மகனார்

கல்யாணசுந்தரமையர் ஹைக்கோர்ட்டில் வேலையாக இருந்தார். அவர் ஹைக்கோட்டிற்குப் போனபிறகு, இடைவேளையில் ஆசிரியர் ஏதாவது புத்தகத்தை எடுத்துப் படிக்கச் சொல்வார். ஆசிரியப்பிரானுடைய சிந்தனை பிள்ளையவர்கள் வரலாற்றிலேயே ஊன்றியிருந்தது. பலகாலம் குறித்து வைத்திருந்த குறிப்புக்களைத் தொகுத்து முன்பகுதிகளை எல்லாம் எழுதி விட்டார். பிள்ளையவர்கள் வரலாற்றின் கடைசிப் பகுதி எஞ்சியிருந்தது.

படுத்த படுக்கையாக இருந்த ஆசிரியப்பிரானுக்குப் பிள்ளையவர் களுடைய வாழ்க்கைச் சரித்திரத்தை முடிக்காமல் தம்முடைய வாழ்க்கை முடிந்துவிடுமோ என்ற ஐயம் எழுந்திருக்க வேண்டும். அதை எப்படியாவது நிறைவேற்றிவிட வேண்டும் என்ற பேரவா அவரை உந்தியது. ஆகவே ஒருநாள், "அந்தக் கட்டை எடுத்துக் கொண்டு வா" என்று சொன்னார். "டாக்டர் ஒன்றும் செய்யக் கூடாது என்று சொன்னாரே!" என்றேன். "டாக்டருக்கு என்ன தெரியும்? டாக்டர் என்ன கடவுளா? என் கடமையை நான் செய்வதால் ஆண்டவன் என்னைக் காப்பாற்றுவான்" என்று சொன்னார். உடனே அந்தக் கட்டை நான் எடுத்து வந்தேன். படுக்கையிலிருந்து மெல்ல அருகில் இருந்த அறைக்குச் சென்றார். அங்கே உட்கார்ந்து சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தார். பின்பு பிள்ளையவர்களுடைய இறுதிக் காலத்தைப் பற்றிச் சொல்லத் தொடங்கிவிட்டார்.

பிள்ளையவர்களின் இறுதி நிலையைப்பற்றிச் சொல்லிக் கொண்டே வந்தார். திருவாவடுதுறைத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் கோமுத் தீசுவரரின் திருவிழா நடைபெற்றுக் கொண்டிருந்த காலம் அது. ஆசிரியர் மாணாக்கராக இருந்தார். அன்று ஐந்தாம் திருவிழா தரிசனத்துக்காக ஆசிரியர் அங்கே சென்றார். அப்போது அங்கே தரிசனம் செய்து கொண்டிருந்த ஆசிரியரை அழைத்து, "பிள்ளையவர்கள் உடல்நிலை எப்படி இருக்கிறது?" என்று மடாதிபதிகள் விசாரித்தார். 'பிறர் பேசுவதை அறிந்து கொள்ளுகிறார்கள். ஆனால் அவரால் பேச முடியவில்லை. பேச முயன்றும் வார்த்தைகள் வெளி வருவதில்லை. நிலை கவலைக்கு இடமாகவே இருக்கிறது" என்று ஆசிரியர் சொன்னார். அதைக் கேட்ட தேசிகர் மனம் வருந்தியது. "இந்த நிலையிலேனும் பிள்ளையவர்கள் இங்கே இருக்கிறார்கள் என்று இருந்தால் மடத்துக்குக் கௌரமாக இருக்கும். இறைவன் திருவுள்ளம் எப்படியோ? என்று கண்கலங்கக் கூறி, ஆசிரியரை அவருடன் இருந்து கவனிக்கும்படி சொல்லி அனுப்பினார்.

ஆசிரியரும் அவருடன் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டு வந்த சவேரிநாத பிள்ளை என்பவரும் பிள்ளையவர்களுக்கு அருகே இருந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள். சிறிது சிறிதாகப் பாலை வாயில் விட்டுக் கொண்டிருந்தார்கள். ஆசிரியர் வெளியே சென்று திருவீதியில்

எழுந்தருளிய கோமுத்தீசுவரரைத் தரிசித்துத் தேங்காய், பழங்களை நிவேதனம் செய்தார். "எப்படியாவது எங்கள் ஆசிரியரைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். பிறகு விபூதிப் பிரசாதத்தை வாங்கிச் சென்று பிள்ளையவர்களிடம் கொடுக்க அதை அவர் தரித்துக் கொண்டார். அதிலிருந்து அவருக்கு நினைவு இழக்கவில்லை என்பதைத் தெரிந்துகொண்டார்.

பிள்ளையவர்களுக்கு நினைவு தப்பியது. உடம்பில் துவட்சி உண்டா யிற்று. சவேரிநாதப் பிள்ளை அவரைத் தம்முடைய மார்பிற் சார்த்திப் பிடித்துக்கொண்டார். சில நேரம் வரையில் அவருக்குப் பிரக்ஞை இல்லை.

சிறிது நேரத்தின் பின் கண்ணை விழித்துப் பார்த்தார். நினைவு வந்தது போலத் தோன்றியது. "திருவா" என்று அரைகுறையான வார்த்தை அவர் வாயிலிருந்து வெளிப்பட்டது. திருவாசகத்தைப் படிக்க வேண்டும் என்ற குறிப்பையே அவர் வெளிப்படுத்துகிறார் என்று தெரிந்தது. உடனே ஆசிரியர் திருவாசகத்தை எடுத்து வந்து 'அடைக்கலப்பத்து' என்ற பதிகத்தைப் படித்தார். பிள்ளையவர்கள் கண்ணை மூடிக்கொண்டே அதைக் கேட்டார். அவர் கண்களில் நீர்த்துளிகள் துளித்தன. அப்போது அவர் உடம்பில் ஓர் அசைவு உண்டாயிற்று. வலக்கண்ணை மட்டும் திறந்தார். அதுவே அவருடைய இறுதி மூச்சை விடும் காலம் என்பதை உடன் இருந்த இருவரும் அறிந்துகொண்டனர். அவர் உயிர் பிரிந்தது. அவருடைய மூச்சும் தமிழ்ப்புலமையும் அரும்பண்புகளும் முடிவுற்றன என்பதை அறிந்தனர். உடனே அவர் திருமேனியைப் படுக்கையில் கிடத்தி விட்டு உடனிருந்தவர்கள் புலம்பினார்கள்; வருந்தினார்கள்.

இதனை அறிந்த ஆதீன முதல்வராகிய சுப்பிரமணிய தேசிகருக்கு ஒன்றும் ஓடவில்லை. அவருடைய முகம் மலர்ச்சியை இழந்து வாட்டம் உற்றது. மறுநாட்காலையில் நடத்த வேண்டிய அபரக் கிரியைகளை நடத்தும்படி மடத்திலுள்ள பணியாளர்களுக்குக் கட்டளையிட்டார். இதைப் பற்றி ஆசிரியர் எழுதுகிறார்:

"மற்றவர்களுக்கு நடக்கும் முறையிலும் செலவிலும் அதிகப்படி நடத்தி இவருடைய திவ்ய சரீரத்தை விபூதி ருத்திராட்சங்களால் அலங்கரித்து எடுப்பித்துக் கொண்டு செல்லத் தொடங்கியபொழுது, இவருடைய மாணாக் கர்களாகிய தம்பிரான்கள் மடத்து முகப்பில் வரிசையாக வந்து நின்று கண்ணீரை வீழ்த்திக் கொண்டு கலங்குவாராயினர். வடமொழி வித்துவான் களாகிய அந்தணர்களின் கூட்டத்திலிருந்து, 'தமிழ்க் காளிதாசா! தமிழ்க் காளிதாசா!' என்ற சப்தமும், தமிழ் வித்துவான்கள் வாக்கிலிருந்தும் அயலூரி லிருந்து வந்திருந்த இவர் மாணாக்கர் கூட்டத்திலிருந்தும், 'கவிச்சக்கர

வர்த்தியே! தமிழ்க் கடலே! எங்களுக்கு அரிய விஷயங்களை இனி யார் அன்புடன் சொல்வார்கள்? யாரிடத்தில் நாங்கள் செல்லுவோம்? எங்களைக் கவனிப்பார் யார்?' என்ற ஒலியும், வேறொரு சாராரிடமிருந்து, 'குணக்கடலே! சாந்த சிரோமணீ!' என்ற சப்தமும், பொதுவாக மற்ற யாவரிடத்திலிருந்தும், 'ஐயா! ஐயா!' என்ற சப்தமும் உண்டாயின. உடன்சென்ற அபிஷிக்தர்கள் திருவாசகம் சொல்லிக்கொண்டு போகையில், 'இனிமேல் திருவாசகத்திற்கு மிகவும் தெளிவாகவும் அழகாகவும் யார் பொருள் சொல்லப் போகிறார்கள்?' என்று என் தந்தையார் முதலிய பலர் சொல்லி மனம் உருகினார்கள்" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே சொன்னார்.

அவர் கூறியவற்றை நான் எழுதி வருகையில் நானும் கண்ணீர் விட்டுக் கொண்டே எழுதினேன். 'இதைக் கேட்கும் போதே இவ்வளவு துயரம் உண்டாகிறதே; அங்கே அப்போது இருந்தவர்களுக்கு எப்படி இருந்திருக்கும்?' என்று எண்ணினேன். பிள்ளையவர்களின் இறுதிக் காலத்தைக் கூறும் அந்தப் பகுதியைப் பேனாவினால் எழுதியதாகத் தோன்றவில்லை. கண்ணீரினாலேயே எழுதினேன் என்றுதான் சொல்லவேண்டும். ஆசிரிய ருடைய குரல் தழுதழுத்தது. அவர் கண்களில் நீர் வெள்ளம் பெருக்கெடுத்தது. ஒருவாறு அந்தப் பகுதி எழுதி முடிந்தது.

எப்படியோ பிள்ளையவர்களுடைய வரலாறு ஒருவாறு நிறை வெய்தியது. இறைவன் திருவருளால் அது இரண்டு பாகங்களாக வெளி வந்தது. முதற்பாகம் 1933-ஆம் ஆண்டிலும், இரண்டாவது பாகம் 1934-ஆம் ஆண்டிலும் வெளியாயின. அவற்றைப் படித்தவர்களெல்லாம் பிள்ளையவர் களுடைய பெருமையையும் ஆசிரியப்பெருமானுடைய குரு பக்தியையும் நன்கு அறிந்து கொண்டார்கள்.

ஆசிரியர் பிள்ளையவர்களைப் பற்றிப் பேசும்போதும் எழுதும்போதும் பெயர் சொல்லிக் குறிப்பிடமாட்டார். அவருடைய வரலாற்றிலும், 'பிள்ளை யவர்கள், கவிஞர்பிரான், புலவர் பிரான்' என்று எழுதினாரேயன்றி, மீனாட்சி சுந்தரம்பிள்ளை என்று எழுதவில்லை. ஆனால் அவருடைய இளம்பருவத்தைப் பற்றி எழுதும் போது மட்டும், "மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஐந்து பிராயம் அடைந்தவுடன் சிதம்பரம் பிள்ளை (பிள்ளையவர்களின் தந்தையார்) இவருக்கு வித்தியாரம்பம் செய்வித்துத் தம் பள்ளிக்கூடத்திலேயே கல்வி பயிற்றத் தொடங்கினார்" என்று எழுதினார். அங்கே உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில், "பிள்ளையவர்களை இவ்வாறு பெயர் குறித்து எழுதுவதற்கு அஞ்சு கின்றேன்" என்று எழுதியிருக்கிறார்.*

---

*மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் முதலாம் பாகம் ப.9.

## ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது*

கச்சியப்ப முனிவர் பல நூல்களைச் செய்திருக்கிறார். காஞ்சீபுரத்தில் ஆனந்த ருத்திரேசர் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் பற்றிச் சில பிரபந்தங்களை அவர் இயற்றியுள்ளார். அவற்றில் ஒன்று வண்டுவிடு தூது. கச்சியப்பர் சங்க நூல்களை நன்றாக அறிந்தவர் அவற்றிலுள்ள பிரயோ கங்களையும் நன்கு தெரிந்தவர். அவருடைய நூல்களில் ஏராளமான கருத்துக்கள் அமைந்திருக்கும். அவர் எழுதிய ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது என்னும் நூலை நல்லமுறையில் பதிப்பிக்க வேண்டு மென்று ஆசிரியப்பெருமான் விரும்பினார். காஞ்சீபுரம் சம்பந்தமான அதில் காஞ்சிப் புராணத்திலுள்ள வரலாறு சுருக்கமாக அமைந்திருக்கிறது. அதற்குக் குறிப்புரை எழுதும்போது காஞ்சிப்புராணத்திலிருந்து பல மேற்கோள்களை எடுத்துக் காட்டினார். அந்த நூல் மிகச் சிறப்பான முறையில் வெளியாயிற்று.

1931-ஆம் ஆண்டு ‘எஜுகேஷனல் ரிவ்யூ’ என்ற ஆங்கிலப் பத்திரிகையில் டி.எஸ்.கோதண்டராமையர் ஒரு கட்டுரை ஆசிரியப் பிரானைப் பற்றி எழுதியிருந்தார். அதில் ஆசிரியர் சுவாமிமலைச் சுவாமிநாதன் மீது பாடிய பாடல்களில் சிலவற்றை வெளியிட்டார்.

“மலர்கொண் டுனையே வழிபட் டொருவேன்
அலர்கொண் டுவிளங் கலைவா விகள்சூழ்
கலர்கண் டறியாக் கவினே ரகஎற்
பலர்கண் டிகழும் படிவைத் ததெனே.

“ததைதீஞ் சுவைநற் றமிழ்பா டியுளம்
பதையா துறையும் படிவைத் தருள்வாய்
உதயா திபனே ரொளியாய் அளியாய்
சிதையா துறையுந் திருவே ரகனே.”

ஆசிரியப்பெருமானைச் சிலர் குறை கூறியதை அறிந்து பாடியவை இவை. பிற்காலத்தில் இந்தப் பாடல்களைக் கோதண்டராமையர் உற்சாகத் துடன் பாடுவதை நான் கேட்டிருக்கிறேன். 12-12-1931 திருச்செந்தூர் திரு. கிருஷ்ண சர்மா பாடிய பாடல்.

“மறவா மையிலும் நினைவிலும் பண்டைய மாபெரியோர்
திறனார்ந் துளனெனச் சித்திர குப்தனைச் செப்புவரால்
இறவாப் புகழுடைச் சாமிநா தன்திறன் எட்டுணையும்
அறிவா னெனில்அவன் றன்திறல் தோற்றதன் றஞ்சுவனே.”

---

*திருமயிலைத் திரிபந்தாதியும், வண்டுவிடுதூதும் திருவாவடுதுறை ஆதீனத் தலைவரின் உதவியினால் 1931-ஆம் ஆண்டு வெளியாயின.

# 36. டி.லிட். பட்டம் பெற்றது

சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆசிரியப்பெருமானுக்கு டி.லிட். பட்டம் கொடுக்க வேண்டுமென்றும், சி.வி.இராமனுக்கும் அப்படி ஒரு பட்டம் கொடுக்க வேண்டுமென்றும் ஏற்பாடாகியிருந்தது. அவ்வாறே வேறு பலருக்கும் இந்த டாக்டர் பட்டங்களைக் கொடுக்கத் தீர்மானம் ஆயிற்று.

அந்தக் காலத்தில் செனட் அங்கத்தினராக இருந்த பெட்ராம் பாதிரியார் ஒரு கடிதம் எழுதினார். "டாக்டர் பட்டத்தை இப்படி எல்லோருக்கும் வழங்கப் போனால் அதன் மதிப்புக் குறைந்து விடும்; உண்மையாக நாட்டிற்குப் பல முறையில் பயன்படக் கூடிய பணிகளைச் செய்தவர்களுக்கே கொடுப்பது சிறந்தது. ஸர் சி.வி. ராமனுக்கும், மகாமகோபாத்தியாய ஐயர் அவர்களுக்கும் பட்டம் கொடுத்தால் போதும்" என்ற கருத்தைத் தெரிவித்திருந்தார். ஆனால் பல்கலைக்கழகத்தார் பலருக்கும் இந்தப் பட்டத்தை அப்போது வழங்கினார்கள். 1932-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 21-ஆம் தேதி இந்தப் பட்டம் கிடைத்தது.

டாக்டர் பட்டத்தைப் பெறும்போது அதற்கென்று அமைந்த ஒருவகை உடையை அணிந்துகொள்ள வேண்டும். இது சம்பந்தமாக அந்தப் பட்டத்தை அப்போது பெற இருந்த ஸர் பி.எஸ். சிவசாமி ஐயர் ஆசிரியர் அவர்களுக்கும் வேண்டிய உடைகளைத் தைக்கும்படி ஏற்பாடு செய்தார். 3-8-1932 அன்று பட்டமளிப்பு விழா நடைபெற்றது. அந்தப் பட்டத்தைப் பெறும்போது மிகச் சுருக்கமாக ஆசிரியப்பெருமான் பேசினார்.

"மகாமேன்மை தங்கிய சென்னைச் சர்வகலாசாலை அத்தியக்ஷரவர்கள் சமூகத்திற்கு விஞ்ஞாபனம்: சகல கலைகளுக்கும் இருப்பிடமாகிய இந்த இடத்தில் பல்வேறு துறைகளில் சிறப்புற்று விளங்கும் மகாமேதாவிகள் முன்னிலையில் இந்தக் கௌரவப் பட்டத்துக்குரிய சின்னத்தைத் தங்களுடைய திருக்கரத்திலிருந்து பெற்றதை ஒரு பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். என்னைப் பாராட்டிப் பேசிய தங்களுக்கும், இதற்குக் காரணமாயிருந்த கனவான்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இந்தப் பட்டத்தைப் பெறுவதற்குரிய தகுதி என்னிடம் இல்லாவிட்டாலும் இதுவரையில் ஏற்படாத இந்தக் கௌரவம் தமிழ்ப் பாஷைக்கே கிடைத்திருக்கிறது என்பது என்னுடைய அந்தரங்கமான அபிப்பிராயம்".



டி.லிட். பட்டமளிப்பு விழா உடையில் ஐயரவர்கள்

ஆசிரியப்பெருமானைப் பற்றி அப்போது பல்கலைக்கழகத் துணை வேந்தராக இருந்த ஸ்ரீ ராமுண்ணி மேனன் பல படியாகப் பாராட்டினார்.

### பத்திரிகைகளில் பிரபந்தங்கள்

பல வகையான சிறிய பிரபந்தங்களை வெளியிட வேண்டுமென்ற எண்ணம் ஆசிரியருக்கு இருந்தது. தம்முடைய சொந்த முயற்சியால் சிலவற்றை வெளியிட்டார். பணச்செலவு அதிகமாயிற்று. அதனால் மதுரைத் தமிழ்ச்



University of Madras

We, the Chancellor, Pro-Chancellor, Vice-Chancellor,

and members of the Senate

of the University of Madras do hereby proclaim

and make known that the Degree of Doctor

of Literature honoris causa has been conferred on

Mahamahopadhyaya V. Swaminatha Ayyar,

at the Convocation held on the 3rd August, 1932.

Given under the seal of the University of Madras.

Senate House,

3rd August, 1932.

Chancellor.

**சென்னைப் பல்கலைக்கழக டி.லிட் பட்டச் சான்றிதழ்**

சங்கத்தின் ஆதரவில் வெளிவந்த செந்தமிழ்ப் பத்திரிகையின் பின்னால் அனுபந்தமாகச் சில நூல்களை வெளியிடலாம் என்ற எண்ணம் உண்டா யிற்று. அந்த எண்ணத்தைத் தமிழ்ச் சங்கச் செயலாளரிடம் சொன்னவுடன் அவரும் அந்தக் கருத்தை விருப்பத்தோடு ஏற்றுக்கொண்டார். அதன்படி

பழனிப் பிள்ளைத்தமிழ்' செந்தமிழில் பகுதி பகுதியாகச் சில ஆண்டுகள் வெளிவந்தது. வேறு சில நூல்களும் வெளியாயின.

செந்தமிழில் சில பிரபந்தங்கள் வெளிவருவது கண்டு அக்காலத்தில் 'சிவநேசன்' என்ற பத்திரிகையை நடத்திவந்த பலவான்குடி இராமசுவாமி செட்டியார் தம்முடைய பத்திரிகையிலும் ஏதேனும் பிரபந்தத்தை வெளியிடலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார். அப்படியே 'பழமலைக் கோவை, திருமயிலை யமக அந்தாதி' ஆகிய பிரபந்தங்கள் அந்தப் பத்திரிகையில் வெளியாயின.

## 'கலைமக'ளுக்குக் கட்டுரைகள்

சென்னை மயிலாப்பூரிலுள்ள 'லா ஜர்னல்' அதிபர் ஸ்ரீமான் நாராயணசுவாமி ஐயர் அவர்கள் தம்முடைய உறவினர் திரு இராமச்சந்திர ஐயருடன் 1931-ஆம் வருடம் டிசம்பர் மாதத்தில் ஒருநாள் ஆசிரியப்பெருமானிடம் வந்தார். 1932-இல் ஜனவரி மாதத்திலிருந்து 'கலைமகள்' என்ற பெயரில் ஒரு பத்திரிகை ஆரம்பிக்கப் போவதாகவும், அதற்கு ஆசிரியப்பெருமான் கட்டுரை எழுதினால் பத்திரிகையின் மதிப்பு அதிகமாகும் என்றும் இருவரும் கேட்டுக் கொண்டார்கள். அப்படியே 'கலைமகள்' என்ற கட்டுரையை ஆசிரியர் எழுதித் தந்தார். அது கலைமகள் முதல் இதழில் வெளியாயிற்று.

அந்தப் பத்திரிகைக்கு உதவி செய்ய யாரேனும் இருந்தால் சொல்ல வேண்டுமென்று ஆசிரியரிடம் கேட்டார்கள். "என்னிடம் இந்தப் பிள்ளை யாண்டான் இருக்கிறான். இவனுக்கு நன்றாக 'ப்ரூப்' திருத்தத் தெரியும். கட்டுரையும் எழுதுவான்" என்று என்னைக் காட்டினார். ஆசிரியப்பெருமானது வார்த்தையில் மதிப்பு வைத்துக் கலைமகளுக்குத் துணையாசிரியராக அப்போது என்னைச் சேர்த்துக் கொண்டார்கள். இறைவன் திருவருளால் மூன்று ஆண்டுகளுக்குப் பின் நானே அதன் ஆசிரியர் ஆனேன். இது வரையில் இறைவன் திருவருளால் அந்தப் பணியை ஆற்றி வருகிறேன்.

கலைமகளில் சில தமிழ் நூல்களை வெளியிட்டு வரலாம் என்ற எண்ணம் ஆசிரியர்பெருமானுக்கு உண்டாயிற்று. அப்படியே சில தனி நூல்களை அதன் மூலம் வெளிவரச் செய்தார்கள்.

கலைமகளில் வெளியான முதல் கட்டுரைக்குப் பிறகு சில மாதங்கள் ஆசிரியருடைய கட்டுரை எதுவும் அதில் வெளிவரவில்லை அன்பர்கள் எல்லாரும் வற்புறுத்தவே தம்முடைய அனுபவங்களையும் புலவர்களின் வரலாறுகளையும் ஒவ்வொரு மாதமும் மீண்டும் எழுதத் தொடங்கினார். இதனால் கலைமகளின் பெருமை மிகவும் உயர்ந்தது. ஆசிரியப்பெருமான் அறிந்த வரலாறுகளையும், அவருடைய அனுபவங்களையும் தமிழ்நாடு

அறிந்துகொள்ளக் கலைமகள் ஒரு கருவியாக விளங்கியது. ஆசிரியப் பெருமான் உரைநடையில் பல நூல்களை வெளியிட்டிருக்கிறார்கள். அதற்கு உறுதுணையாகக் கலைமகள் கருவியாக இருந்தது.

திருப்பனந்தாள் காசி மடத்தார் வித்துவான் பரீட்சையில் முதல்வராகத் தேர்ச்சி பெற்றவருடைய பரிசளிப்பு விழாவுக்கு ஆசிரியப்பெருமான் திருச்சிக்குச் சென்றிருந்தார். அங்கே விழா நடந்த பிறகு தாம் இளமையில் பழகிய இடங்களைப் பார்த்து வர வேண்டுமென்று எண்ணி அரியிலூர் சென்றார். ஆசிரியப்பிரானது இளமைப் பருவத்தில் அவருடைய தந்தையார் அங்கேதான் வாழ்ந்து வந்தார். அந்த ஊர்க்கோவிலில் தசாவதார மண்டபம் உண்டு. அங்கே திருமாலின் பத்து அவதார வடிவங்களும் தூண்களில் உள்ளன. அவற்றினிடையே ஒளிந்து விளையாடிப் பொழுது போக்குவது சிறிய பிள்ளையாக இருந்தபோது ஆசிரியப்பெருமானது வழக்கம். உடன் வந்த நண்பர்களுக்கு அங்குள்ள இடங்களை எல்லாம் காட்டினார். அங்கே போய் அவற்றையெல்லாம் கண்டு நண்பர்களுக்குக் காட்டும்போது ஆசிரியப் பெருமானுக்கு மீண்டும் இளமை வந்தது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

### சடகோபையங்கார் மனைவியார்

ஆசிரியப்பெருமானுக்கு அவரது இளம்பருவத்தில் தமிழ் கற்பித்த சடகோபையங்கார் அரியிலூரில் தான் இருந்தார். அவர் இருந்த காலம் வரையிலும் ஒவ்வோர் ஆண்டும் ஆசிரியர் அவருக்குப் பொருள் அனுப்பி வருவார். நாங்கள் அரியிலூர் சென்றபோது அந்தப் பெரியாருடைய மனைவியார் மிகவும் முதுமை அடைந்த நிலையில் இருந்தார். அவரைக் கண்டவுடன் ஆசிரியப்பிரான் தரையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். ஆசிரியப் பெருமான் தம் கையில் இருந்து பொருள்களை அந்த மூதாட்டியிடம் கொடுத்துத் தம்மை ஆசீர்வாதம் செய்யும்படி வேண்டினார். முதியவராகிய ஆசிரியர் அவ்வாறு செய்ததைக் கண்டு எல்லோரும் வியப்படைந்தார்கள்.

### பிற பிரபந்தங்கள்

1932-ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பத்திரிகையில் கடம்பர் கோவில் உலா, பழனிப் பிள்ளைத்தமிழ், மதுரைச் சொக்கநாதர் மும்மணிக் கோவை ஆகிய நூல்கள் அனுபந்தமாக வெளியாயின.

1933-ஆம் ஆண்டு 'சிவநேசன்' பத்திரிகையில் சங்கரலிங்க உலாவும், திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பாவும் வெளியாயின. உரிய குறிப்புக் களுடனும் முகவுரையுடனும் அவற்றை வெளியிட்டார்.

## தமிழ் அன்பர் மகாநாடு

அக்காலத்தில் சென்னைச் சிண்டிகேட் உறுப்பினராக இருந்த கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் தமிழ் அன்பர்கள் மகாநாடு ஒன்றைக் கூட்டு வதற்கு ஏற்பாடு செய்தார். எந்தக் காரியத்தையும் முறையாகவும், திறமை யாகவும் செய்யும் ஆற்றல் பெற்ற அவர் அந்த மகாநாட்டைப் பெரிய அளவில் நடத்த வேண்டுமென்று பல நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்திருந்தார். அந்த மாநாட்டுக்குப் பிறகு நிலை யாகவே ஒரு தமிழ்ச்சங்கதை நிறுவித் தமிழ்ப் பணிகளைச் செய்துவர ஏற்பாடு செய்ய வேண்டுமென்பது அவர் எண்ணம். மகாநாட்டில் வரவேற்புக் குழுவிற்குத் தலைவராக ஆசிரியப் பெருமானையே இருக்கச் செய்தார் தமிழன்பர்களின் மகாநாட்டின் சார் பாக ஒரு புத்தகக் கண்காட்சி நடந்தது. அந்தக் கண்காட்சியை மகாகனம் சீநிவாச சாஸ்திரியார் தலைமையில் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் ஸ்ரீசண்முக இராஜேசுவர சேதுபதி திறந்து வைத்தார். சென்னைப் பச்சை யப்பன் கல்லூரியில் அந்த விழா நடந்தது. அப்போது பச்சையப்பன் கல்லூரி சென்னை ஜார்ஜ் டவுனில் இருந்தது. அந்த மகாநாடு 1933-ஆம் வருஷம் டிசம்பர் 23-ஆம் தேதி காலையில் ஆரம்பமாகியது. மகா நாட்டுக்கு அப்போது கல்வி மந்திரியாக இருந்த திரு.குமாரசுவாமி ரெட்டியார் தலைமை தாங்கினார். வரவேற்புக் சொற்பொழிவை ஆசிரியப்பெருமான் நிகழ்த்தினார்.



வி.எஸ்.சீநிவாச சாஸ்திரி

முதல்நாள் மகாநாடு நன்றாக நடந்தது. மறுநாள் சுயமரியாதைக் காரர்கள் சிலர் வந்து குழப்பம் விளைவித்தார்கள். இதனால் பலருக்கு வெறுப்பு உண்டாயிற்று. அதனால் தமிழன்பர்கள் மகாநாடு நிறைவேறிய பிறகு தமிழ் ஆராய்ச்சி நிலையம் ஒன்றை அமைக்க, கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் எண்ணியிருந்த எண்ணத்தைக் கைவிட்டுவிட்டார். பலர் சேர்ந்து செய்கிற நல்ல காரியங்களைக் கூடப் பாராட்டாமல் இப்படித் தடை விளைவிக்கிறார்களே என்று அவர் மனம் வருந்தியது. மிகவும் ஊக்கத்தோடு இருந்த அவருக்கு இனி எதுவும் செய்து பயனில்லை என்ற எண்ணம் உண்டாயிற்று. அதனால் வேறு முயற்சி எதுவும் செய்யவில்லை.

### பிள்ளையவர்களின் சரித்திர வெளியீடு

1933-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களின் சரித்திரத்தின் முதல் பாகம் வெளியாயிற்று. அதைப் படித்த அன்பர்கள் எல்லாம் மிகவும் அருமையாக இருப்ப தாகப் பாராட்டினார்கள். இரண்டாவது பாகம் எப்போது வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டி ருப்பதாக எழுதினார்கள். வேதாரண்யத்திலிருந்து வி.வி.ரமண சாஸ்திரி என்னும் அறிஞர், "பிள்ளையவர்களின் சரித்திரம் முதல் பாகத்தை முழுதும் படித்தேன். கையில் எடுத்த பிறகு ஆதியோடந்தமாகப் பாராமல் கீழே வைக்க என்னால் முடியவில்லை. தங்கள் வசன நடையின் இனிமையும், தெளிவும் என்னை மெய்ம்மறக்கச் செய்தன. தாசில் சிவகுருப்பிள்ளைக்கும், பிள்ளையவர்களுக்கும் நடந்த உரையாடலைப் பற்றி என் தகப்பனார். சொல்லியதுண்டு. யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் பதிப்பித்த நூல்கள் சிலவற்றிக்குப் பிள்ளையவர்கள் சிறப்புப் பாயிரம் எழுதி அனுப்பிய விவரங்களைத் தாமோதரம் பிள்ளையவர்கள் சொல்லியதாகச் சேஷையா சாஸ்திரிகள் என்னிடம் தெரிவித்திருக்கிறார்கள். இரண்டாவது பாகம் வெளிவந்தவுடன் எனக்கு அவசியம் அனுப்ப வேண்டுகிறேன்" என்று எழுதினார்.

மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரத்தில் ஓரிடத்தில் அவர் கோபம் கொண்டு சில காலம் தம்முடன் பேசாமல் இருந்தார் என்று எழுதியிருக் கிறார். 'யாரோ ஒருவருடைய கோளினால் ஒரு தினம் இவர் என்மீது கோபம் கொண்டு என்னுடன் பேசாமல் இருந்து விட்டார். யார் மீது கோபம் வந்தாலும் சில தினம் அவரோடு பேசாமலே இருந்து விடுவது இவர் இயல்பு; எந்தச் சமயத்தும் யாரையும் கடிந்து பேசுவதே இல்லை.' இவ்வாறு எழுதிப் பிறகு அந்தக் கோபம் ஆறிய நிகழ்ச்சியையும் எழுதி உள்ளார்.*

'யாரோ ஒருவருடைய கோளினால்' என்று தம் ஆசிரியருக்கு உண் டான காரணத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். அந்தக் காரணம் இதுதான்.

ஒருநாள் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் ஸ்ரீமேலகரம் சுப்பிரமணிய தேசிகர் ஆசிரியப்பிரானிடம், "காயத்திரி மந்திரம் என்பது என்ன? அதைச் சொல்" என்று அவர் கேட்டார். மறைவாக அவர் ஜபிக்க வேண்டிய அந்த மந்திரத்தை வெளிப்படையாகச் சொல்லக் கூடாதென்று எண்ணி அதை ஆசிரியர் சொல்லவில்லை. அவர் சொல்லாததை யாரோ மீனாட்சிசுந்தரம்

---

* ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரம், 2-ஆம் பாகம், ப.98.

பிள்ளையிடம் சொல்லி, "சந்நிதானம் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் அலட்சியப்படுத்திவிட்டார்" என்று சொல்லியிருக்கிறார். அதனால்தான் பிள்ளையவர்களுக்குக் கோபம் உண்டாயிற்று.

1934-ஆம் ஆண்டு வித்துவான் பரீட்சையில் முதல்வராகச் தேர்ச்சி பெற்றவருக்குப் பரிசு வழங்குவதற்காக ஆசிரியர் கோவை சென்றபோது அந்த நகரசபையினர் ஆசிரியருக்கு ஒரு வரவேற்பு அளித்துப் பாராட்டினர். ஒரு தமிழ்ப் புலவருக்கு இத்தகைய மரியாதை செய்வது அரிய செயல். 'ஐயரவர்கள் இதற்கு எல்லா வகையிலும் தகுதி உள்ளவர்' என்று பலரும் பாராட்டினர்.

அதன் பிறகு ஆசிரியப்பெருமான் சென்னை வந்து சேர்ந்தார். கோவை நகரசபையில் இப்படி ஒரு வரவேற்பு அளித்தது தவறு என்று சிலர் பின்னால் எதிர்ப்புத் தெரிவித்தார்களாம். அதுபற்றி ஓர் அன்பரிடமிருந்து ஆசிரியருக்கு ஒரு கடிதம் வந்தது. பொறாமையுடையவர்களுக்கு எந்த நல்ல காரியமும் வெறுப்பை அளிக்கும் என்பது உண்மையாயிற்று.

ஆசிரியப்பெருமான் சஷ்டியப்த பூர்த்தியைச் சிறப்பாக நடத்திக் கொள்ளவில்லை. காளஹஸ்தி போய் வந்தார்கள் என்பதை முன்பே சொல்லி யிருக்கிறேன். அவர்களுக்கு 80-ஆவது வயது நெருங்கிக் கொண்டிருந்தது. அதை மிகச் சிறப்பாக நடத்த வேண்டு மென்று கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் நினைத்தார். ஆசிரியரிடமே எதுவும் தெரிவிக்காமல் திரு பெ.நா.அப்புசாமி ஐயர் முதலிய சில அன்பர்கள் கொண்ட ஒரு குழுவை அமைத்துக் கொண்டார்.

ஆசிரியப்பெருமான் 64 வயது வரை கல்லூரியில் வேலை பார்த்தார்கள். வேறு யாரும் அதுவரை அவ்வாறு தொடர்ந்து வேலை பார்க்க அனுமதிக்கப் பெறவில்லை.

### ஆயிரரூபாய்

குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள் அச்சிட்டு முடிந்த பிறகு திருப்பனந்தாள் குருபூஜைக்குச் சென்ற காலத்தில் அப்பொழுது மடாதி பதியாக இருந்த திரு சாமிநாதத்தம்பிரான் ஆசிரியப்பிரான் இருக்கும் இடம் வந்து ஆயிரரூபாய் கொடுத்ததை முன்பு எழுதியிருக்கிறேன்.

அதன் பின்பு என்னை ஒருமுறை திருப்பனந்தாளுக்கு அனுப்பும்படி ஆசிரியப்பிரானுக்கு தம்பிரான் எழுதினார். நான் அப்படியே போனேன். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்ததுவிட்டு ஆயிரம் ரூபாயை வருவித்து எனக்கு வழங்கினார்; அப்போது, "குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்தை ஐயரவர்கள் பதிப்பிப்பதற்கு நீ மிகவும் துணையாக இருந்திருக்கிறாய்.

உனக்கு ஏதாவது சம்மானம் செய்ய வேண்டுமென்று நினைத்தேன். இதை வாங்கிக்கொள். ஆனால் ஒரு விஷயம் சொல்கிறேன். இதை நான் கொடுத்த விஷயத்தை யாருக்கும் சொல்ல வேண்டாம். ஐயரவர்களுக்குக் கூடத் தெரிவிக்க வேண்டாம் என்றார். ஐயரவர்களுக்குக்கூட தெரிவிக்கவேண்டாம் என்று அவர் சொன்னதைக் கேட்டவுடன் என் நெஞ்சம் துணுக்குற்றது. "என்னை ஆட்கொண்ட தெய்வமாகிய அவர்களுக்குத் தெரிவிக்காமல் எப்படி இருப்பது?" என்றேன் நான்.

"நான் சொன்னதற்குக் காரணம் உண்டு. இந்த செய்தி ஐயரவர்களுக்குத் தெரிந்தால் அவர் அதை மகிழ்ச்சியோடு தம் குமாரரிடம் சொல்வார். உனக்குக் கிடைக்கும் நன்மையினால் அவருக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அந்தச் செய்தியை ஐயரவர்கள் குமாரர் மற்றவர்களுக்குந் தெரிவிப்பார். உன்னுடன் ஐயரவர் களிடம் பாடம் கேட்கும் மாணாக்கர்களுக்கு உன்மேல் பொறாமை உண் டாகும். அதனால்தான் அப்படிச் சொன்னேன்" என்றார். அதன்பிறகு வற்புறுத்தவில்லை. நான் ஆயிரரூபாய் பெற்றதை ஆசிரியப்பிரானிடம் சொன்னபோது அவருக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. தம்மைச் சார்ந்தவர்களுக்கு நன்மை உண்டானால் தமக்கே உண்டானது போல மகிழும் அரிய பண்புடையவர் ஆசிரியர்.

## என் திருமணம்

நான் ஆசிரியப்பிரானிடம் வந்து சேர்ந்த போது எனக்குத் திருமணம் ஆகவில்லை. அக்காலத்தில் சுதேசமித்திரனில் நிருபராக இருந்த விசுவ நாதையர் என்பவர் தம் பெண்ணை எனக்குக் கொடுக்கலாம் என்று எண்ணினார். அதை ஆசிரியப்பிரானிடம் தெரிவித்தார். பெண்ணைப் பார்ப்பதற்காக நானும் ஆசிரியர் குமாரராகிய கல்யாணசுந்தரையரும் போனோம். பெண்ணைப் பார்த்தோம். எனக்கு அந்தப் பெண்ணைப் பிடிக்கவில்லை. ஆனால் என் கருத்தை வெளியிடாமல் முருகன் விட்ட வழி விடட்டும் என்று எண்ணிச் சரி என்று சொல்லிவிட்டேன்.

அதன் பின்பு மறுநாள் ஆசிரியர் வீட்டுக்கு வருவதாக சொன்ன விசுவ நாதையர் வரவில்லை. ஒரு மாத காலத்துக்கு மேல் வரவில்லை. பல காலம் கழித்து விசுவநாதையர் என்னைச் சந்தித்த போது சொன்னார்: "நான் மறுநாள் வருவதாகச் சொன்னபடி வரவில்லை. அந்தப் பெண் சரியான மூளை வளர்ச்சியில்லாதவள். உனக்கு அவளைத் திருமணம் செய்த கொடுத்தால் உன் வாழ்வு வீணாகிவிடுமே என்று பிறகு தோன்றியது. இரவெல்லாம் நானும் என் மனைவியும் தூங்காமல் இதைச் செய்யக்கூடாது; தவறு என்று பேசிக் கொண்டோம். அதனால்தான் வரவில்லை" என்று சொன்னார்.

முருகன் திருவருட் செயல் இது என்று எண்ணி வாழ்த்தினேன்.

மயிலாப்பூரில் ஆசிரியப்பெருமானுக்கு வேண்டியவராக இராமசாமி ஐயர் என்பவர் இருந்தார். அவருடைய சகோதரி மகளாகிய அலமேலு என்பவள் அவரோடு இருந்தாள். 'அந்தப் பெண்ணை எனக்குத் திருமணம் செய்து வைக்கலாம்' என்று அவர் நினைத்தார். ஒருநாள் என்னை அழைத்துக் கொண்டு ஆசிரியப்பிரான் அவர் வீட்டுக்குப் போனார். அந்தப் பெண் வந்து எங்களை வணங்கினாள். ஆசிரியருக்குப் பிரியமான கோபால கிருஷ்ண பாரதியாரின் பாடல் ஒன்றைப் பாடினாள். எனக்கு அந்தப் பெண்ணைப் பிடித்தது. ஆகவே என் சம்மதத்தைத் தெரிவித்தேன். ஆசிரியப்பெருமானுடன் சென்றதனால் நல்ல பெண் கிடைத்தாள் என்று நான் எண்ணினேன். பிறகு அந்தப் பெண்ணுக்கும் எனக்கும் திருமணம் ஆயிற்று. ஆசிரியப்பிரான் உடனிருந்து நடத்தி வைத்து ஆசி கூறினார்.

### வேலையை நான் மறுத்தது

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் இருந்தார். அவர் விடுப்பில் இருந்தபொழுது அவர் பணியை டி.ஆர்.வேங்கடராம சாஸ்திரிகள் பார்த்து வந்தார். அவர் கோடைகானலுக்குப் போயிருந்தார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராக இருந்த சேது சம்ஸ்தான மகாவித்துவான் ரா.ராகவையங்கார் அந்த வேலையிலிருந்து ஓய்வு பெற இருந்தார் அவருடைய இடத்தில் தக்க புலவர் ஒருவரை நியமிக்க வேண்டுமென்று வேங்கடராம சாஸ்திரியார் நினைத்தார். தம் கருத்தைச் சென்னையில் இருந்த கே.வி.கிருஷ்ணசாமி ஐயருக்கு, யாரேனும் ஒரு நல்ல புலவரைப் பரிந்துரை செய்ய வேண்டுமென்று எழுதினார்.

கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் என்னை அந்த வேலைக்கு நியமிக்கலாம் என்ற கருத்துடன் அதை ஆசிரியப்பிரானுக்குத் தெரிவித்தார். ஆசிரியருக்கு ஒரு விதத்தில் மகிழ்ச்சியும் ஒரு விதத்தில் துன்பமும் உண்டாயிற்று. எனக்கு நல்ல வேலை கிடைப்பதில் மகிழ்ச்சி; ஆனால் என்னைப் பிரிவதில் வருத்தம்.

எனக்கு அந்த வேலையில் சிறிதும் நாட்டம் இல்லை. ஆசிரியப் பிரானைப் பிரியாமல் இருக்கவேண்டும் என்பதே என் நோக்கம். என் கருத்தைத் தெரிந்து கொண்ட ஆசிரியர் என்னை அழைத்துக் கொண்டு கே.வி.கிருஷ்ணசாமி ஐயரிடம் சென்றார். அவரோடு பேசத் தொடங்கினார்.

"தாங்கள் இவனிடத்தில் இவ்வளவு அபிமானம் வைத்திருப்பதை

அறிந்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ராகவையக்கார் பார்த்த வேலையை இவன் நன்றாகப் பார்ப்பான். ஆராய்ச்சி செய்வதில் நல்ல தேர்ச்சி உள்ளவன். என்னுடைய பதிப்பு வேலைகளில் இவன் உடனிருந்து பல வேலைகளைச் செய்து என் சிரமத்தைக் குறைத்து வருகிறான். இவனுடைய உதவியால் என்னுடைய வேலை நன்றாக நடைபெறுகிறது. அத்தகைய ஆராய்ச்சி வேலையை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சிறப்பாக செய்து நல்ல பேர் பெறுவான் என்பதில் சந்தேகம் இல்லை. எனக்கும் ஒரு வேலை அங்கே போட்டுத்தரச் சொல்லுங்கள். நானும் இவனுடன் இருப்பேன்" என்றார்.

இதைக் கேட்டபோது கே.வி.கிருஷ்ணசாமி ஐயர் சிரித்துக் கொண்டார். என்னைப் பிரிவதற்கு ஆசிரியப்பிரானுக்கு விருப்பம் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு, மேலே வற்புறுத்தவில்லை.

### 80-ஆம் ஆண்டு நிறைவு விழா

ஆசிரியப்பெருமானது 80-ஆம் ஆண்டு நிறைவு விழா மிகச் சிறப்பாகப் பல்கலைக்கழக மண்டபத்தில் நடைபெற்றது. ஸர் முகம்மது உஸ்மான் தலைமை தாங்கினார். பல பல நிறுவனங்களைச் சேர்ந்தவர்கள் வரவேற்பு வாசித்தளித்தார்கள். சென்னையில் இருந்த பல பெரிய மனிதர்கள் அதில் கலந்துகொண்டார்கள். ஆசிரியப்பெருமானின் திருவுருவப் படம் ஒன்றை அப்போது பல்கலைக்கழக மண்டபத்தில் திறந்து வைத்தார்கள்.

அந்தச் சமயத்தில் சென்னையில் மாத்திரமன்றித் தமிழ் நாட்டில் பல விடங்களில் சதாபிஷேக விழாவை மக்கள் நடத்தினார்கள். இலங்கை, பர்மா ஆகிய இடங்களில் கூடத் தமிழ் அன்பர்கள் சேர்ந்து இந்த விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

1934-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்தின் இரண்டாவது பாகம் வெளிவந்தது. அந்தப் பாகத்தில் பிள்ளை யவர்களிடம் ஆசிரியப்பெருமான் அவர்கள் பாடம் கேட்கத் தொடங்கியது முதல் பிள்ளையவர்களின் இறுதிக் காலம் வரையிலும் உள்ள நிகழ்ச்சிகள் இருந்தன.

### கரந்தை விழாத் தலைமை

கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவராக இருந்த திரு த.வே.உமாமகே சுவரம் பிள்ளை அந்தச் சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு வரவேண்டுமென்று ஆசிரியப்பிரானுக்கு எழுதினார்கள். தலைமை வகிக்க வரவேண்டுமென்று



சதாபிஷேக விழாப் பரிசுப் பொருள்கள்

மாத்திரம் கேட்டால் வர இசைவு தர மாட்டார்களோ என்று நினைந்து, இதனோடு சேர்ந்து பிள்ளையவர்களின் விழாவையும் நடத்தலாம் என்று எண்ணியிருக்கிறோம் என எழுதினார். அதைக் கண்டு ஆசிரியப்பெருமான் ஒப்புக் கொண்டார்.



த.வே.உமாமகேசுவரம் பிள்ளை

*1934*-ஆம் வருஷம் மார்ச் *17*, *18* தேதிகளில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் *23*-ஆம் ஆண்டு விழா வுடன் பிள்ளையவர்கள் திருநாளும் சேர்ந்து நடைபெற்றது. ஆசிரியப் பெருமான் தலைமை தாங்கினார். பெரும்புலவர்கள்பலர்பேசினார்கள். இரண்டாவது நாளைப் பிள்ளை யவர்கள் திருநாளாகக் கொண்டாடி னார்கள். அதில் என்னையும் பேசும்படி ஆசிரியர் பணித்தார்.

## வளையாபதி

*1934*-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் தனித் தமிழ் வித்துவான் பரீட்சையில் முதல்வராகத் தேர்ச்சி பெற்றவருக்குத் திருப்பனந்தாள் ஆயிரம் ரூபாய் பரிசளிப்பு விழா கோயம்புத்தூரில் நடந்தது அந்த ஆண்டு திரு ஏ.எஸ்.நாராயணசாமி நாயுடு அந்தப் பரிசைப் பெற்றார். ஆசிரியப்பிரான் அந்த விழாவுக்காகக் கோயம்புத்தூர் சென்றிருந்தார். அந்த ஊரில் வழக்கறிஞர் தொழில் நடத்தி வந்த டி.ஏ.ராமலிங்க செட்டியார் ஆசிரியப்பெருமானிடத்தில் ஈடுபட்டு அந்த விழாவுக்கு வேண்டிய காரியங்களைச் செய்தார். அந்த விழா முடிந்த பிறகு ஆசிரியர் பழையகோட்டைக்கு வந்தார்கள். அந்தப் பக்கங்களில் ஏடு தேட வேண்டுமென்ற ஆசை இருந்தது. நான் சென்னையிலிருந்து சென்று பழையகோட்டையிலிருந்து ஆசிரியருடன் சேர்ந்து கொண்டேன். அப்போது யாரோ ஒரு கவிராயரிடத்தில் வளையாபதி ஏட்டுச்சுவடி இருப்பதாகச் சொன்னார்கள். அங்கே போய்ப் பார்த்துபோது முன் ஒருமுறை அங்கே சென்று ஒரு பயனும் இல்லாமல் திரும்பியது நினைவுக்கு வந்தது. அதைப் பற்றி முன்பே சொல்லியிருக்கிறேன்.

ஆசிரியப்பெருமான்பிற்காலத்தில்உரைநடையில்பலஅரியகட்டுரை களை எழுதி வந்தார். தம்முடைய அனுபவங்கள், புலவர்களின் வாழ்க்கை ஆகியவற்றைச் சுவையான பகுதிகளாகத் தனித் தனியே அமைத்து எழுதினார். கலைமகளில் மாதந்தோறும் அவரது கட்டுரை வெளியாயிற்று. மற்றப் பத்திரிகைகளின் ஆண்டு மலர்கள் வெளிவரும்போது அந்த மலர்களில் எல்லாம் எழுதி வந்தார். அந்தக் கட்டுரைகள் முதுமை நிலையில் இருந்த

ஆசிரியப்பெருமானது அநுபவசாரமாக விளங்கின. அவற்றைப் பார்த்த தமிழ் மக்கள் மிகவும் இன்பத்தை அடைந்தார்கள். மிகப் பழைய நூல்களை எல்லாம் எடுத்துத் தமிழ்நாட்டிற்கு வழங்கிய பெருமான் இப்போது விரிவான உரைநடையில் எழுதுவதைக் கண்டு, அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றையும் எழுத வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். சாதி, சமயம், குலம் கடந்த நிலையில் ஆசிரியப்பெருமானிடம் அன்பு வைத்துப் பாராட்டியவர்கள் பலர். திரு ஒய்.ஜி.பானேல் என்பவர் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதினார்.

“கல்வி விஷயத்தில் தாங்கள் இந்துக்கள், கிறிஸ்துவர்கள் என்கிற பேதம் பார்க்கிறவர்கள் அல்லவென்பது அதில் தாங்கள் சவேரிநாதபிள்ளை, வேதநாயகம் பிள்ளை என்போரைப் பற்றி எழுதியிருப்பதனால் தோன்றுகிறது. மேலும் தாங்கள் செப்டம்பர் மாதம் நாலாம் தேதி சென்னை வாலிபர் சங்கக் கட்டிடத்தில் கனம் சற்குணர் நாடார் விஷயத்தில் செய்த உபந் நியாசத்தால் சாதிபேதம், மதபேதம் பார்க்கிறவர்கள் அல்லவென்பதைக் கண்டுகொண்டேன்”.

“நான் 1859-ஆம் ஆண்டு மே மாதம் 5-ஆம் தேதி பிறந்தவன். என் தகப்பனார் 33-ஆம் வயதில் மரித்துப் போனாராயினும் என் தாயார் 85-ஆம் வயதில் மரித்தார்கள். நானும் சீக்கிரம் மரித்துப் போவேன் என்பது என் எண்ணமாயினும் 77 வருடங்களைக் கடந்து விட்டேன். தங்களைக் கண்டபின் இன்னும் கொஞ்ச காலம் உயிரோடிருக்கலாம் என்ற நம்பிக்கை எனக்கு உண்டாயிருக்கிறது.”

### மாணாக்கர் விளையாட்டுக்கள்

கலைமகளில் ஆசிரியப்பெருமான் ‘மாணாக்கர் விளையாட்டுக்கள்’ என்று தலைப்பிட்டுப் பல நிகழ்ச்சிகளை எழுதியிருந்தார். மாணாக்கர்கள் தம்முடைய அறியாமையினால் கேலி செய்தல் போன்ற பல நிகழ்ச்சி களைச் சுவையாக எழுதினார். ஆசிரியப்பெருமானிடம் மாணாக்கராக இருந்த டாக்டர் டி.வி.சுவாமிநாத சாஸ்திரி என்பவர் ஒரு கடிதம் எழுதினார். அவர் அப்போது தென்னூரில் இருந்தார். “தங்கள் வியாசத்தை ஆவலுடன் ஒரு வார்த்தை விடாது படித்தேன், உடனே நான் தங்களிடம் படித்ததும் ஒன்றிரண்டு செய்யுட்களுக்குப் புதிய அர்த்தங்கள் கொடுத்ததும், ஒருநாள் வைணவ நாமத்துடன் நான் வகுப்புக்கு வந்ததும் எனது ஞாபகத்திற்கு வந்தன. மகிழ்ச்சி அடைந்தேன். தங்களிடம் பாடம் படித்த எந்த மாணவரும் தங்களை மறக்க இயலாது” என்று எழுதினார்.

## ராஜாஜி பாராட்டு

கலைமகளில் ஒரு சமயம் 'பிச்சைப் பாட்டு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை ஆசிரியர் எழுதியிருந்தார். பிச்சைக்காரன் சொன்ன ஒரு பாட்டு முழுவதையும் கேட்டு அதன் நயம் அறிந்த சுவையாக அதை எடுத்துச் சொன்ன கட்டுரை அது. ராஜாஜி அவர்கள் அப்போது மாம்பலத்தில் இருந்தார்கள். அதைப் படித்த அவர்கள் 22-5-1937 அன்று பின்வரும் கடிதத்தை எழுதினார். "நமஸ்காரம்". கலைமகளின் சில இதழ்கள் நான் பார்க்காமலே தவறிவிடுவது உண்டு. என் தொல்லைகளின் மத்தியில் சில இதழ்களை அதிருஷ்டவசத்தால் பார்த்துப் படிக்கவும் நேரிடுகிறது. இவ்வாறு தங்கள் பிச்சைப் பாட்டுக் கட்டுரையைப் படித்து ஆனந்தம் தாங்காமல் இதை எழுதுகிறேன்.

"அதற்குத் தலைப்பு 'ஊரைச்சுடுமோ' என்றே வைத்திருக்கலாம். இத்தகைய ஓர் இரத்தினத்தை நான் எழுதியிருந்தால் அவ்வாறுதான் பெயர் வைத்திருப்பேன். என்ன அழகான கதை! என்ன ரஸம்!"

-இராசகோபாலாசாரி."

## 37. காந்தி தரிசனம்

1937-ஆம் ஆண்டு சென்னையில் பாரதீய சாகித்திய பரிஷத்தின் மகாநாடு நடந்தது. அதற்கு மகாத்மா காந்தி தலைமை வகித்தார் வரவேற்புக் குழுவின் தலைவராக யாரை நியமிப்பது என்ற யோசனை நடத்துபவர் களுக்கு உண்டாயிற்று. ஆசிரியப் பெருமானை அழைத்து அவரையே வரவேற்புரையையும் நிகழ்த்தச் சொன்னால் மகாநாடு சிறப்பாக நடை பெறும் என்று சபையைக் கூட்டியவர்கள் எண்ணினார்கள். இந்தக் கருத்தை நிர்வாகக் குழுவைச் சேர்ந்த ஹரிஹர சர்மா ஆசிரியப்பெருமானிடம் வந்து சொன்னார். "மகாத்மா காந்தி அவர்கள் இம்மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க இருப்பதனால், அவரைத் தரிசனம் செய்யும் வாய்ப்புக் கிடைக்கும் என்பதனால் இதனை ஒப்புக்கொள்கிறேன்" என்றார்.

அப்படியே அந்தக் கூட்டத்திற்குச் சென்றார். முதலில் மகாத்மா காந்தியைத் தரிசித்து வரவேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்று. ராஜாஜி ஆசிரியப்பெருமானை அழைத்துச் சென்றார். போகும் போது நானும் உடன் சென்றேன். அப்போது மகாதேவ தேசாய் வந்திருந்தார். அவரும் உடன் வந்தார். அவரது வடிவம் மனத்தைக் கவர்வதாக இருந்தது. அவரைச் சுட்டிக் காட்டி ஆசிரியப் பெருமான், "இவர் யார்?" என்று ராஜாஜியிடம் கேட்டார். ராஜாஜி என்னைச் சுட்டிக் காட்டி, "இவர் உங்களுக்கு எப்படியோ, அப்படி மகாத்மாகாந்திக்கு அவர்" என்று சொன்னார். அப்போது ஆசிரியப் பெருமானின் முகம் மலர்ந்தது. மகாதேவ தேசாயைத் தரிசித்துக் கொண்டது மாத்திரம் அல்ல; தமக்கு என்னிடத்திலுள்ள பேரன்பை ராஜாஜி அறிந்திருக் கிறாரே என்ற எண்ணந்தான் அந்த மலர்ச்சிக்குக் காரணம்.

மகாத்மா காந்தி அவர்கள் அமர்ந்திருந்த இடத்திற்கு நாங்கள் போனோம். போனவுடன் ஆசிரியப்பெருமானை நோக்கி காந்தி அவர்கள், கையை அமர்த்திக் காட்டி, "உட்காருங்கள் ஐயா" என்று தமிழிலே சொன்னார். ஆசிரியப்பெருமான் காந்தியின் அருகில் உட்கார்ந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். பிறகு மகாசபை கூடும் இடத்திற்கு வந்தார்கள்.

தமிழின் பெருமையும், தமிழர்களின் பெருமையும் ஆசிரியர் சங்க நூல்களில் எவ்வாறு வருணிக்கப் பெற்றுள்ளன என்பதைத் தாம் எழுதிய

வரவேற்புரையில் எடுத்துக்காட்டி, மகாத்மா காந்தியை வரவேற்பதில் நாம் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறோம் என்பதையும் எடுத்துச்சொல்லிச் சபையில் உள்ளவர்களையும் காந்தியையும் மகிழ்வித்தார். அந்த வரவேற்பை ஹிந்தியிலும் மொழிபெயர்த்து வாசித்தார்கள். அதை மொழி பெயர்த்தவர் என் நண்பர் திரு கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்கள்.

அந்த வரவேற்பைக் கேட்டு மகிழ்ந்த காந்தியடிகள், "தமிழின் வடிவமாகவே இருக்கும் இவர்கள் திருவடியில் இருந்து தமிழ் பயில வேண்டுமென்ற ஆசை எனக்கு உண்டாகிறது. பல வேலைகளை உடைய எனக்கு அந்தச் சந்தர்ப்பம் எப்போது கிடைக்கப் போகிறது?" என்று சொன்னார். மகாத்மா காந்தியாகிய தெய்வமும், தமிழ்த்தெய்வமும் சந்தித்த இந்தச் சந்திப்பு என் மனத்தை விட்டு என்றும் அகலாது. இருவரும் சத்திய சோதனை செய்தவர்கள். காந்தியடிகள் தம் வாழ்க்கையில் சத்தியசோதனை செய்தார். ஆசிரியப்பெருமான் தமிழ் நூல்களிற் சத்தியசோதனை செய்தார். ஆசிரியப்பெருமானின்பேச்சைஹிந்தியில்கேட்டுத்தமிழ்மொழிஇலக்கியச் சுவை மிகுந்தது என்பதை அவர்கள் தெரிந்து கொண்டார்கள் பெருங்கூட்டமாக வந்திருந்த காகா காலேல்காரும் பிறரும் தமிழின் பெருமையை உணர்ந்து மகிழ்ந்தனர்.

### வெ.ப.சுப்பிரமணிய முதலியார் 80-ஆம் ஆண்டு நிறைவு

வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் கால்நடை மருத்துவத் துறையில் பெரிய அதிகாரியாக இருந்தவர். தமிழ் நூல்களில் நல்ல பயிற்சி உடையவர்; முதியவர். கம்பராமாயணத்திலுள்ள அரிய பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கம்பராமாயண இன்கவித் திரட்டு என்று வெளியிட்டிருக் கிறார். ஆசிரியப்பெருமானிடம் அவருக்கு அளவிலா மதிப்பு உண்டு. அவருக்குத் திருநெல்வேலியில் 80-ஆவது ஆண்டு நிறைவு விழா நடை பெற்றது. 16-7-1937 அன்று பல புலவர்கள் பாராட்டிப் பேச விழா நன்றாக நிறைவேறியது. அந்த விழாவுக்குத் தலைமை தாங்க வேண்டுமென்று திரு டி.கே.சி. அவர்களும், குமாரசாமி ரெட்டியார் அவர்களும் ஆசிரியப்பெரு மானைக் கேட்டுக்கொண்டார்கள். டி.கே.சி. மிகவும் வற்புறுத்திக் கடிதம் எழுதியிருந்தார். "தங்கள் உடல் நிலையை உத்தேசித்து, தாங்கள்தாம் தலைமை வகிக்க வேண்டும் என்று வற்புறுத்து வதற்கு எங்களுக்குக் கொஞ்சம் தயக்கந்தான்; என்றாலும், பல காரணங்களை எண்ணி இந்த விழாவுக்குத் தலைமை தாங்கத் தகுதி உடையவர் தாங்களே என்பதனால் வற்புறுத்துகிறோம். தாங்கள் சுப்பிரமணிய முதலியார் விஷயத்தில் அளவிறந்த ஆர்வம் உடையவர்கள். எப்படியும் சிரமத்தைப் பாராமல் ஆகஸ்டு மாதம் முதல் தேதி அன்று நடைபெற இருக்கும் விழாவுக்கு வந்திருந்து தலைமை வகித்துச் சிறப்பிக்க வேண்டுமென்று எழுதுகிறேன்" எனக்

கேட்டுக் கொண்டார். ஆசிரியப்பெருமானும் ஒப்புக்கொண்டார். அப்படியே அங்கே சென்று விழாவை நடத்தி வைத்தார்கள். பழுத்த பழம் ஆகிய வெ.ப.சுப்பிரமணிய முதலியார் அவர்கள் ஐயரவர்களை வரவேற்க ஸ்டேஷனுக்கு ஓடி வந்துவிட்டார். சிறுபிள்ளை போல அவர் ஓடி வந்து ஆசிரியப்பெருமானை வரவேற்றார். அந்தக் காட்சி எல்லோர் உள்ளத்தையும் உருக்கியது. அந்த முதியவருக்கு ஆசிரியரிடம் இருந்த அன்பை யாவரும் உணர்ந்து கொண்டனர்.

### 500 பேர் கிடைக்கவில்லை

ஆசிரியப்பெருமானுக்கு தமிழிலுள்ள எல்லா நூல்களிலும் அதிக ஈடுபாடு இருந்தது. சங்க நூல்கள் முதல் நாட்டுப் பாடல் வரை எதுவானாலும் அவரது கவனத்தை ஈர்த்தது. பல பிரபந்தங்கள் வெளிவராமல் இருந்தன. எப்படியாவது அவற்றை எல்லாம் மாதம் ஒன்றாகவாவது வெளியிட வேண்டுமென்று நினைத்தார். மாதம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் தரும் வண்ணம் 500 பேர்களைச் சந்தாதாரர்களாக ஆக்கினால் மாதம் ஒன்றுக்கு ஒரு புத்தகத்தை வெளியிடலாம் என்று நினைத்தார். 1937-ஆம் வருஷம் முதல் முதலாக அழகர் கிள்ளைவிடுதூது வெளியாயிற்று, அதன் பிறகு திருவாரூர்க் கோவையை வெளியிட்டார். ஆனால் ஆசிரியப் பெருமான் நினைத் ததைப் போலப் போதிய அன்பர்கள் அதில் ஊக்கம் காட்டாமையினால் இந்த ஏற்பாடு தொடர்ந்து நடைபெற முடியவில்லை. தமிழன்பர்களில் 500 பேர்களாவது இந்த முயற்சிக்குத் தொடர்ந்து ஊக்கம் கொடுத்திருப்பார்களேயானால் எத்தனையோ பிரபந்தங்கள் வெளி வந்திருக்கும். தமிழைப்பற்றி வானளாவப் பேசுவோர் பலர் இருந்தும், புத்தகம் வாங்க ஐந்நூறு பேர் கிடைக்கவில்லையே என்று வருந்தினார். ஆசிரியர் இறைவன் ஆணை எப்படியோ அப்படித்தான் எல்லாம் நடக்கும் என்று சமாதானம் அடைந்தார்.

## 38. குறுந்தொகைப் பதிப்பு

சென்னைப் பல்கலைக்கழகத்தின் நிர்வாக சபையில் டி.சிவராம சேதுப்பிள்ளை என்பவர் உறுப்பினராக இருந்தார். அவருக்கு ஆசிரியப் பெருமானிடம் மிக்க பக்தி. ஆசிரியப் பெருமானுக்குத் தாம் ஏதேனும் உதவி செய்யவேண்டுமென்று எண்ணினார்.

ஆசிரியப் பெருமான் எட்டுத்தொகை நூல்கள் முழுவதும் பதிப்பிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டிருந்தார். இடையிலே வேறு சிலர் சில நூல்களைப் பதிப்பித்துவிட்டமையினால் அவற்றைப் பதிப்பிக்க முற்பட வில்லை. என்றாலும் குறுந்தொகையை ஆராய்ச்சி செய்து கொண்டு வந்தார். அதற்கு முன்பே ஒருவர் உரையெழுதிப் பதிப்பித்திருந்தார்; சங்க நூல்களின் மரபு தெரியாமல் ஏதோ ஒருவகையில் உரையெழுதி அச்சிட்டிருந்தார். அவர் அச்சிட்டு விட்ட காரணத்தினால் அதனைத் திரும்பவும் அச்சிட வேண்டாம் என்று இருந்தார் ஆசிரியர். என்றாலும் பல அரிய குறிப்புக்களை சேகரித்து வைத்துக் கொண்டிருந்தார். அவருக்கு அந்த நூலை நல்ல முறையில் வெளியிடவேண்டுமென்ற ஆர்வம் உள்ளுக்குள் இருந்தது. பல ஆண்டு களுக்கு முன்னால் வேறொருவரால் அச்சிடப்பெற்ற குறுந்தொகை எங்கும் கிடைக்காமல் இருந்தமையினால் தம்முடைய முயற்சியைத் தொடங்கலாம் என்று ஆசிரியர் எண்ணினார்.

குறுந்தொகை எட்டுத்தொகையில் இரண்டாவதாகச் சொல்லப் பெறுவது. அதற்கு விரிவான உரை எழுத வேண்டுமென்று கருதிப் பல குறிப்புக் களைச் சேகரித்தார். மற்ற நூல்களுக்கு ஆசிரியப் பெருமான் விரிவான உரை எழுதவில்லை; குறிப்புக்களையே கொடுத்திருந்தார். ஆனால் குறுந் தொகையை விரிவான முறையில் உரையுடன் வெளியிட வேண்டுமென்ற முயற்சி அவரிடம் உண்டாயிற்று. மிக ஊக்கத்துடன் ஆராய்ந்தார். நச்சினார்க் கினியர், பேராசிரியர் ஆகிய இரண்டு பேர்களும் முன்பே குறுந்தொகைக்கு உரை எழுதியுள்ளார்கள் என்பது வேறு சில குறிப்புக்களிலிருந்து தெரிய வந்தாலும் அந்த உரைகள் எதுவும் கிடைக்கவில்லை. அவை கிடைக் காததனால் ஆசிரியப்பெருமான் எதையோ இழந்துவிட்ட உணர்ச்சி பெற்றிருந்தார்.

ஆசிரியப்பெருமானே குறுந்தொகைக்கு உரையெழுதியவுடன் நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் இயற்றிய உரை கிடைக்காவிட்டாலும் அதனால் குறையொன்றுமில்லை என்ற எண்ணம் பல பேர்களுக்கு உண்டாயிற்று. குறுந்தொகைப் பதிப்பு மிக விரிவாக அமைந்தது. ஒப்புமைப்பகுதி முதலியவை மிக விரிவாக அங்கங்கே கொடுக்கப்பட்டன. அப்படியே அகராதியும், எல்லாச் செய்திகளையும் தொகுத்து முறைப்படுத்தி அமைந்திருந்தது. அதன் முகவுரையில் ஆசிரியப்பெருமான் என்னைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

"முன்பு குறிப்பிட்ட என் பிராய முதிர்ச்சியாலும் சரீரத் தளர்ச்சி முதலியவற்றாலும் முன்போல எந்தக் காரியத்தையும் நான் கருதியபடி தனியே இருந்து நிறைவேற்ற இயலவில்லை. ஆயினும் தமிழ் நூல்களை ஆராய்ந்து பதிப்பித்தலில் உள்ள ஆவல் இன்னும் தணியவில்லை. தமிழ்த் தெய்வமே அவ்வப்பொழுது என் கவலையை நீக்கி வருவதாக எண்ணுக்கிறேன். கலாநிலையமாகிய சென்னைச் சர்வ காலசாலையாருடைய பேராதரவால் வெளிவரும் இந்நூற் பதிப்பு, தமிழன்பர்கள் எதிர்பார்க்கிறபடி திருப்திகரமாக அமைய வேண்டுமே என்ற கவலை எனக்கு உண்டு. இச்சமயத்தில் மேற் கூறிய வித்துவான் சிரஞ்சீவி கி.வா.ஜகந்நாதையர் இந்நூலுக்கு நான் பல வருஷங்களாக எழுதியும் தொகுத்தும் வைத்துள்ள பல வகையான ஆராய்ச்சிக் குறிப்புகளையெல்லாம் என் கருத்துக்கு இணங்க முறைப் படுத்தி நல்ல வடிவத்தில் அழகு பெற அமைப்பதிற் பெரிதும் துணை புரிந்தார். அவருடைய பேராற்றலையும் எழுதும் வன்மையையும் தமிழன்பையும் என் மனமாரப் பாராட்டுகின்றேன். அவருக்கு எல்லா நன்மைகளையும் அளித்தருளும் வண்ணம் தோன்றாத் துணையாக நிற்கும் முழுமுதற் கடவுளை இறைஞ்சுகின்றேன்" என்பது அந்தப் பகுதி.

### மகரநெடுங் குழைக்காதர் பாமாலை

தென்திருப்பேரை என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் பெயர் மகரபூஷணப் பெருமாள். அதனைத் தமிழில் மகரநெடுங்குழைக்காதர் என்று வழங்குவர். அவரைப் பற்றிய ஒரு பாமாலையை அவரது அன்பர் ஒருவர் சிறையில் இருந்த காலத்தில் பாடியதாக வரலாறு. அதனைத் திருநெல்வேலிக்குப் பக்கத்திலுள்ளவர்கள் பாராயணம் பண்ணுவது வழக்கம். அதைப் பற்றிச் 'சிறை நீக்கிய செய்யுள்' என்ற கட்டுரையை ஆசிரியர் எழுதியிருக்கிறார்.

சென்னைக்கு வந்த பெரும்புலவரும், கவிஞருமாகிய திரு அனந்த கிருஷ்ணையங்கார் அந்தப் பாமாலையை நல்லமுறையில் அச்சிட வேண்டு

மென்ற தம் விருப்பத்தை ஆசிரியப் பெருமானிடம் தெரிவித் திருந்தார். ஆசிரியப்பெருமான் அப்படியே அந்தப் பாமாலைக்குக் குறிப்புரை எழுதி, அதைக் கலைமகள் பத்திரிகையில் அனுபந்தமாக வெளியிட்டார். பிறகு அது தனிப் புத்தகமாகவும் வந்தது. அந்தப் பதிப்பு அந்தப் பாமாலையின் சிறப்பை மிகுதிப்படுத்தி யாவரையும் மகிழ்வித்தது. ஆசிரியப்பெருமான் கைவண்ணம் பெற்ற எந்த நூலும் தனிச்சிறப்புடன் விளங்குவதைத் தமிழுலகம் நன்கு அறியும்.

### பள்ளிக் கூடத்துக்கு நிலம் தந்தது

ஆசிரியப்பெருமான் ஒருமுறை திருவாவடுதுறைக்குச் சென்றுவிட்டுத் தம் ஊராகிய உத்தமதானபுரத்திற்குச் சென்றிருந்தார். அப்போது போர்டு எலிமெண்டரிப் பள்ளிக்கூடம் ஒன்று அக்கிர காரத்திற்குள் நடந்து வந்தது. அந்தப் பள்ளிக்கூடத்தில் ஹரிசனச் சிறுவர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று சிலர் ஆலோசனை கூறினார்கள். அக்கிரகாரத்திற்குள் இருக்கும் பள்ளிக் கூடத்தில் ஹரிசனப் பிள்ளைகள் வந்து படிப்பது என்பது சரியல்ல என்று அங்கிருந்தவர்களுக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. எனவே, பள்ளிக்கூடத்திற்கு வேறு இடம் பார்க்கலாம் என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். அப்போது கிராமத்திற்குச் சென்றிருந்த ஆசிரியரிடம் இந்தச் செய்தியைக் கிராம முன்சீப் அண்ணாசாமி ஐயர் வந்து தெரிவித்தார்.

அக்கிரகாரத்திற்குப் புறம்பாக ஒரு புன்செய் நிலம் ஆசிரியப் பெருமானுக்குரியதாக இருந்தது. அந்த இடத்தில் பள்ளிக் கூடத்தைக் கட்டினால் எல்லோரும் வந்து படிப்பதற்கு வசதியாக இருக்கும் என்று எண்ணிய ஆசிரியப்பெருமான் அந்த இடத்தையே பள்ளிக்கூடத்திற் என்று தானமாக வழங்கினார். கிராமத்தில் உள்ளவர்களுக்கெல்லாம் மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆசிரியப் பெருமான் விருப்பப்படியே, அவருடைய சிறிய தந்தையார் பெயரில் அந்தப் பள்ளிக்கூடத்திற்குச் சின்னசாமி நிலையம் என்ற பெயரை அமைத்தனர். உத்தமதானபுரம் குளக்கரையில் அந்தப் பள்ளிக்கூடம் சின்னசாமி நிலையமாக விளங்கி வந்தது.

### குமரகுருபரர் பிரபந்தங்கள்

திருப்பனந்தாள் மடத்திற்குக் காசி மடம் என்ற பெயர் உண்டு. குமரகுருபர முனிவர் காசியில் இருந்து சைவத்தையும் தமிழையும் பரப்பினார். அவருக்குப் பின் வந்த பரம்பரையில் ஒருவர் திருப்பனந்தாளில் ஒரு மடத்தை நிறுவினார். காசியில் இருந்த முனிவர் நிறுவியதால் அதற்குக் காசிமடம் என்றும் அதன் தலைவர்களுக்குக் காசிவாசி என்ற சிறப்புப் பெயரும் வழங்கலாயின. அந்த மடத்தில் தலைவர்களாக இருந்தவர்கள்

ஆசிரியப்பிரானிடம் பெருமதிப்பு உடையவர்களாக இருந்தார்கள். அங்கே சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் மடத்தின் தலைவராக இருந்தார். ஐயரவர்களிடம் பாடம் கேட்ட சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகளுக்குப் பிறகு அந்த மடத்தின் தலைவராக ஆனார். அவர் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் பரம்பரையில் வந்தவர். அவருக்குத் தம்முடைய மடத்தின் முதல்வராகிய குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களை நல்ல முறையில் ஐயரவர்களைக் கொண்டு அச்சிட வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. ஐயரவர்கள் பதிப்பித்தால் அதற்குத் தனி மெருகு ஏறும் என்று எண்ணினார். தம் விருப்பத்தை ஒருமுறை குமரகுருபரர் திருநாளுக்கு ஆசிரியப்பெருமான் சென்றிருந்த போது சாமிநாதத் தம்பிரான் வெளியிட்டார். அதுமுதல் ஆசிரியப் பெருமான் அந்தப் பிரபந்தத்திற்குக் குறிப்புக்களை எழுதத் தொடங்கினார். பல காலமாகச் சேகரித்து வந்த குறிப்புக்களைக் கொண்டு அதற்கு மிகவும் விரிவான முகவுரையை அமைத்தார். குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தம் 16-9-1939இல் வெளிவந்த போது சாமிநாதத் தம்பிரானுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

### காசிவாசிப் பெருமான் செய்த அரிய செயல்

ஒருமுறை அந்தப் புத்தகம் வெளிவந்த பிறகு குமரகுருபர சுவாமிகள் திருநாளுக்கு ஆசிரியப்பெருமான் திருப்பனந்தாள் சென்றிருந்தார். அப்போது ஆசிரியப் பெருமானைத் தனி இல்லத்தில் இருக்கச் செய்து, வேண்டிய உபசாரங்களைச் செய்யும்படி மடாலயத் தலைவர் ஏற்பாடு செய்திருந்தார்.

ஆசிரியப்பெருமான் வந்திருப்பது தெரிந்து பல புலவர்கள், பெரியவர்கள் வந்திருந்து ஆசிரியருடன் அளவளாவுவார்கள். பொழுது போவதே தெரியாது. அவர் தங்கிய இடத்திற்குத் தேர்ச் சீலை முதலியவற்றைக் கொண்டு அலங்காரம் செய்வது வழக்கம்.

ஒருநாள் மாலை ஏழு மணி இருக்கும்; ஆசிரியப்பெருமான் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். நானும், வேறு சில மாணவர்களும் பக்கத்தில் அமர்ந்திருந்தோம். அந்தச் சமயத்தில் கொல்லைப்புறக் கதவின் தாழ்ப்பாள் ஓசைப்பட்டது. மங்கலான வெளிச்சத்தில் யார் உள்ளே வருகிறார்கள் என்பது ஆசிரியப்பெருமானுக்குத் தெரியவில்லை. திருப்பனந்தாள் மடத்தின் தலைவர் மெல்ல உள்ள நுழைந்து வந்தார். நாங்கள் எழுந்து நின்றோம். "யார் வருகிறார்கள்!" என்று ஆசிரியப்பெருமான் கேட்டபோது, "எசமான் சுவாமிகள் வருகிறார்கள்" என்று சொன்னோம். அந்த மடத்தின் அதிபர்களை எசமான் சுவாமிகள்" என்று வழங்குவது மரபு. "அப்படியா?" என்று அவர் எழுந்திருந்தார். தம்பிரான் சுவாமிகள் ஆசிரியப்பெருமானிடம் வந்தவுடன்,

"சொல்லி அனுப்பியிருந்தால் நானே தங்களிடம் வந்திருப்பேனே; எதற்காகத் தாங்கள் இப்படிப் பின்புறக் கதவு வழியாக வரவேண்டும்?" என்று அன்போடு ஆசிரியப்பெருமான் கேட்டார்.

சாமிநாதத் தம்பிரான் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் பரம்பரையில் வந்தவர். அந்தத் தேசிகர் கோடீச்சுரச் கோவை, தஞ்சைப் பெருவுடையார் உலா, சரபோஜீ பூபாலர் குறவஞ்சி என்ற மூன்று நூல்களை இயற்றியிருக்கிறார். அவற்றை ஆசிரியர் அழகிய முறையில் பதிப்பித்திருந்தார். அன்றியும் திருப்பனந்தாளின் முதல்வராகிய குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களையும் குறிப்புரை முதலியவற்றுடன் வெளியிட்டிருந்தார்.

"தாங்கள் செய்திருக்கும் உபகாரத்திற்கு இது ஒரு பொருட்டா? தாங்கள் சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்களைப் பதிப்பித்ததன் மூலம் நான் பிறந்த குலத்தை உயர்த்திவிட்டீர்கள்; குமரகுருபரர் பிரபந்தங்களை வெளியிட்டு நான் புகுந்த மடாலயத்தின் சிறப்பையும் உயர்த்திவிட்டீர்கள். இதற்கு நான் என்ன கைம்மாறு செய்தாலும் ஈடாகாது" என்று சொல்லி ஆயிரம் ரூபாயை ஆசிரியப்பெரு மானிடம் வழங்கினார். ஆசிரியப்பெருமானுக்கு அளவிறந்த வியப்பு உண்டாயிற்று. உள்ளத்தை நெகிழச்செய்யும் இந்த நிகழ்ச்சியை ஆசிரியப்பெருமான் பலரிடம் அடிக்கடி சொல்லிச் சொல்லி உருகியது உண்டு.

### ஹிந்தியைப் பற்றி

1938-ஆம் ஆண்டு சுப்பராயன் அவர்கள் கல்வி மந்திரியாக இருந்தார். அப்போது இந்தி எதிர்ப்பு இயக்கம் தமிழ்நாட்டில் இருந்து வந்தது. பள்ளிக் கூடங்களில் இந்தியைக் கட்டாயப் பாடமாகப் போதிக்க வேண்டுமென்ற முயற்சிக்கு எதிர்ப்பு அதிகமாக இருந்தது. டாக்டர் சுப்பராயன் அவர்கள் இந்தியைப் பொறுத்த வரையில் ஆசிரியப்பெருமானுடைய கருத்து இன்னது என்று தெரிந்து கொள்வதற்காக வந்திருந்தார். அதைப்பற்றி ஆசிரியப் பெருமான் சொல்லும்போது, "இந்தி படிப்பதில் தவறு இல்லை; ஆனால் அதனைக் கட்டாய பாடமாக்கக் கூடாது" என்று தம் கருத்தைத் தெரிவித்தார். அதைக் கேட்டுச் சுப்பராயன் அவர்கள் ஒருவித ஏமாற்றம் அடைந்திருக்கலாம். ஆயினும் ஆசிரியப்பெருமான் தம் உள்ளத்தில் தோன்றியதைச் சொன்னார்.

### திருச்சி வானொலி

திருச்சியில் அகில இந்திய வானொலி நிலையம் தொடங்கிய போது முதல்முதலாக ஆசிரியப்பெருமான் அங்கு வந்து பேச வேண்டுமென்று

அழைத்தார்கள். ஆசிரியப்பெருமானுக்கு உடல் நலம் சரியாக இல்லாமை யினால் போக முடியவில்லை. ஆயினும் ஒரு கட்டுரை எழுதி அனுப்பினார். அதனை அங்குள்ளவர்கள் படித்து ஒலி பரப்பினார்கள். அந்தக் கட்டுரையில் பிள்ளையவர்களின் சிறப்பை விரிவாக எழுதினார். அந்தக் காலத்தில் அவர் ஒரு தமிழ் ஒலிபரப்பு நிலையமாக விளங்கினார் என்ற கருத்தை அதில் தெரிவித்திருந்தார்.

## கலைமகள் கோவில் திறப்பு விழா

செட்டிநாட்டில் கொப்பனாப்பட்டி என்ற ஊரில் மெய்யப்பச் செட்டியார் என்ற செல்வர் நம்முடைய பண்பாட்டு முறையில் கல்வி கற்பிக்கவேண்டுமென்று 'கலைமகள் கல்லூரி' என்று பெண்களுக்கென்று ஒரு பள்ளிக்கூடம் தொடங்கினார். அந்தக் கல்லூரியில் கலைமகளுக்கு ஒரு சிறு கோவில் அமைத்து அங்கே நாள்தோறும் மாணவிகள் வந்து வழிபாடு செய்து வகுப்பறைகளுக்குச் செல்லுமாறு செய்தார். அந்த கோவிலைக் கட்டின பிறகு ஆசிரியப்பெருமான் வந்து அந்தக் கோவிலைத் திறந்து வைப்பது பொருத்தம் என்று எண்ணினார். ஆசிரியப்பெருமானுக்கு அப்போது முதுமையினால் மிக்க தளர்ச்சி உண்டாகியிருந்தது என்றாலும் மெய்யப்பச் செட்டியார் நேரில் வந்து, கோவிலைத் திறந்து வைக்க, "தாங்கள் தாம் வரவேண்டும்" என்று வற்புறுத்தினார். சென்றுவர எல்லாச் சௌகரியங்களையும் செய்து கொடுப்பதாகச் சொன்னார். அப்படியே ஆசிரியப் பெருமான் 1-6-1939இல் அங்குச் சென்று அந்தக் கலைமகள் கோவிலைத் திறந்துவைத்தார். செட்டிநாட்டு நண்பர்கள் பலர் அந்தச் சமயத்தில்அங்குவந்திருந்துதங்கள்தங்கள்வீடுகளுக்குவரவேண்டுமென்று அழைத்தார்கள். முதுமை காரணமாகப் பலவிடங்களுக்கும் போக முடிய வில்லை. என்றாலும் பல பெரியவர்கள் வந்து பார்த்து விட்டுச் சென்றார்கள்.

## டாக்டர் பைதான்

ஜெர்மன் தலைநகராகிய பெர்லினில் டாக்டர் ஹெச்.பைதான் என்பவர் இருந்தார். அவர் ஒரு பாதிரியார். ஜெர்மன் மிஷனில் கும்பகோணத்தில் பல ஆண்டுகள் இருந்தவர். அங்கே இருந்தபோது தமிழ் நூல்களைக் கற்றார். பெர்லின் நகர் திரும்பிய பிறகும் அங்கே தமிழாசிரியராக இருந்து ஆராய்ச்சி செய்து வந்தார்.

'ஹிட்லர் ஆர்?' என்ற புத்தகத்தை அவர் அப்போது எழுதியிருந்தார். அவர் அடிக்கடி ஆசிரியப்பெருமானுக்கு நீண்ட கடிதம் எழுதுவது உண்டு. தாம் கும்பகோணத்தில் இருந்தபோது பலரைச் சந்தித்த செய்திகளை

எழுதுவார். ஆசிரியப்பெருமான் எழுதிய சில தமிழ்க் கட்டுரைகளை அவர் ஜெர்மன் மொழியில் மொழி பெயர்த்து வெளியிட்டார்.

### 'என் சரித்திரம்'

ஆசிரியப்பெருமானுக்குச் சதாபிஷேகம் நடந்தபோது அவர் தம்முடைய வரலாற்றை எழுத வேண்டுமென்று பல நண்பர்கள் வற்புறுத்தினார்கள். அப்போது ஆனந்தவிகடன் ஆசிரியராக இருந்த கல்கி அவர்கள் வாரந் தோறும் அவரது சரித்திரத்தை விகடனில் எழுதி வந்தால் அதைப் பலரும் விரும்பிப் படித்தறிய முடியும் என்றார். ஆனால் அப்போது அதை எழுத முடியவில்லை.

மறுபடியும் 1939-ஆம் ஆண்டுக் கடைசியில் கல்கி அவர்கள் நேரில் வந்து எப்படியாவது 1940-ஆம் வருஷம் முதல் அந்த வரலாற்றை எழுத வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அப்போது ஆனந்தவிகடன் ஆசிரியராக அவர் இருந்தார். ஆசிரியப்பெருமானுக்கும் தம்முடைய சரித்திரத்தை விரிவான முறையில் எழுத வேண்டுமென்ற அவா இருந்தது. ஆகவே, 1940-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஆனந்தவிகடனில் 'என் சரித்திரம்' என்ற பெயரில் எழுத ஆரம்பித்தார். அதற்காகப் பலபல இடங்களுக்கு எழுதி அங்கங்கே உள்ள கட்டிடங்களையும், கோவில்களையும் படம் எடுத்து அனுப்பச் சொல்லி வெளியிட்டார்.

"என் சரித்திரம்" தொடர்ந்து வெளிவந்தபோது பலர் அதைப் படித்துப் பழங்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த நிலைமையை அறிந்து பாராட்டி எழுதினார்கள். ஆனால் 1942-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28-ஆந் தேதி ஆசிரியப்பெருமான் அவர்கள் காலமானதால் அந்த வரலாறு முற்றுப்பெறவில்லை.

### நோயும் சிகிச்சையும்

1939-ஆம் ஆண்டு நவம்பர் முதலிலிருந்தே ஆசிரியப் பெருமானுக்குச் சிறுநீர் கழிக்கும் இடத்தில் ஏதோ ஒரு புண் இருந்து வந்திருக்கிறது. அதை அவர் வெளியில் சொல்லவில்லை. ஆனால் அது வர வர அதிகமாகித் தொல்லை கொடுத்து வந்தது. அதை அறிந்து அவருடைய குமாரர் தக்க மருத்துவரிடம் காட்ட வேண்டுமென்று எண்ணி என்னை அழைத்துக் கொண்டு டாக்டர் திருமூர்த்தியிடம் சென்றார். அவர் வந்து பார்த்தார். அது கான்சர் என்று தெரிய வந்தது. உடனே சிகிச்சை செய்யாவிட்டால் அது படர்ந்து உயிருக்கே ஆபத்தை உண்டாகும் என்ற உண்மையைச் சொன்னார். அப்பால் எப்படிச் சிகிச்சை செய்வது என்று எண்ணினார்கள்.

1940-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் டாக்டர் திருமூர்த்தி திரும்பவும் வந்து எப்படியாவது ஆஸ்பத்திரியில் சேர்த்து அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டுமென்று வற்புறுத்திவிட்டுப் போனார். அப்பால் 21-1-1940 அன்று ராயபுரம் ஆஸ்பத்திரியில் ஆசிரியப்பெருமானைச் சேர்த்தார்கள். அங்கே முக்கிய டாக்டராக இருந்த டாக்டர் கனகசபேசன் என்பவர் ஆசிரியப் பெருமானுக்கு வேண்டிய சிகிச்சை செய்தார். ஆசிரியர் ஆஸ்பத்திரியில் இருந்தபோது எல்லோருக்கும் அச்சம் உண்டாயிற்று. அப்போது அவர்களுடைய சரித்திரம் ஆனந்தவிகடனில் வந்த கொண்டிருந்ததால் அவரைப் பற்றி அறிந்த பலரும் நிறையக் கடிதங்கள் எழுதி விசாரித்தார்கள். சிலர் நேரிலேயே வந்து பார்த்துச் சென்றார்கள். அறுவை மருத்துவத்திற்குப் பின்பும் வயிறு வீக்கம் முதலிய தொல்லைகள் ஏற்பட்டன. ஆனால் டாக்டர்களது சிறந்த மருத்துவத்தினால் எல்லாத் தொல்லைகளும் இறைவன் திருவருளால் நீங்கின. 2-3-1940 அன்று ராயபுரம் ஆஸ்பத்திரியிலிருந்து ஆசிரியர் தியாகராச விலாசம் வந்து சேர்ந்தார்.

### சுப்பராயன் விருப்பம்

சென்னையில் கல்வி மந்திரியாக இருந்த திரு. சுப்பராயன் ஆசிரியப் பெருமானிடம் கல்லூரியில் படித்தவர். அவர் ஆசிரியப் பெருமானை அடிக்கடி வந்து பார்த்துப் பேசிப்போவார். அவர் சிறைக்குச் செல்லும் முன்பு ஒரு கடிதம் எழுதினார். "தங்கள் சரித்திரத்தை நான் வாரந்தோறும் படித்து மிகவும் மகிழ்ச்சி அடைந்திருக்கிறேன். சிறையிலும் படிக்கக்கூடிய பாக்கியம் கிடைக்க வேண்டும் என்பது என் ஆசை" என்று எழுதினார்.

### திருவாவடுதுறை ஆதீன வரலாறு

திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்து படித்தமையினால் ஆசிரியருக்கு அந்த ஆதீனத்தின் மீது அளவிடமுடியாத அன்பு இருந்தது. அவர் எங்கே பேசினாலும் திருவாவடுதுறையைப் பற்றிச் சொல்லாமல் இருக்க மாட்டார் என்பதை முன்பே சொல்லியிருக்கிறேன். அந்த ஆதீனம் பிள்ளை யவர்களை ஆதரித்த நினைவும், தாம் அங்கே படித்து முன்னுக்கு வந்த நினைவும் சேர்ந்து அந்த மடத்தைப் பற்றிய வரலாற்றை விரிவாக எழுத வேண்டுமென்று நினைத்தார்.

அப்போது மடத்தில் இருந்த சங்கரலிங்கத் தம்பிரான் என்பவரும் ஆதீன வரலாறு ஆசிரியப்பெருமானால் எழுதப்பெற்று வெளிவந்தால் தமிழுலகம் படித்து மிகவும் இன்புறும் என்கிற தம் விருப்பத்தை ஆசிரியருக்குத் தெரிவித்தார். ஆசிரியப்பெருமானும் அதற்குரிய குறிப்புக் களைச் சேகரித்தார். ஆனால் அது நிறை வேறவில்லை. முக்கியமாக, சுப்பிரமணிய தேசிகரைக் குறித்துப் பிள்ளையவர்களின் சரித்திரத்தில்

எழுதியிருக்கிறார். அதற்குப் பின்பு 17-ஆவது பட்டத்தில் இருந்தவரைப் பற்றியும் விரிவாக எழுதவேண்டுமென்று ஆசிரியர் நினைத்தார். ஆனால் காலம் இல்லாமையினால் அதை எழுத முடியாமல் போயிற்று.

## 'இதய ஒலி' க்கு மதிப்புரை

திரு டி.கே.சிதம்பரநாத முதலியார் மிகவும் சுவையாகப் பேசுவார். ஆசிரியப்பெருமானிடம் மிக்க அன்பு உடையவர். கம்பராமாயணத்தில் அதிகப் பற்று உடையவர். அவர் சொற்பொழிவைக் கேட்ட பலர் கம்ப ராமாயணத்தைப் படிக்கத் தொடங்கினார்கள். அவருடைய விளக்கங்கள் நாடக பாணியில் அமைந்திருக்கும். அவருடைய கட்டுரைகளை எல்லாம் தொகுத்து 'இதய ஒலி' என்ற பெயரில் ஒரு புத்தகமாக வெளியிட்டார்கள். அதை ஆசிரியப் பெருமானுக்கு அனுப்பினார். அதைக் கண்டு ஆசிரியப் பெருமானுக்கு மிக்க உவகையுண்டாயிற்று. அந்த உவகையினால் அதைப் பாராட்டி 6-4-1941இல் ஒரு கடிதம் எழுதினார்.

"தாங்கள் அனுப்பிய 'இதய ஒலி' என்ற கட்டுரைத்தொகுதி கிடைத்தது. அருமை மகனை இழந்த துக்கத்தில் ஆழ்ந்திருக்கிற தாங்கள் ஞாபகம் வைத்து இங்கிருந்து போனவுடனே அனுப்பியது பற்றி என் நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"இந்தப் புத்தகத்தில் உள்ள விஷயங்களில் பெரும்பாலானவற்றை முன்பே படித்திருக்கிறேன். இப்போதும் படிக்கக் கேட்கிறேன். இனியும் கேட்பேன். கேட்கக் கேட்கச் சுவை முதிர்கின்றதேயொழியத் தளர்ச்சி தோன்றவில்லை.

"இதயத்தில் எழுகின்ற ஒலிகளை இந்த உருவத்தில் எழுதும் திறமை உங்களிடம் இருப்பதைத் தமிழ்நாட்டார் பல காலமாக அறிந்து மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். தங்கள் கட்டுரைகளைச் சேர்த்து அச்சிட்டுக் கொடுத் திருக்கும் உபகாரத்தை அவர்கள் பாராட்டிப் பயன்படுத்திக் கொள்வார்கள் என்பதில் தடையில்லை.

"சொல்லுகிற விஷயத்தை மற்றவர்கள் சந்தோஷமாக அனுபவித்துக் கேட்கும்படி சொல்வதென்பது எல்லோருக்கும் வராது. அந்த விஷயத்தைத் தாங்களே அனுபவிக்காமல் பேசி வரும் போது மற்றவர்களுக்கு எப்படித் தெளிவாகும்? தாங்கள் முதலில் அனுபவிக்கிறீர்கள். ஒரு முறை அல்ல; பல முறை அனுபவிக்கிறீர்கள். உங்கள் இதயத்தைத் தொட்டு எழும் அந்தச் சுவை மிகுந்த உணர்ச்சி ஒலிக்கிறது; உரையாக எழுத்தாக ஒலிக்கிறது. அப்படி ஊறி எழுந்த அந்த ஒலி மற்றவர்கள் இதயங்களையும் தொட்டு இன்புறுத்துகிறது.



கேவலட் ஹாலில் மகாமகோபாத்யாய டாக்டர் உ.வே.சாமிநாதயரின் 85வது பிறந்த தினக் கொண்டாட்டம் சென்னை ஹைக்கோர்ட்டு ஜட்ஜ் ஸ்ரீகே.எஸ்.கிருஷ்ணசாமி அய்யங்கார் தலைமையில் நடைபெற்றது

"ருசி கண்ட தமிழர்கள் இன்னும் வேண்டும் வேண்டுமென்று உங்களைக் கேட்டுத் தொந்தரவு கொடுக்கப் போகிறார்கள். அவர்கள் ஆவலைத் தணிக்கும் முயற்சிக்கு ஏற்ற மன அமைதியையும், ஊக்கத்தையும், சௌகரியத்தையும் தங்களுக்கு அருளும் வண்ணம் இறைவனைச் சிந்திக்கிறேன்" என்ற எழுதினார்.

அந்தக் கடிதத்தைக் கண்டு டி.கே.சி. மிக்க உற்சாகத்துடன் *14-4-1941*இல் பதில் எழுதினார்.

"நமஸ்காரம். 'இதய ஒலி' புத்தகத்தைப் பார்த்துவிட்டு எழுதியனுப்பிய கடிதம் கிடைத்தது. நேரான அனுபவத்தைக் கடிதத்தில் அப்படியே விளக்கியிருக்கிறீர்கள். இங்கே ஆவுடையப்பப் பிள்ளையவர்கள் முதலான பல நண்பர்களும் கடிதத்தை வாசித்துப் பார்த்து ரொம்ப அனுபவித்தார்கள். இப்படி இதயத்தில் பட்டதை எழுகிறவர்கள் தமிழ் நாட்டில் மிக அருமை என்று சொல்லி வியக்கவும் செய்தார்கள்.

"இதய ஒலியைப் படிக்கக் கேட்கிறேன். இன்னும் படிக்கக் கேட்பேன் என்று தாங்கள் பிரியத்தை அருமையாகக் காட்டியிருக்கிறீர்கள். மேற்படி விஷயத்தை நான் அனுபவித்தால் மட்டுமே பிறரை அனுபவிக்கச் செய்ய முடியும் என்ற அரிய உண்மையை அழகாய் எடுத்துச் சொல்லுகிறீர்கள்.

"என்னுடைய கட்டுரையை அப்படியாக ரொம்பப் பேர் அனுபவித்து விடுவார்கள் என்ற அபிப்பிராயம் எனக்குக் கிடையாது. விஷயம் நடை

யெல்லாம் பண்டித உலகத்துக்கு உகந்தவை அல்ல என்பது எனக்குத் தெரியும். தங்களுக்கும் ஒருவாறு தெரிந்த விஷயந்தான். ஆனால் தங்களுக்கு உவந்தவைதாம் என்று தெரிவதிலும், தமிழர்கள் இது மாதிரி வேண்டும் என்று தொந்தரவு செய்வார்கள் என்று ஆசி கூறுவதிலும் எனக்கு எவ்வளவோ திருப்தியும் எவ்வளவோ ஊக்கமும் பிறக்கின்றன.

“தாங்கள் பாராட்டி எழுதியதுபோல் தமிழ்ப் பயிற்சி உடையவர்கள் யாவரும் பாராட்ட மாட்டார்கள் என்பது என் அபிப்பிராயம் நண்பர் களுடைய அபிப்பிராயமும் கூடத்தான். என் மனமார்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்கிறேன்.”

தங்கள் அன்புள்ள
டி.கே.சிதம்பரநாதன்”

**7-12-1941**இல் கொள்ளுப்பேரன் வேங்கடகிருஷ்ணனால் கனக ரத்னாபிஷேகம் ஆசிரியருக்கு நடைபெற்றது.

# 39. இறுதிக்காலம்

### கீழே விழுந்தது

1942-ஆம் ஆண்டு ஜனவரி 12-ஆம் தேதி திங்கள்கிழமை வழக்கம் போல் ஆசிரியர் மேல்மாடியில் ஒரு பெஞ்சியில் படுத்திருந்தார். விடியற் காலம் 4 மணி இருக்கும். எழுந்திருந்து கீழே வரும்போது விழுந்துவிட்டார். முழங்காலில் அடிபட்டு இரத்தம் வந்தது. நினைவு இல்லாமல் மயக்கத் துடன் அமர்ந்துவிட்டார். அவரைத் தூக்கி வந்து ஒரு நாற்காலியில் அமர வைத்தார்கள். பின்புதான் ஞாபகம் வந்தது. காலில் வலி அதிகமாகப் பொறுக்க முடியாத அளவு இருப்பதாகத் தெரிவித்தார்.

காலையில் ஒரு டாக்டர் வந்து பார்த்து, சுளுக்கு இல்லை என்று சொல்லி, சில தைலங்களைக் கொடுத்துத் தடவச் சொல்லி விட்டுச் சென்றார்; ஒரு கட்டும் போட்டுவிட்டுச் சென்றார் பின்னர்ச் சில தினங்கள் டாக்டர் தினமும் வந்து பார்த்தார். வலி குறையவே இல்லை.

பிறகு டாக்டர் திருமூர்த்தி ஆசிரியப்பெருமானை வந்து பார்த்தார். எலும்பு முறிவு இருக்கலாமோ என்று சந்தேகித்து எக்ஸ்ரே எடுக்கச் சொன்னார். எக்ஸ்ரேயில் இடுப்பில் எலும்பு முறிவு இருப்பதாகத் தெரிந்து. உடனே டாக்டர் வேண்டிய சிகிச்சை செய்து படுக்கையிலேயே படுத்திருக்க வேண்டுமென்று சொன்னார்.

நோயினால், படுத்த படுக்கையில் இருந்த நிலையிலும் ஆசிரியப் பெருமான் பாடம் சொல்வதை விடவில்லை. எந்த வகையான இளைப்பு இருந்தாலும் பிறருக்குப் பாடம் சொன்னால் அந்த இளைப்பு அவருக்கு மறந்தே போகும். தமிழே மருந்தாக இருந்தது.

### திருக்கழுக்குன்றம் சென்றது

அப்போது 2-ஆவது உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்தது. சென்னையில் உள்ளவர்கள் எல்லாரும் குடும்பத்தைக் கலைத்துக் கொண்டு வெளியூருக்குப் போனார்கள். முக்கியமாகப் பெண்களை வெளியூருக்கு அனுப்பிவிட்டுச் சிலபேர்கள் மாத்திரம் சென்னையில் இருந்தார்கள். மருந்துகள் இங்கே சரியாகக் கிடைக்கவில்லை.

அந்தச் சமயத்தில் சென்னையில் இருந்து திருக்கழுக்குன்றத்தில், திருவாவடுதுறை மடத்துக்குச்சொந்தமானஒருவீட்டில்ஆசிரியப்பெருமான் போய்த் தங்கியிருக்கலாம் எனத் தீர்மானம் செய்தார்கள். அதன்படி ஏப்ரல் மாதம் 11-ம் தேதி பகல் 3 மணிக்குக் காரில் ஏறிப் புறப்பட்டார்கள்.

"பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு
மான்உன் நாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோர் இன்ப மேவருந்
துன்ப மேதுடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்துமேல்விளை
யாமல் என்வினை ஒத்தபின்
கணக்கிலாத் திருக்ககோலம் நீவந்து
காட்டினாய் கழுக் குன்றிலே" - திருவாசகம்

என்று சொல்லிக்கொண்டு புறப்பட்டார். புறப்படும்போது தம் வீட்டைப் பார்த்து, அந்த வீட்டுக்கு மீண்டும் வருவனோ என்று மிகவும் வருத்தத்தோடு கேட்டார்.

நான்கு மணிக்குத் திருக்கழுக்குன்றம் போய்ச் சேர்ந்தது வண்டி. அங்கேயுள்ள சந்நிதித் தெருவில் திருவாவடுதுறை மடம் இருந்தது. அங்கே தங்கினார்கள்.

தம்முடைய புத்தகங்களையும் ஏட்டுச்சுவடிகளையும் விட்டு விட்டு வந்துவிட்டதை ஆசிரியப்பெருமான் விரும்பவில்லை குழந்தைகளைப் பிரிந்த தாய்போல அவர் நெகிழ்ந்தார். அவரது வேதனையை உணர்ந்து ஏட்டுச்சுவடிகளையும், புத்தகங்களையும் சென்னையிலிருந்து திருக்கழுக் குன்றத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ந்தார்கள். பத்து மாட்டு வண்டிகளில் அந்தப் புத்தகங்கள் எல்லாம் வந்து சேர்ந்தன. அதைக் கண்ட பிறகுதான் ஆசிரியப்பெருமானுக்கு ஓரளவு ஆறுதல் உண்டாயிற்று.

### உடல்நலிவு

திருக்கழுக்குன்றம் வந்த பிறகு உடல் நலத்தில் கொஞ்சம் முன்னேற்றம் உண்டாயிற்று. மெல்ல எழுந்து உட்காரத் தொடங்கினார். தம்முடைய வரலாற்றை முற்றும் எழுதி முடித்துவிட வேண்டுமென்ற ஆசை இருந்தது. ஆகவே சென்னையில் வைத்திருந்த குறிப்புக்களை எல்லாம் எடுத்து வரும்படியாகத் தம் குமாரரை அனுப்பினார். அவரும் அப்படியே புறப் பட்டார். 'டாக்டரும் கவலை இல்லாமல் போய் வரலாம்; அப்படி ஒன்றும் அபாயம் இல்லை.' என்று சொன்னதால் கிளம்பிச் சென்னைக்குச் சென்றார்.

அப்போது ஆசிரியப்பெருமானுக்கு அருகில் அவருடைய கொள்ளுப் பேரன் சங்கரனும், ஆசிரியரிடம் பாடம் கேட்ட வேணுகோபாலனும் அல்லது வேறு ஒருவரும் இல்லை.

நான் என்னுடைய குடும்பத்தை மோசூரில் வைத்திருந்தேன் என் தந்தையாருக்கு உடம்பு சரியில்லை என்று கடிதம் வந்ததால் நான் மோசூருக்குப் போவதற்கு முன்பு திருக்கழுக்குன்றம் சென்றேன். ஆசிரியப் பெருமானைப் பார்த்து நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தேன்.

### 'கையைக் கொடு'

கம்பராமாயணத்தையும், தேவாரத்தையும் நல்ல முறையில் அச்சிட வேண்டுமென்ற ஆசை ஆசிரியருக்கு இருந்தது. "அந்த இரண்டையும் நல்ல முறையில் அச்சிட, 'நீ உடன் இருந்து உதவி செய்வாயா? கையைக் கொடு" என்றார். அந்தத் திருக்கரத்தைப் பரிசிக்கும் பேறு, அதுதான் கடைசியாக இருக்கும் என்று எனக்கு அப்போது தெரியவில்லை. அந்தக் திருக்கரத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டேன். தேவாரத்தையும், கம்பராமா யணத்தையும் நல்லமுறையில் வெளியிட வேண்டுமென்ற ஆவல் அவரிடம் எந்த அளவுக்கு இருந்தது என்பது எனக்கு நன்றாகத் தெரிந்தது. அவரிடம் விடை பெற்றுக்கொண்டு என் தந்தையாரைத் காண நான் மோசூர் சென்றேன்.

### என் தந்தையார் பிரிவு

மோசூருக்குப் போனபோது என் தந்தையார் மிகவும் அபாயகரமான நிலைமையில் இருந்தார். மறுநாள் இறந்துபோனார். அதனால் அங்கேயே தங்கிவிட்டேன். போனவுடன் என்னுடைய நிலைபற்றி ஆசிரியப் பெருமானுக்கு எழுதி இருந்தேன். உடல் ஜுரத்தோடு என் கடிதத்தைப் பார்த்துப் பார்த்து, "தனியாக அவன் என்ன செய்வானோ?" என்று வருந்தினார்களாம்.

### இறுதிக்காலம்

உடல் சுரம் அதிகமாகி வருவதைக் கண்டு, அவருடைய குமாரருக்குத் தந்தி கொடுத்தார்களாம். அவர் வருவதற்குள் ஆசிரியப்பெருமான் தம் வாழ்வை முடித்துக்கொண்டார். அவரது இறுதிக் காலத்தில் அவருடன் நாம் இருக்கவில்லையே என்ற வருத்தம் எனக்கும், அவருடைய குமாரருக்கும் இருந்தது.

### இரங்கற் செய்திகள்

ஆசிரியப்பெருமான் இறைவன் திருவடியை அடைந்த செய்தியை அறிந்து தமிழுலகமே மிக்க துயரத்தில் ஆழ்ந்தது. பலர் ஆசிரியப்பெருமானின்

இளவலுக்கும் குமாரருக்கும் இரங்கற் கடிதங்களையும் இரங்கற் பாடல் களையும் எழுதியனுப்பினார்கள். சபைகள் இரங்கல் தீர்மானத்தை நிறை வேற்றின. பத்திரிகைகள் ஆசிரியரின் மறைவைப் பற்றி வருந்தி எழுதின. அவ்வாறு வந்தவற்றில் சில வருமாறு.

திரு டி.கே.சிதம்பரநாத முதலியார்:- தமிழ் என்றால் தங்கள் தந்தையார், தங்கள் தந்தையார் என்றால் தமிழ் என்று சொல்லும்படி இருந்தது. அவர்களது தமிழ் ஈடுபாடு. தமிழின் உயர்வைப் பற்றியும் அதன் வளர்ச்சியைப் பற்றியும் சதா பாவனை செய்த வண்ணம் இருந்தார்கள். அவர்கள் வாழ்ந்த உலகம் தனியான உலகம் என்றால் மிகை அல்ல. அதுதானே புலமை? தமிழுக்குத் தொண்டு செய்யவே பிறந்தார்கள். அருமையான தொண்டுகளையும் செய்து முடித்தார்கள். அவர்கள் செய்தது தனிமையான தொண்டு, இனி யார் இந்த விதம் செய்யப் போகிறார்கள்.

ஐயரவர்கள் மறைந்த சமயத்தில் நான் உடன் இருக்க முடியாமற் போயிற்று என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளேன். என் தந்தையார் மோகூரில் காலமானார்கள். இரண்டு நாள் கிரியைகளை முடித்துக் கொண்டு எங்கள் ஊராகிய மோகனூர் சென்றேன். அங்கே தொடர்ந்து கிரியைகளைச் செய்து வந்தேன். அப்போது ஆசிரியப்பிரான் மறைந்த செய்தியை அறிவிக்கும் தந்தி வந்தது. நான் பதறிப் போனேன். துடிதுடித்தேன், புலம்பினேன். ஆசிரியப்பெருமான் குமாரருக்கு 30-4-1942 அன்று ஒரு கடிதம் எழுதினேன். அதில், 'இந்த சமயத்தில் அங்கே இல்லாத மகாபாவியாகிவிட்டேனே என்று அழுது புலம்புகிறேன். போன செவ்வாயன்று அவர்களிடம் விடை பெற்ற போது அது இறுதி விடையென்று நான் சிறிதும் அறிந்து கொள்ளவில்லையே! நேற்றுத் தந்தி கிடைத்தவுடன் புறப்பட்டு வராத நிலையில், சிறைப்பட்டவனைப் போல இருக்கிறேனே! ஐயோ! இப்படியும் ஒரு காலம் வந்ததே! எனக்குப் பிரதியட்ச தெய்வமாக இருந்த அவர்களை இனி எங்கே போய்த் தேடிக் காண்பேன்? திருக்கழுக்குன்றத்துக்குப் புறப்படுகையில் "கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்று சொல்லிக் கண்ணீர் விட்டார்களே! அப்பொழுதே இறைவன் திருவருட் குறிப்பை அவர்கள் தெரிந்து கொண்டார்களோ? 3-5-1942 அன்றும் ஒரு கடிதம் எழுதினேன்; "முதல் வாரம் செவ்வாய்க்கிழமை விடை பெற்ற போது அடுத்த சனிக்கிழமை வருவதாகச் சொல்லி வந்தேன். என் தலை விதி அதனை நிறைவேற்ற முடியாமற் செய்துவிட்டது. இங்கே நாளைத் தசாஸ்து. வியாழக்கிழமை சுபஸ்வீகரணம். அன்று மாலையே புறப்பட்டுத் திருக்கழுக்குன்றம் வரலாமென்றிருக்கிறேன். 'இரண்டு கன்றினுக் கிரங்கு மோர் ஆவென' இருந்து மறுகிக் கொண்டிருக்கிறேன். என் உள்ளம் முழுவதும் அங்கேதான் இருக்கிறது." மறுபடியும் 6-5-42 அன்று மற்றொரு

கடிதம் எழுதினேன். "என் தந்தையாரின் மரணசமயத்தில் அருகில் இருக்கும் படி கூட்டி வைத்த தெய்வம் ஸ்ரீமத் ஐயரவர்களுக்கு அருகில் இராமல் விலக்கி வைத்துவிட்டது. இதைக் காட்டிலும் இழவூழ் வேறு இருக்கப் போவதில்லை, வெள்ளிக்கிழமை புறப்பட்டுச் சனிக்கிழமையன்று அங்கே வந்துசேர எண்ணியிருக்கிறேன்" என்று அதில் எழுதினேன்.

யாழ்ப்பாணத்தில் இருந்த சு.நவநீதகிருஷ்ண பாரதி 28 இரங்கற் பாடல்களை எழுதி அனுப்பினார். அவற்றிற் சில:

"சந்தமறைக் குலக்கொழுந்தே, நூலுழவ,
கலையரசே, சாமி நாதா,
மைந்தர்களை இனத்தவரை மனைமுதலாம்
பலபொருளை மற்றும் உள்ள
சிந்தைநிரம் பண்பினரைத் தீர்த்தத்தை
ஆலயத்தைத் தீர்ந்தா யேனும்
நந்தலிலாத் தமிழேட்டுச் சுவடிகளை
நயவாது நடந்த தென்னே!"

"காணாத நூல்களைக் கண்டெடுக்க
வல்லார்யார்? கண்டெ டுத்தும்
மாணாத பாடமறிந் தொதுக்கவல்லார்
இனியாவர்? மற்றந் நூலின்
கோணாத கருத்தையறிந் துரைஇயற்றி
எங்களுக்கு கொடுப்பார் யாவர்?
வாணாளைத் தமிழ்க்களித்து வருசாமி
நாதஎங்கு மறைந்தாய் நீயே?"

'இந்தியன் சோஷல் ரிஃபார்மர்' (*Indian Social Reformer*) என்ற ஆங்கிலப் பத்திரிகையில் சிதம்பரத்தில் இருந்த எஸ்.ஆர்.பாலசுப்பிரமணிய ஐயர் ஒரு நீண்ட கட்டுரையை எழுதியிருந்தார். அதில் ஆசிரியப்பிரான் வரலாறு முழுவதுமே இருந்தது. அதில், "டாக்டர் சாமிநாதையருடைய மறைவு ஒரு காலக் கட்டத்தின் முடிவைத் தெரிவிக்கிறது. தமிழ் இலக்கிய வரலாற்றில் அவருடைய காலத்தை, 'சாமிநாதையர் காலம்' என்று நன்கு எடுத்துச் சொல்லலாம்... அவருக்குரிய பெருமையுள்ளபடி நினைவுச் சின்னத்தை எழுப்பினாலும் எழுப்பாவிட்டாலும் தமிழ் இருக்கும் வரையில் அவருடைய பெயர் விளங்கும்" என்று எழுதினார். "பொதிய மலைப் பிறந்த தமிழ் வாழ்வறியும் காலமெலாம் புலவோர் வாயில், துதியறிவாய் அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய் இறப்பின்றித் துலங்கு வாயே" என்று பாரதியார் பாடியது இங்கே நினைவுக்கு வருகிறது.

# 40. பண்பு நலங்கள்

நெடிய உருவம், சாந்தமான பார்வை, சிறிய தொந்தி, மெத்தென்ற நடை, இன்சொல், எப்போதும் தமிழைப் பற்றிய பேச்சு, தூய பஞ்சகச்ச வேட்டி-இதுதான் ஆசிரியப்பெருமான் வடிவம். யார் பார்த்தாலும் இவர் ஒரு பெரியவர் என்று எண்ணும் வகையில் அவர் தோற்றம் இருக்கும்.

சங்க நூல்கள் முதல் சிறிய பதிகம் வரையில் அவர் தமிழ்த் தாயின் அணிகலமாக எண்ணி ஆராய்ந்தார். எல்லாவற்றிலும் முழுக்கவனத்தைச் செலுத்தினார். உணவில் சோறு, குழம்பு, காய்கறி, கூட்டு, ரசம், பட்சணங்கள் என்று பலவகை உள்ளன என்றாலும் சோறே தலைமையான உணவு. அதற்கு வியஞ்சானமாகவே மற்றவை உதவுகின்றன. அவ்வாறே சங்க நூல்கள், தேவாரம், கம்பராமாயணம், என்பவற்றை ஆழ்ந்து பயில்வார். ஒரு பதிகமானாலும் அதில் உள்ள சில நயங்களை உணர்ந்து இன்புறுவார். சங்கநூல்களில் முழுகித் திளைத்த அவருடைய் உள்ளம் திரிபு யமக அந்தாதிகளையும் ஆராய்வதில் தளர்ச்சி அடைவதில்லை. தமிழ் என்று எதுவாக இருந்தாலும் அதை ஆராயும் ஆர்வம் அவருக்கு என்றும் தணிந்ததில்லை.

அவருக்குத் தமிழ் ஒன்றே தெரியும் என்றாலும் வடமொழி, ஆங்கிலம், தெலுங்கு முதலிய மொழிகளிலுள்ள விஷயங்களை வல்லவர்வாய்க் கேட்டு அறிவதில் அவர் ஒரு சிறந்த மாணாக்கராகவே இருந்தார். பெரும் பேராசிரியர் என்னும் பொருளையுடைய மகாமகோபாத்தியாயப் பட்டம் பெற்ற காலத்திலும் அவர் சிறந்த மாணாக்கராவும் இருந்தார். தாம் அறியாத கருத்தை ஒரு சிறுவன் சொன்னாலும் ஏற்றுக் கொண்டு பாராட்டுவார். அதில் பயனுள்ளவற்றைத் தம் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்வார். "காக்கை வாயினும் சொற் கொள்வரால்" என்பது அவருக்கு முற்றும் பொருத்தமானது.

ஒருவரை அணுகி அவருக்குத் தெரிந்தவற்றை உசாவி அறியும்போது அவற்றைப் பொறுமையோடு கேட்பார். சம்பந்தம் இல்லாத பல செய்தி களை அவர் கூறினாலும் அவற்றைப் புறக்கணிக்காமல் குறித்துக் கொள்வார். அவை அத்தனையும் பயன்படும் என்று சொல்ல முடியாவிட்டாலும்,

ஏதேனும் ஒன்று பயனுள்ளதாக இருந்தால் போதும் என்பது அவர் எண்ணம். அதனால் பயன் இல்லாத பலவற்றை அவர் சொன்னாலும் அவற்றை அலட்சியம் செய்யாமல் கேட்பார். அலட்சியம் செய்தால் அவருடைய ஊக்கம் குறைந்து விடுமென்றும் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லாமல் இருந்து விடக்கூடும் என்றும் கருதுவார்.

அவருடைய உழைப்பையும் பொறுமையையும் அளவிட்டுச் சொல்ல முடியாது. ஒரு செய்யுளுக்கு எளிதில் பொருள் விளங்காவிட்டால் அதனை அறியும் வரையில் திருப்பித் திருப்பிப் படித்துச் சிந்திப்பார். ஓர் அரிய கருத்துப் புலப்பட்டுவிட்டால் தம்முடைய தோளைத் தாமே தட்டிக் கொள்ளவார்.

அவருடைய பேருழைப்புக்கு அடுத்தபடி அவருடைய நன்றியறிவைச் சொல்ல வேண்டும். ஒருவர் சிறிய உபகாரம் செய்தாலும் அதை மறவாமல் பாராட்டுவர். அவர் எழுதிய 'என் சரித்திரத்'தில் இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றைக் காணலாம்.

அவருடைய ஆராய்ச்சிக்கு உட்பட்டவை யாவும் மிகச் சிறந்த நூல் களாக இருக்கும் என்று சொல்வதற்கில்லை; என்றாலும் தமிழ் என்பதற்காக அவற்றிலும் தம் உள்ளத்தைச் செலுத்தி ஆராய்வார். அருமையான சங்க நூல்களை ஆராய்ந்து பதிப்பித்த அவர் பல சிறிய பிரபந்தங்களையும் வெளியிட்டிருக்கிறார். அவற்றிலும் குறிப்புரைகள், பாடபேதங்கள், ஆராய்ச்சிப் பண்புடைய முகவுரை, அகராதி யாவும் இருக்கும். அவருடைய பதிப்புக் களில் உள்ள அகராதிகளைத் தொகுத்தாலே பேரகராதியாக விளங்கும்.

முகவுரையில் நூலின் இயல்பு, அதில் உள்ள சிறப்புக்கள், அதன் மூலச்சுவடி கிடைத்த வரலாறு, அதை ஆராயும்போதும் பதிப்பிக்கும் போதும் உடனிருந்து துணை செய்தவர்களின் பெயர்கள் இவற்றை எடுத்துக் காட்டுவார். அவர்களை மனமாரப் புகழ்வார். 'இளமை முதல் தமிழ்த் தொண்டிலே பொழுதுபோக்கி வரும் எனக்குச் சில வருஷங்களாக உள்ள முதுமைத் தளர்ச்சியால் நான் எண்ணியவற்றை எண்ணியபடியே என்னால் செய்ய முடியவில்லை. ஆயினும், சுவையுள்ள தமிழ் நூல்கள் வெளிவர வேண்டும் என்னும் ஆவல் மட்டும் இருந்து வருகிறது. இந்நிலைமையில் இப்பதிப்பு விஷயத்தில் என் கருத்தையும் குறிப்பையும் தெளிந்து உதவி புரிந்தவர் மேற்கூறிய ஜகந்நாதையர். அவருடைய பேருழைப்பே இப்பதிப்பிலுள்ள ஆராய்ச்சியும் குறிப்புரையும் இம்முறையில் அமைந் திருப்பதற்குக் காரணம் என்பதை இதன் மூலமாகத் தமிழன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்' என்று 'குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள்' என்னும் நூலின் முகவுரையில் எளி யேனைப்பற்றி எழுதியிருக்கிறார். "ஈதல்

அரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல், ஓஒ பெரிது கொடிதம்மா" என்று குமரகுருபரர் சொல்வார். அதனைத் தம் எழுத்திலும் சொல்லிலும் லோபமின்றி அவர் வெளிப்படுத்தும் இயல்பை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இராமபிரான் அணை கட்டும்போது ஓர் அணில் தன் மேலுள்ள மணலை அந்த அணையில் உதறியதை அப்பெருமான் பாராட்டி அதைத் தடவிக் கொடுத்தாரென்றும், அதனால் அணிலின் முதுகில் கோடுகள் உள்ளன என்றும் சொல்வார்கள். இது புராணக்கதை. ஆனால் ஆசிரியப்பிரான் பிரத்தியட்சமாக இத்தகைய செயலைச் செய்தது எத்தனை பெருந் தன்மை! பெரிய மலை ஒரு சிறிய மணல் துகளைப் பாராட்டியது போன்ற செயல் அல்லவா இது?

தமிழை அரைகுறையாகப் படித்தவர் தம்பால் வந்தால் அவரோடு பேசி, அவருடைய குறைபாடுகளை உணர்ந்தாலும் அவற்றைச் சுட்டிக் காட்டிக் கண்டிக்கமாட்டார். "உனக்குள்ள தமிழன்பு சிறந்தது. ஓரளவு படித்திருக்கிறாய். கற்றவர்களை அணுகி இன்னும் நன்றாகப் படித்தால் நீ பெரிய புலவன் ஆவாய்" என்று ஊக்கம் அளிப்பார். இன்ன முறையில் கற்க வேண்டும் என்றும் சொல்வார்.

ஆனால் யாரேனும் தாம் மிகப் படித்தவராக எண்ணிக் கொண்டு வந்தாலும் அவர்களைச் சில கேள்விகள் கேட்டு மடக்குவார். அவர் தம் கர்வம் அடங்கிச் செல்வார்.

பழைய நூல் எதுவானாலும் அதன்பால் மதிப்பு வைத்து வெளி யிடுவார். அதில் பிழையிருந்தாலும் பொருட்படுத்தாமல் வெளியிடுவார். பழைய தமிழ் நூல்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதே அவருடைய நோக்கம். அவர் பதிப்பித்த 'சிவசிவ வெண்பா' என்பதை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். அந்த நூலின் வெண்பாக்கள் சிலவற்றில் வெண்டளை தவறியிருக்கும் என்றாலும் அது பழைய நூல் என்பதனால் அதனை வெளியிட்டார். அதன் முகவுரையில் அந்தப் பிழையை எடுத்துக் காட்டினார்.

எந்த நூலானாலும் அவர் கைபட்டால் அது தனி மெருகுடன் விளங்கும். 'அழகர் கிள்ளைவிடு தூது' என்ற நூலை முன்பே ஒருவர் பதிப்பித்திருந்தார். பெருக்கல் வாய்பாடு போல அதன் தோற்றம் இருந்தது. ஆசிரியப்பிரான் அதைப் பதிப்பித்திருக்கிறார். அதையும் பிறர் பதிப்பித்த நூலையும் பார்க்கும்போது அஜகஜாந்தரமாகத் தோன்றும். மற்ற நூல்களின் அமைப்பைப் போலவே குறிப்புரை யையும் விரிவான முன்னுரையையும் இணைத்து அதை வெளியிட்டார். 'மகரநெடுங் குழைக்காதர் பாமாலை'

என்பது ஒரு நூல். அதுவும் முன்பே ஒருவரால் பதிப்பிக்கப்பெற்றது. அதை ஆசிரியப்பிரான் பதிப்பித்தார். வழக்கம்போலக் குறிப்புரையையும், அந்த நூல் தோன்றிய சுவையான வரலாற்றையும் அந்தப் பதிப்பில் காணலாம். அவர் கைபட்ட எதுவும் தனிச் சிறப்புடன் விளங்கும் என்பதை அவர் வெளியிட்ட சிறு பிரபந்தங்களைக் கண்டு அறியலாம்.

'இவ்வளவு காரியம் செய்து விட்டோம்!' என்ற திருப்தி அவருக்கு என்றுமே இருந்ததில்லை. "எல்லா நூல்களையும் பதிப்பிக்கும் பேரார்வம் இருந்தது. தமிழ் மக்கள் அவர் கைப்பட எல்லா நூல்களும் வெளிவர வேண்டுமென்று விரும்பினார்கள். 88 ஆண்டு வாழ்ந்த அவர் இருபத் தைந்தாவது பிராயம் தொடங்கி இடை விடாமல் உழைத்தும் ஆராய்ந்தும் செய்த அற்புதத் திருத்தொண்டு, "ஒருவரா இவ்வளவையும் செய்தார்?" என்று வியப்பில் ஆழ்த்தும். பிற்காலத்தில் இதை நம்பாமல், 'யார் யாரோ செய்தவற்றை அவர் பேரால் வெளியிட்டிருக்கிறார்கள்' என்று சொல்லவும் கூடும். "நாம் இதுவரையில் உண்ட உணவை எண்ணிப் பாருங்கள். ஓர் அன்ன மலையாகவே அவை இருக்கும். எதையும் இடைவிடாமல் தளர்ச்சியின்றிச் செய்தால் மலைகளைப் படைப்பது போன்ற செயல்களைச் செய்ய முடியும்" என்று அவர் சொல்வார்.

அடிக்கடி அவரைப் பல ஊர்களிலுள்ள சபையினர்கள் தலைமை தாங்கிச் சிறப்பிக்க அழைப்பார்கள். சிலவற்றை ஒப்புக்கொண்டு போய்ச் சிறப்பித்து வருவார். அழைக்கும் இடங்களுக்கெல்லாம் போனால் தம் தமிழ்ப்பணி தடைப்படும் என்ற எண்ணமே அதற்குக் காரணம்.

அவிநாசியில் இருந்த 'கருணாம்பிகை சபை' என்ற சபைக்கு ஒரு முறை சென்று தலைமை தாங்கினார். அடுத்த ஆண்டும் வந்து சிறப்பிக்க வேண்டுமென்று சபையினர் வற்புறுத்தினர். அதனால் இரண்டாவது முறையும் அங்கே சென்று சிறப்பித்தார். அந்த ஊரில் ஒரு பத்திரிகையை நடத்திய ஒருவர்பொறாமைமிகுதியினால்,"இவரைத்தவிரவேறுபுலவர்கள் தமிழ்நாட்டில் இல்லையா? இவரையே ஏன் அழைக்கவேண்டும்?" என்று தம் பத்திரிகையில் எழுதினார். அதைக் கண்டு ஆசிரியர் வருந்தினார். சில நாட்கள் கழித்து அவிநாசியிலிருந்து ஆசிரியருக்கு ஒரு கடிதம் வந்தது. "தங்களைக் குறை கூறி எழுதியவர் தம் கை புழுத்து நோய்வாய்ப் பட்டு இறந்து போனார்" என்று ஒருவர் எழுதியிருந்தார். அதைக் கண்டு ஆசிரியர். "குறை கூறுவது சிலர் இயல்பு. அதனால் அவரிடம் நல்ல குணங்கள் இரா என்று சொல்ல முடியாது. பாவம்! அவர் இறந்தது பெரிய துர்ப்பாக்கியம்" என்று வருந்தினார். தம்மை அவமதிப்போரையும் தமக்குத் தீங்கு இழைக்க முயல்பவர்களையும் அவர் வெறுப்பதில்லை. "என்னுடைய வினைப்பயனே

இப்படி முடிந்தது'' என்று வருந்துவது அவர் வழக்கம் பொறாமையினால் யாரேனும் எழுதினால் அதைப் பொருட்படுத்துவது இல்லை. அதற்கு ஓர் உதாரணம் என் நினைவுக்கு வருகிறது.

ஒருமுறை ஒருவர் ஆசிரியரைக் குறை கூறி எழுதியிருந்தார். அவர் கூறியதற்கு ஒரு பதில் எழுதி அதைக் கும்பகோணம் கல்லூரியில் இருந்த சாது சேஷையர் என்ற பேராசிரியரிடம் காட்டி னார். அவர் அதை உடனே கிழித்துப் போட்டுவிட்டு, "உலகத்தில் தாம் நல்ல காரியங்களைச் செய்ய முடியாவிட்டாலும்/நல்லது செய்தவர்களைக் குறை கூறுவோர் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பதில் எழுதுவதனால் தமிழ்த் தொண்டுக்காக நீங்கள் செலவிடும் காலம் வீணாகும். ஆகையால் இவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் உங்கள் வேலையைச் செய்து வரவேண்டும்'' என்றார். அதைப் பொன்னேபோல் போற்றித் தம்மைக் குறை கூறும் கண்டனங் களுக்குப் பதில் எழுதுவதைச் செய்யாமல் தம் பணியைத் தொடர்ந்து நடத்தினார். பல சமயங்களில் அவ்வாறு குறை கூறியவர்கள் பிறகு மனம் திருந்தித் தாம் செய்ததற்கு மனம் வருந்தி ஆசிரியரிடம் மன்னிப்புக் கேட்டதும் உண்டு.

ஆசிரியருக்கு உளுந்து சம்பந்தமான பண்டங்களில் விருப்பம் அதிகம். திருப்பதித் திருமால் வடை கடினமாக இருக்கும். அதைக் கடித்து தின்று சுவைப்பார். மிளகு வடையில் அவருக்கு விருப்பம் உண்டு. இவ்வாறு கடினமான பண்டங்களைக் கடித்துத் தின்பதனால் அவருடைய பற்கள் இறுதி வரையில் உறுதியாக இருந்தன. அவருடைய பற்களிலும் உறுதியிருக்கும்; சொற்களிலும் உறுதியிருக்கும்;

தம்முடைய நூல்களுக்குச் சிறப்புரை தரவேண்டுமென்றும், முகவுரை தரவேண்டும் என்றும் பலர் எழுதுவார்கள். அப்படி வரும் எல்லா நூல் களும் சிறந்தனவாக இருக்கும் என்று சொல்ல முடியாது. அத்தகைய நூல் களுக்கும் தம் கருத்தை எழுதுவார். 'இந்த நூலை இயற்றியவர் மிகவும் ஆர்வத்துடன் எழுதியிருக்கிறார். அது போற்றுவதற்குரியது. இவர் நினைத்த பயன் கிடைக்க வேண்டும். இதைவிடச் சிறந்த நூல்களை இவர் எழுத வேண்டுமென்று வாழ்த்துகிறேன்' என்று குறிப்பிடுவார். நூலை எழுதியவர் உவகையடைவார். புத்தகம் சிறப்புடையது என்று எழுதவில்லையே என்ற எண்ணமே அவருக்கு உண்டாகாது.

மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லும்போது அவர் படிக்கும் முறை யிலிருந்தே அவர்கள் தகுதியை அறிந்து சொல்லுவார். சிலருக்கு விளக்க மாகச் சொல்வார்; இடையிடையே தம் அநுபவங்களை எடுத்துரைப்பார்.

சிறிய சிறிய கதைகளைச் சொல்லி இன்பமூட்டு வார். அவற்றை ஊறுகாய்க் கதைகள் என்பார். உணவை உண்பதற்கு ஊறுகாய் பயன்படுவது போல அவை பயன்படும். பெரும்பாலும் நகைச்சுவை நிரம்பியதாக இருக்கும். ஓர் உதாரணம் சொல்கிறேன்.

"நான் வீதி வழியே நடந்து சென்று கொண்டிருந்தேன் அப்போது ஒருவர் காரில் வந்து கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் நிறுத்தினார். என்னை ஏற்றிக் கொண்டு நான் போக வேண்டிய இடத்திற்குக் கொண்டு



உ.வே.சாமிநாதையர்



ஐயரவர்கள் பயன்படுத்திய பொருட்கள்

போய் விடுவார் என்று நினைத்தேன். அவர், 'நீங்களா? இன்னும் இருக் கிறீர்களா? நமஸ்காரம்' என்று சொல்லிக் காரை ஓட்டிக் கொண்டு போய்விட்டார். இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளைத் தம் அநுபவத்தில் உணர்ந்து அவற்றை எடுத்துக் கூறி நகைப்பார்.

தாம் கண்டறிந்த பெரியவர்களுடைய வரலாற்றை நினைவில் வைத்துக் கொண்டு, பாடம் சொல்லும்போது அவர்களைப் பற்றிச் சொல்வார். தேதியூர் மகாதேவசிவன் என்பவர் பல தலங்களுக்கும் அவற்றையெல்லாம் வாங்கி வைத்து வேண்டும் போது உரியவற்றைப் பயன்படுத்திக் கொண்டார். "சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும்" என்றபடி அவர் எந்தச் சிறிய செய்தியையும் புறக்கணிக்காமல் குறித்து வைத்துக் கொள்வார்.

முத்துப்பிள்ளையென்ற ஒருவர் சலவையாளர் வகுப்பில் தோன்றினவர். அவரை வண்ணாரப் பரதேசி என்றும் சொல்வார்கள் ஒருமுறை ஆசிரியர் திருவிடைமருதூரில் அவரைச் சந்தித்தார். "ஐயா! உங்களைப் பார்க்க வேண்டும் என்று பல நாளாக ஆவல் கொண்டிருக்கிறேன். நீங்கள் பல தலங்களுக்குச் சென்று அந்தத் தலங்களின் சிறப்பை அறிந்தவர்கள் என்று கேள்வியுற்றேன். தயை செய்து அவற்றைச் சொல்ல வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார் அவரும் சில செய்திகளைச் சொல்ல அவற்றை யெல்லாம் குறித்துக்கொண்டார் இப்படித் தலங்களைப் பற்றிச் சேர்த்த குறிப்புக்களுக்கு அளவில்லை, ஒவ்வொரு நாளும் காலையில் வேலையைத் தொடங்கும் போது தேவாரத்தில் ஒரு பதிகமாவது பாராயணம் செய்வார்; அல்லது தம் மாணாக்கர்களில் ஒருவரைப் படிக்கக் கேட்டு இன்புறுவார். அப்போது அவற்றிலுள்ள நயங்களைச் சொல்வார்.

தாம் படிக்கும் நூலில் அங்கங்கே அடையாளம் இட்டிருப்பார். தம் மாணாக்கர்களையும் அவ்வாறு செய்யும்படி சொல்வார். ஒரு பாட்டின் அடியின் ஏதேனும் சிறப்பு இருந்தால் அதன்முன் ஒரு புள்ளியிட்டிருப்பார். எத்தனை சிறப்புக்கள் உண்டோ அவ்வளவு புள்ளிகள் இருக்கும். சந்தேகமான இடங்களுக்கு முன் சிறுகோடு (-) இட்டிருப்பார். பாடம் செய்வதற்குரிய அரிய பாடல்களானால் அவற்றிற்கு முன் ஒரு சுழி (0) இட்டு வைப்பார். அவர் கைப்பட்ட புத்தகத்திலும் அவருடைய குறியீடுகள் இல்லாமல் இரா. போர் முனையில் சென்று போரிட்ட வீரனுக்கு மார்பில் புண்கள் எவ்வாறு வீரத்தைக் காட்டும் அடையாளங்களாக இருக்குமோ, அவ்வாறு அவர் படித்த நூல்களில் குறியீடுகள் அமைந்திருக்கும்.

அவருடைய பண்பு நலங்கள் யாவற்றையும் சொல்லிக் கொண்டே போகலாம். ஆளுமை (*Personality*) என்று இக்காலத்தில் சொல்கிறார்களே, அதை அவரைக் கண்ட மாத்திரத்தில் உணர்ந்து கொள்ளலாம்.

அவருடைய திருவவதாரத்தில் சங்க நூல்களும் பிறவும் இன்று அணி விளக்குப் போலத் திகழ்கின்றன. அவர் காலத்துக்கு முன் பல புலவர்கள் இருந்தாலும், அவருக்குக் கிடைக்காத ஏட்டுச்சுவடிகள் இருந்தாலும் அவை வெளியாகவில்லை. அவற்றைத் தேடித் துருவி ஆராய்ந்து கண்ணாடி போலப் பதிப்பிக்கும் வாய்ப்பு அவருக்குத் தான் கிடைத்தது. இறைவன் திருவருளும் அவருடைய சிறந்த அறிவாற்றலும், பொறுமையும் உழைப்புமே இதற்குக் காரணம். இனி யார் அப்படிப் பிறக்கப் போகிறார்கள்! வாராது வந்த மாமணியாக அவர் திகழ்ந்தார். தமிழுலகம் அவரை என்றும் மறவாது என்பது திண்ணம்.

அவர் தம் புத்தகப் பதிப்புக்களின் மூலம் வாழவைத்த புலவர்கள் அமரலோகத்திலிருந்து அவரை வாழ்த்திக் கொண்டிருப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. அவர் திருநாமம் வாழ்க!

"நவையேறும் நெஞ்சினேன் நற்றமிழைக் கற்றே
அவையேற வைத்தருளும் அண்ணல் - சுவைஏறும்
செந்தமிழ்ப் பன்னூல் விளக்கும் சீர்ச்சாமி நாதகுரு
அந்துணர்த்தாள் சென்னிக் கணி."

"சங்கநூல் எங்கே? தமிழ்ப்பழமைதான் எங்கே?
நங்கள்பிரா னாம்சாமி நாதகுரு - இங்கே
பிறந்திலனேல் எத்தனையோ பீடுடைய நூல்கள்
இறந்திருக்கும் அல்லவோ இன்று."

## சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதி

# டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலைய
## அண்மை வெளியீடுகள்

தொலைபேசி: 044-24911697 மின்னஞ்சல்: druvslibrary@gmail.com

| | விலை |
|---|---|
| நற்றிணை மூலமும் உரையும் | 500.00 |
| குறுந்தொகை | 600.00 |
| ஐங்குறுநூறு | 200.00 |
| பதிற்றுப்பத்து | 240.00 |
| பரிபாடல் | 200.00 |
| புறநானூறு | 500.00 |
| பத்துப்பாட்டு | 600.00 |
| சிலப்பதிகாரம் | 500.00 |
| மணிமேகலை | 320.00 |
| புறப்பொருள் வெண்பாமாலை | 150.00 |
| ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் சரித்திரம் | 400.00 |
| என் சரித்திரம் (படங்களுடன்) | 500.00 |
| உ.வே.சாமிநாதையர் கடிதக்கருவூலம் | 600.00 |
| நினைவு மஞ்சரி | 200.00 |
| சங்கீத மும்மணிகள் | 180.00 |
| சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும் | 120.00 |
| வித்துவான் தியாகராச செட்டியார் | 100.00 |
| சங்கீத வித்துவான்கள் சரித்திரம் | 80.00 |
| திருத்தலங்கள் வரலாறு | 400.00 |
| தூது நூல்கள் - 7 | 175.00 |
| திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் | 60.00 |
| திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ் | 80.00 |
| திருக்குடந்தை மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் | 60.00 |
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | 100.00 |
| உறையூர் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் | 100.00 |
| பழனிப் பிள்ளைத்தமிழ் | 30.00 |
| மண்ணிப்படிக்கரைப் புராணம் | 80.00 |
| வில்லைப்புராணம் | 80.00 |
| வீரவனப் புராணம் | 45.00 |
| தனியூர்ப்புராணம் | 45.00 |
| தணிகாசலப்புராணம் | 100.00 |
| விளத்தொட்டிப்புராணம் | 60.00 |
| திருவாரூர்ப் புராணம் | 250.00 |
| ஆற்றூர்ப் புராணம் | 100.00 |
| திருநாகைக்காரோணப் புராணம் | 600.00 |
| நூற்றெட்டுத் திருப்பதி வண்ணவிருத்தம் | 120.00 |
| அபிநயதர்ப்பணம் | 100.00 |
| உ.வே.சாமிநாதையர் அணிந்துரைகள்-சிறப்புப்பாயிரங்கள் | 180.00 |
| *என் ஆசிரியப்பிரான்* | *200.00* |